# திருபெருமக்கள்






பெருஞ்சொல் விளக்கனார்
முதுபெரும் புலவர்
திரு. அ.மு. சரவண முதலியார்






...சக மன்றம்
...திருச்சி மாவட்டம்.

மணிவாசக மன்ற வெளியீடு : 'அ'




உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# இரு பெருமக்கள்.

*(ஓர் ஆராய்ச்சி நூல்)*

திருசிரபுரம்
'பெருஞ்சொல் விளக்கனர்'
'முதுபெரும்புலவர்'

**உயர்திரு. அ. மு. சரவண முதலியார் அவர்கள்**

*எழுதியது.*

**மணிவாசக மன்றம், அரியலூர்.**

*கீலக ஆனி-ஆவணி*

**1968**



உ

## ஸ்ரீ திருஞானசம்பந்தசுவாமிகள் புராண சாரம்

---

1. காழிநகர்ச் சிவபாத விதயர்தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதியூட்டு
மேழிசையி னமுதுண்டு தாளம்வாங்கி
யிலங்கியநித் திலச்சிவிகை யிசையவேறி
வாழுமுய லகனகற்றிப் பந்தரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருகற்றீர்த்து
வீழிநகர்க்காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித்தாரே.

2. ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன்னேற்றி
யாற்றிலிடு மேடெதிர்போ யணையவேற்றி
யோரமண ரொழியாமே கழுவிலேற்றி
யோதுதிருப் பதிகத்தா லோடமேற்றிக்
காருதவு மிடிபுத்தன் தலையிலேற்றிக்
காயாத பனையின்முது கனிகளேற்றி
யீரமிலா வங்கமுயி ரெய்தவேற்றி
யிலங்குபெரு மணத்தரனை யெய்தினரே.

(திருத்தொண்டர் புராண சாரம்)



உ

## ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் புராண சாரம்

1. போற்றுதிரு வாமூரில் வேளாண்டொன்மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழனுர்பான்
மாற்றருமன் பினிற்றிலக வதியாமாது
வந்துதித்த பின்புமரு ணீக்கியாருந்
தோற்றியமண் சமயமுறு துயரநீங்கத்
துணைவரரு டரவந்த சூலேநோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத்திரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில்வந்தார்.

2. வந்துதமக் கையரருளா னீறுசாத்தி
வண்டமிழா னேய்தீர்ந்து வாக்கின்மன்னுய்
வெந்தபொடி விடம்வேழம் வேலேநீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச்சாத்தி
யந்தமிலப் பூதிமக னரவுமாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்புநீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலேகண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினுரே.

(திருத்தொண்டர் புராண சாரம்)

# மணிவாசக மன்றத்தினைத் தோற்றுவித்துப் போற்றிப் பாதுகாத்து வளர்த்துவந்த
# இரு பெருமக்கள்



'பெருஞ்சொல்விளக்கனார்'
'முதுபெரும்புலவர்'
திரு அ. மு. சரவண முதலியார் அவர்கள்

தோற்றம்: — மறைவு:
1887 — 1959



வித்துவான்
திரு க. முருகேச முதலியார் அவர்கள்

தோற்றம்: — மறைவு:
1905 — 1966

# இரு பெருமக்கள்

ஆகிய இந்நூல்

மணிவாசக மன்றத்தினைத்

தமது கண்களாகவும் உயிரும், உடலுமாகவும்

பாதுகாத்துவந்த

இருபெருமக்கள்

'பெருஞ்சொல் விளக்கனுர்' 'முதுபெரும் புலவர்'

திரு அ. மு சரவண முதலியார் அவர்கள்

திரு க. முருகேச முதலியார் அவர்கள்

திருமுன்

அவர்கள்பால் மன்றத்தினர் காட்டும் அன்பினுக்கு

அடையாளமாக

சமர்பித்துக்கொள்ளப்படுகிறது.

அரியலூர்.
9—6—1968

இங்ஙனம்,

மணிவாசக மன்றத்தினர்.

# பொருள் அடக்கம்

# முன்னுரை.

உ

திருவருள் துணை.

---

திருச்சிற்றம்பலம்.

*உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்*

செந்தமிழும் சிவநெறியும் செழித்தோங்கும் இத்தீந்தமிழ் நாட்டுச் சிறப்புக்கள் பலவற்றுள் தன்னிகரில்லாத் தனிச்சிறப்புடைய பண்டை இலக்கியங்களைப் பெற்றுள்ளதும் ஒன்றாகும். அவ்விலக்கியங்களை முற்கால இலக்கியம் இடைக்கால இலக்கியம் பிற்கால இலக்கியம் எனப்பிரிப்பர். முற்கால இலக்கியமாகிய சங்க இலக்கியங்கள் என்பன, பாட்டும் தொகையும் என இரு பிரிவின. அவை யனைத்தும், பல காலங்களில் பல புலவர்களால் அவ்வப்பொழுது பாடிய பாட்டுக்களின் தொகையாகும். இடைக்கால இலக்கியங்களில் சிலப்பதிகாரம் சங்க காலத்தை யடுத்து எழுந்த தனிப்பெருந் தமிழ்நாட்டுக் காப்பியமாகும். ஆயின் அஃது உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல் என்னும் சுவை மிக்கதாய் இல்லறத்தில் நிகழ்ந்த இடர்ப்பாடுகளையும், பிற நிகழ்ச்சிகளையும் பின்னணியாகக் கொண்டு புறச்சமயச் சார்புடையதாய் அமைந்தது. ஆயின் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமோ எனின் தன்னிகரில்லாத் தனிச்சிறப்புடைய தமிழ் நாட்டுத்தனி வரலாற்று நூலாய், வாழ்வில் வாழ்வின் வெற்றி கண்ட பல மெய்யடியார்களின் வரலாற்றினை, வரலாற்றுக்கண் கொண்டு தீட்டிய பண்டைய பலசான்றுகளோடு கூடிய ஒப்பற்ற ஒரு பெருங் காப்பியமாய் விளங்குவது.

**அந்நூலுள் :—**

தமிழர்தம் சமயநெறி இரண்டு பிரிவினது. ஒன்று அறிவு நெறி மற்றது அன்பு நெறி. இதனையே வடமொழியினர் ஞான மார்க்கம், பக்திமார்க்கம் என்பர். இவ்விரண்டு நெறிகளையும்

ஒருசேரப்பிணைத்துத் திருமூலர் சன்மார்க்கம் எனக்காட்டுவர். இறைவனைச்சிவனெனத்தேறி, சிவன் அன்புவடிவினன் அறிவு வடிவினன் எனக்காட்டியதும் அவ்வாறே. திருவள்ளுவர் வாலறிவன் என்றதூஉங்காண்க. இவ்வுண்மை கண்டநம் சான்றோர் இரண்டையும் பிரிக்கமுடியாத குண குணியாக்கி அம்மையப்பனுகக் காட்டி வழிபடச் செய்தனர். அம்மை யருள்வடிவம் அப்பன் அறிவு வடிவம் என்ற உண்மையைச் சாத்திரங்களால் அறிக.

> "நீரின் தண்மை அனல் வெம்மை யெனத்
> தனைய கலாதிருந்து" என்ற உரையும் காண்க

இவ்விருவகையான, அறிவு வழிபாட்டினையும், அன்புவழிபாட்டினையும் கொண்டு வழிபட்ட சான்றோரின் வரலாறே திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணச்சீரிய தமிழ் நாட்டுத் தனிப்பெரு நூலாகும்.

அந்நெறியில் நின்ற ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆம் இரு பெருமக்கள் வரலாறே ஆசிரியரால் உரைநடை செய்யப் பெற்றது இந்நூல். திருஞானசம்பந்தர் வரலாற்றில் சேக்கிழார் பெருமான் ஞானப்பிள்ளையாரை.

> ஞானத்தின் திருவுருவை நான் மறையின் தனித்துணையை!

என்றருளியிருப்பதும், திருநாவுக்கரசர் பெருமானை,

> 'சிந்தை யிடையறா அன்பும் திருமேனிதனில் அசைவும்' என்றும்
> 'நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
> பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும்" என்றும் போற்றி

யிருப்பதும் அறியலாம். பொருட்சமய முதற் சைவநெறி தான் பெற்ற புண்ணியக்கண் இரண்டாகிய, அறிவுநெறி அன்புநெறி நின்று உலக மக்களை நன்னெறியாம் சைவ மெய்ந்நெறிப் படுத்திய இருபெருமக்களும் நம்மனோர்க்குச் சமய வாழ்வையளித்த ஆசாரிய மூர்த்திகளாவார்கள். அதனுல்தான் அவர்களை நாம் சமய குரவர் என்கிறோம். ஆகவேதான் பெரிய புராணம் இவ்விரு பெருமக்களுடைய வாழ்வை நமக்கு எய்ப்பினில் வைப்பாக வைத்துப் போற்றிப் பரவியிருக்கிறது. அவ்வுண்மையறிந்தே இந்நூல் ஆசிரியரால் உரைநடையாய் அழகுபட யாக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர் காலஞ்சென்ற பெருஞ்சொல் விளக்கனார், முது பெரும் புலவர், உயர்திரு அ. மு. சரவணமுதலியார் அவர்கள், தமிழ்ப்பெரும் புலமையும் சைவசமய சீலமும், பேச்சுத்திறனும் மிக்கவர்கள் என்பதும் பெரிய புராணத்தில் தன்னிகரில்லாத் தனியாற்றல் படைத்தவர்கள் என்பதும் தமிழ்நாடு நன்கறியும். அவர்களது கலையில் தெளிவும் கட்டுரை வன்மையும், கேட்டார்ப் பிணிக்கும் சொல்வன்மையும், உறுதியுள்ளமும்' அஞ்சாமையும் யாவரையும் வியக்கச் செய்யும். அத்தகைய சான்றோர் பெருமகனார், அரியலூர் மணிவாசக மன்றத்தார் பால்வைத்த அன்பின் பெருக்கால் பல்லாண்டுகட்கு முன்னரே எழுதிக்கொடுத்த இந் நூல் இதுபோது வெளிவருவது பெருமகிழ்ச்சிக் குரியதாகும்.

இந்நூல் அழகிய செந்தமிழ் நடையில், உயிரோட்டமுடை உரை நடையாய், சேக்கிழார் பெருமான் கூறிய வரலாற்று முறையே முறையாக, இடையீடின்றி இக்கால இளைஞரும் விரும் பிப்படிக்கும் ஆற்றல் அமைந்துள்ளமை பெருஞ்சிறப்பாகும். அன்றியும், ஆசிரியர் பெருமான், தமக்கேயுரிய ஆய்வுத்திறனோடு வரலாற்று ஆராய்ச்சியை அகச்சான்று புறச்சான்று கொண்டு நிறுவியுள்ளமை ஆசிரியரது நுண்மாண் நுழைபுலனை விளக்கு கிறது. இந்நூல், ஞானப் பிள்ளையார் புராணத்தையும் நாவுக்கரசர் புராணத்தினையும் படிப்பதற்கு ஒரு ஊன்று கோலாகவும் துணை செய்யும் என்பது எனது கருத்து.

இந்நூலினை மணிவாசக மன்றத்தார் வெளியிடுவது மேலும் சிறப்புடையதாகும். இதனைச் சைவத் தமிழுலகம் பெற்றுப்பயன் துய்க்க எல்லாம் வல்ல, என்றும் இளையானும் முருகன் அருள் புரிவானாக.

தென்னாடுடைய சிவனே போற்றி

அன்பன்

**அ. நடேச முதலியார்**



# நன்றி உரை.

*“ உறவும் பொருளும்ஒண் போகமுங் கல்வியுங் கல்வியுற்ற*
*தறவுத் தறவிப் பயனும் எனக்குச் சுழித்தபுனற்*
*புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்புந் ததும்பும்வண்டின்*
*நறவும் பொழில்எழிற் காழியர் கோன்திரு நாமங்களே ”*

(11ம் திருமுறை)

‘இரு பெருமக்கள்’ என்ற தொடர் ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமிகளையும், ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகளையும் குறிக்கும். அவர்கள், செயற்கரிய செய்தமையினால் பெரியார்—பெரியவர்—பெருமக்கள் ஆனார்கள். சம்பந்தர் சற்புத்திர மார்க்கத்திலும், நாவுக்கரசர் தாசமார்க்கத்திலும் நின்று உலகிற்கு நன்னெறி காட்டிய செந்நெறியாளர்கள் ஆவார்கள். சேக்கிழார் பெருமான் சம்பந்தர் புராணம் முடிவில்,

*“ அருந்தமிழா கரர்சரிதை அடியேனுக் கவர்பாதம்*
*தரும் பரிசால் அறிந்தபடி துதிசெய்தேன்.. ... ”*

என்றும் அப்பர் புராணமுடிவில்,

*“ அடியனேன் ஆதரவால் ஆண்டஅரசின் சரிதப்*
*படியையான் அறிந்தபடி பகர்கின்றேன் அப்பாமுனிவர்*
*கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்*
*முடிவில்புகழ்த் திருத்தொண்டின் முயற்சியினை*
*மொழிகின்றேன் ”*

என்றும் அருள் செய்கின்றார்கள். இத்தகு சிறப்பு மிக்க பெருமக்கள் சம்பந்தர், அப்பர், ஆகியோர் வரலாற்றினை மூல நூலின் வரன்முறை தவறாமல் தமிழ் சைவப் பெருமக்கள் எல்லோரும் நன்கினிது அறிந்துணர்ந்து இன்புறுமாறு ஏழையேங்களுடைய குருதேவராகவும், இவ்விருபதாம் நூற்றாண்டில் சேக்கிழாரின் திருவவதாரமாகவும் இருந்த “பெருஞ் சொல் விளக்கனார்” ‘முதுபெரும் புலவர்’ உயர்திரு. **அ. மு. சரவண முதலியார்** அவர்கள் உரை நடையால் தனித்தனியாக எழுதி,

அவரவர் சரித்திர ஆராய்ச்சி என்று தனித்தனியாகவும் பொது ஆராய்ச்சி என்றும் 5 பிரிவுகளாக அருள் செய்து வைத்தருளிய கையெழுத்துப் பிரதியை ஏழையேங்களுடைய வேண்டுகோளின் பேரில் 1956ல் ஏழையேங்களிடம் கொடுத்தார்கள்.

1930ம்ஆண்டில் அவர்கள் எழுதிய 'அழுது அடியடைந்த அன்பர்' என்றநூல் 1956ல் அச்சிடப்பட்டு மணிவாசக மன்ற 'க'வது வெளியீடாக 21—7—1957ல் அக்காலத்தில் புதுக் கோட்டை சப்-ஜட்ஜாக இருந்த உயர்திரு. S. **மகராஜப் பிள்ளை, M. A., B. L.,** அவர்கள் தலைமையில் நடைபெற்ற மன்றத்துப் பதினென்காவது ஆண்டு நிறைவு விழாவில் வெளியிடப்பட்டது. அந் நூலின் முன்னுரையில் ஆசிரியர் அவர்கள், "இறைவன் திருவருளால் வெளி வருகின்ற 'அழுது அடியடைந்த அன்பர்' என்னும் ஆராய்ச்சி நூலாகிய இஃது 1930ம் ஆண்டு எழுதப் பெற்று என் பெட்டியுள்ளே இருந்தது என்றும், அரியலூர் 'மணிவாசகமன்றத்தாரால் இப்போதுதான் அச்சாகி வருகிற தென்றும் என் கட்டுரைப் பொழில் என்னும் நூலின் முன்னு ரையிற் குறிப்பிட்டிருக்கின்றேன். 1932ம் ஆண்டு எழுதிய 'இரு பெருமக்கள்' என்னும் நூலும் என் பெட்டியுள்ளே இன்னும் தூங்குகிறதென்றும் அதற்குக் காரணமும், பிறவும் அந்த முன்னுரையிற் குறிப்பிட்டிருக்கின்றேன். திருவருள் கூட்டுங் கால் அந்த நூலும் வெளிவரலாம்" என்று குறிப்பிட்டிருந் தார்கள். அவ்வாறே திருவருள் கூட்டுவிக்கப் பன்னிரண்டாவது ஆண்டு மிக நீண்ட மகாமக கால இடைவெளிக்குப் பிறகு இந்நூல் மன்ற வெள்ளி விழா வெளியீடாக வெளிவரலாயிற்று என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

இடையே முன்னர் ஓர் முறை 23—8—1962ல் இந் நூலை மன்ற வெளியீடாக வெளியிடுவதற்கு அவர்களுடைய திரு மைந்தரும், ஏழையேங்களுடைய முன்னோருமாகிய தமிழ்ப் பேரறிஞர் உயர்திரு. **அ. ச. ஞானசம்பந்தம், M. A.** அவர்கள் பால் அனுமதி வேண்டி விண்ணப்பித்துக் கொண்டோம். ஏழை யேங்களிடத்தும் மன்றத்தினிடத்தும் சிறப்பு அன்புடைய அவர் கள் 26—8—62 ம் வயில் எழுதிய கீழ்க்கண்ட கடிதத்தின் மூலம் அனுமதி வழங்கியருளினார்கள். அக்கடிதம் வருமாறு :-

உ

A. S. GNANASAMBANDAM. 26—8—1962.

*அன்புடையீர்,*

வணக்கம். தங்கள் 23—8—62 கடிதம் பெற்றேன். தாங்கள் இருவரும் பெரியவர்களிடத்து எத்தகைய ஈடுபாடு கொண்டவர்கள் என்பதை நான்மட்டு மன்று! என் குடும்பத்தாரும் மிக நன்கு அறிவர்.

எனவே கிழே யான் எழுதியுள்ள முடிவு என்னுடையது மட்டு மன்று; என் மனைவி; பெரியவர்கட்கு மிகவும் பிரியமான செல்வன் மெய்கண்டான் ஆகியோருடைய முடிவும் அதுவே.

பெரியவர்களுடைய நூல்கள் **எதனை வேண்டுமாயினும்** தாங்கள் **எடுத்து வெளியிட உரிமை உண்டு**. அதனுல் ஏதேனும் **ஆதாயம் கிடைக்குமாயின்** அதனை அரியலூர் உயர் நிலைப் பள்ளியில் தமிழில் அதிக மார்க்குகள் வாங்கும் பிள்ளைக்குப் **பெரியவர்கள் பெயரில் ஒரு பரிசாக வழங்கி விடுங்கள்.**

"I hereby give to M/S Manivasakamanram, Ariyalur, the rights to print one edition of all the works of my reverend father A. M Saravana Mudaliar, without paying any royalty to me or to my successors"

(Sd) A. S. Gnanasambandan
6-F Warren Road,
Madras-4.
26—8—1962

என்பது ஆகும்.

அவர்களுக்கு ஏழையேங்களுடைய, மன்றத்தின் சார்பான நன்றியும், வணக்கங்களும் கடமைப்பாடுகளும் என்றுமே உரியன. இச்சீரிய நூலிற்கு உயரிய முன்னுரை வழங்கியருளிய ஏழையேங்களுடைய குருதேவர் 'சைவப் பெருநாவலர்' 'புலவர் சிகாமணி' 'தமிழ்ப்பெரும்புலவர்' உயர்திரு. **அ. நடேச முதலியார்** அவர்கட்கும் ஏழையேங்களுடைய தனி அன்பும், நன்றியும்,

வணக்கங்களும், கடமைப்பாடுகளும் உரியனவாகும். இவ்வரிய நூல் அச்சாகுங்கால் அச்சுப்பிரதிகளைத் திருத்தம் செய்துதவிய அரியலூர் அரசினர் உயர்நிலைப்பள்ளித் தலைமைத்தமிழாசிரியரும், நன்மனமும், இன்சொல்லும், செயல் திறமும் உடையவர்களும், மன்றத்தின் பெருந்துணையாக இருப்பவர்களும் ஆகிய உயர்திரு. **சா. சிவப்பிரகாசம் பிள்ளை** அவர்களுக்கும் ஏழையேங்களுடைய மன்றத்தினுடைய அரிய அன்பும், நன்றியும், வணக்கங்களும், கடமைப்பாடுகளும் என்றும் உரியன வாகுக. இந்நூல் சிறப்பாக அமைந்து உரிய காலத்தில் வெளிவருமாறு எல்லா வகையாலும் முயன்று செம்மையாக, ஏழையேங்கள் எவ்வெவ்வாறெல்லாம் விரும்புகின்றோமோ அவ்வவ்வாறெல்லாம் செவ்விய முறையில் எப்போதும் போல் மேலும் உயர்வாக அச்சிட்டு உதவியருளிய அரியலூர் ஜனோபகார மின்னியல் அச்சகத்தாருக்கும் ஏழையேங் களுடைய பெரிய அன்பையும் நன்றியையும் வணக்கங்களையும் கடமைப்பாடுகளையும் உரிமைப்படுத்து கின்றோம்.

இந்நூல் நன்முறையில் வெளிவருவதில் பங்கு கொண்ட அனைவருக்கும் மேலும் நலமெலாம், சாலவே பெருக அருள் செய்யுமாறு திருஞான சம்பந்தரை ஆட்கொண்ட பெருமணத் தெம்பெருமானுரையும், திருநாவுக்கரசரை ஆட்கொண்ட பும்பூகலூர் மேவிய புண்ணியனுரையும் பிரார்த்தித்து அவர்தம் திரு வருளாம் திருவடிகளைப் பன்முறை பணிந்து வணங்குகின்றோம்.

*பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி*
*பரசுநா வரசான பரமகா ரணவீசன்*
*அதிகைமா நகர்மேவி அருளினல் அமண்மூடர்*
*அவர்செய்வா தைகள்தீரும் அனகன்வார் கழல்சூடின்*
*நிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை*
*நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால*
*மதியரா குவர்ஈசன் அடியரா குவர்வான*
*முடையரா குவர்பாரின் மனிதரானவர்தாமே*

(11-ம் திருமுறை)

*அரியலூர்*
*23—6—68*

இங்ஙனம்,
**மாணவச்சிறுவர்கள்.**

௳

# திருத்தொண்டர் திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

வையம் மகிழ யாம்வாழ அமணர் வலிதொலைய
ஐயன் பிரம புரத்தரற் கம்மென் குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
தையல் அருள்பெற் றனன்என்பர் ஞானசம் பந்தனையே.

பந்தார் விரலியர் வேல்செங்கட் சோழன் முருகன்நல்ல
சந்தார் அகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தி லிட்டடி யேன்கொடுத்த
அந்தாதி கொண்ட பிரான்அருட் காழியர் கொற்றவனே.

### திருநாவுக்கரசு நாயனார்

நற்றவன் நல்லூர்ச் சிவன்திருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்கே
உற்றவன் உற்ற விடமடை யாரிட ஒள்ளமுதாத்
துற்றவன் ஆமூரின் நாவுக் கரசெனுந் தூமணியே.

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியால்
திணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன கல்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர்பி ரான்தன் அருந்தமிழே.

திருச்சிற்றம்பலம்.

# 1. திருஞானசம்பந்தர் வரலாறு.

## 1. பிறப்பு.

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்."

வான்பொய்க்கினுந் தான் பொய்க்காத காவிரியாற்றினுல் வேலியாயிரம் விளைவுடைத்தாக விளங்கி,படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டு வரும் முடியுடை வேந்தர் மூவருள்ளே சோழமன்னர் வழிவழியாக ஆட்சிபுரிந்து வரப்பெற்றது சோணுடு. அதனகத்துச் சிறந்து விளங்கும் பதிகள் அளவில்லன. அவற்றுள் சீகாழி என்பது பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், சிரபுரம், தோணிபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு பெயர்களையுடையது. இயற்கை வனப்புக்கள் வாய்ந்து கண்டவர் கண்ணையுங்கருத்தையுங்கவரும் காட்சியது. அவ்வூரிலுள்ளார் அணிந்துள்ள திருநீற்றின் ஒளி பகலைக் காட்ட, அந்தணர்கள் ஆற்றும் வேள்விப்புகை இரவினைத் தோற்றுவித்தலால் வேறு இரவும் பகலும் ஆங்கு வேண்டா வாயின. வயல்களில் மலர்ந்து மணங்கமழுஞ் செந்தாமரை மலராகிய நெருப்பின்கண் அவற்றின் வரம்புகளில் வளர்ந்துள்ள தேமாவின் கனிகள் விண்டு ஒழுகும் பழச்சாருகிய நெய்யானது அம்மரத்தின் இலையாகிய சுருவையின் வழியாக இடையருது ஒழுகுதல், ஆங்குள்ள மறையவர்களேயன்றி, மரங்களும் வேள்வி வேட்பன போலத் தோன்ரு நிற்கும். வானளாவிய சோலைகளில் நுழைந்து வெளிவரும் மதியானது, தான் ஆங்குத் தோயப்பெற்ற மலர்த்தாதினுலும் தேனுலும் வெண்ணிறமாறிச் செந்நிறம் பெற்ற மாலை ஞாயிற்றினை ஒத்து விளங்கும்.

இத்துணைச் சிறப்பமைந்த அந்நகரின் கண்ணுள்ள மறைய வர்க்குத் தலைவராய், கவுணியர் கோத்திரத்தாராய்ச் சிவபாத

இருதயரென்னும் பெயர் பூண்ட அந்தணர் ஒருவர் உளரானுர். பகவதியார் என்பவர் அவர்தம் நற்குண நிறைந்த கற்புடை மனேவியாராவர். இவ்விருவரும் தம் மரபு சைவநெறி வழிவந்த தன்மையினுல் சிவபிரான் திருவடியை இடையருது நினேக்கும் பெற்றியராய், திருநீற்றில் அன்பு பாலிக்கும் செந்நெறியுடையராய் முறைவழாது இல்லறம் நடாத்தி வருவராயினர்.

ஆயகாலே, சமணர்களும் புத்தர்களும் நாட்டிற் பரவிப் பல்வகைச் சூழ்ச்சியினுலும் தமது கொள்கையைப் பரப்பியதால் மறைநெறி அருகியது; திருநீறணிதல் சிவசாதனங்கள் குன்றியன.

இந்நிலேயினேக்கண்டு மனம் புழுங்கிய சிவபாத இருதயரும், அவர்தங் காதலியாரும் நாடோறுந் திருத்தோணியப்பர் திருமுன் சென்று, " வேண்டியார் வேண்டியாங்கு ஈயும் விமல, பரசமயத்தை நீருக்கி எமது சமயத்தை நிலே நிறுத்தும் ஆற்றல் வாய்ந்த அரிய புதல்வன் ஒருவனே அடியேங்கட்கு அளித்தருளுவீராக" எனக்குறையிரந்து வேண்டினர். அதன்பயனுகப் பகவதியார் கருவுற்றனர். பத்து திங்களிலும் செய்யவேண்டிய சடங்குகள் முறைப்படி செய்யப்பட்டன. ஞாயிறு முதலிய கோட்கள் முழு வலியுடன் உச்சம் பெற்றிருக்க, நல்லோரை எழ, திருவாதிரை நாளில், பரசமயத் தருக்கு நீங்கவும், மறைநெறியும் சைவத் துறையும் விளங்கவும் அந்தணர் ஆகுதி பெருகவும், எம்மொழிகளினுந் தமிழ் மொழியே சிறப்புறவும், பல உலகங்களுள்ளே நில உலகமும் அதன் கண்ணுள்ள பலநாடுகளிலே தமிழ்நாடுமே மேம்படவும் பிள்ளேயார் திருவவதாரஞ் செய்தருளினுர்.

அப்போழ்து அந்நகரிலுள்ள மக்களின் உடம்பும் உள்ளமும் பூரித்தன; சோலேகளனேத்தும் துய்யமணம் வீசின; ஞாயிற்றின் நல்லொளியாண்டும் பரவியது; தென்றற் காற்றுச் சில்லெனத் தவழ்ந்தது; விண்ணவர் மலர்மழை பொழிந்தனர்; மண்ணவர் வேள்வி புரிந்து மகிழ்ந்தனர்; மரங்களும் செடிகளும் மகிழ்ந்து செழித்தன; மாசில்லாத ஒளியுடன் வானம்விளங்கியது; நல்ல பறவைகள் ஒலித்து நற்குறிகள் காட்டின; பார்ப்பன மகளிர்பலருந் தங்கள் மாளிகைகளிலே மலர்களும் சாந்தும், நிறை குடமும், வெண்முளேப் பாலிகைகளும் அமைத்து அழகுறுத்

தினர்; செல்வர்களனைவரும் வறியவருக்கு வழங்கி மகிழ்ந்தனர்; அடியார்க்கு அமுதூட்டி அகங்களித்தனர். ஆளுடைய பிள்ளையாருக்குச் சாதகர்மம் முதலிய சடங்குகள் செவ்வனே நிறைவேறின.

## 2. ஞானப்பால் பருகல்.

பிள்ளையார் பெற்றோர் மடிமீதும், மணிப்பீடத்தும், மலரமளியிலும் மாசற்ற தொட்டிலிலும் பாராட்டப் பெற்றனர் " இடைப்படக் குறு குறு நடந்து சிறுகை நீட்டி இட்டுந் தொட்டுங் கவ்வியுந்துழந்தும் " அரும் பெறற்புதல்வர் அன்னையையும் அத்தனையும் அகமகிழ்வித்தனர். செவ்வேளனையார் சிற்றிலழித்துச் சிறு தேருருட்டிச் சிறுபறை கொட்டித் திருவிளையாடல் புரிந்தனர். இங்ஙனமாக இரண்டாண்டுகள் கழிந்தன.

மூன்றாவது ஆண்டு நடைபெறுங்காலையில் ஒருநாள் சிவபாதஇருதயர் நீராடச் சென்றனர். ஆளுடைய பிள்ளையாரும் அழுதுகொண்டு பின் தொடர்ந்தனர். அதனைக் கண்ணுற்ற தந்தையார் முனிபவர் போற்காட்டி விலக்கியும் பயன்படாமை கண்டு உடனழைத்துச் சென்றனர். சென்றவர் திருக்கோயிலுள்ள திருக்குளத்தையடைந்து பிள்ளையாரைக் கரையில் வைத்துவிட்டுத் தாம் ஆண்டவனையும் அம்மையையும் வணங்கி நீருள் மூழ்கி நியமங்கள் பல முடித்தார். அகமருடமந்திரம் செபித்து அந்நீருள் மூழ்கிச் சிறிது நின்ற காலை, பிள்ளையார் பொறுக்கலாற்றாது சிவபிரான் திருவடிக்குத் தொண்டுசெய்த முன்னுணர்ச்சி வந்துமூள விம்மி அழத்தொடங்கினர்.

கண்மலர்கள் நீர்ததும்ப, கைம்மலர்களாற் பிசைந்து, வண்ணமணிச் செங்கனிவாய்மணியதரம் புடைதுடிப்ப, செம்மேனி வெண்ணீற்றான் திருத்தோணிச் சிகரம் பார்த்து 'அம்மே அப்பா' என்று அழைத்து அழுதனர். ஆயகாலைத் " தன்னை நோக்கித் தொழுதழுவார்க் கெலாம் பின்னையென்னுப் பெருமான் " பிராட்டியாரோடும் விடையின் மேல் எழுந்தருளிக் காழிக் கன்றுக்குக் காட்சிகொடுத்துத் தேவியை நோக்கிச் " செங்கனி வாய்மயிலே, நின் தீம்பாலை ஓர் பொற்கிண்ணத்திற் கறந்து,

அதிற் சிவஞானத்தைக் குழைத்து அழுகின்ற இக்குழவிக்கு அருத்துவாயாக '' என அருளிச் செய்தனன். இறைவன் ஏவல் வழி நிற்கும் இறைவி அங்ஙனமே செய்து பிள்ளையாருக்கு ஊட்ட, அவரும் அகமகிழ்ந்து அருந்தினர்.

உமையம்மையின் பாலில் சிவஞானம் குழைத்திருந்தமையால் அதனை உண்ட பிள்ளையாருக்கு அன்றுமுதல் திருஞான சம்பந்தர் என்னும் திருப்பெயர் எழுவதாயிற்று. சிவபாத இருதயர் தம் மந்திரத்தை முடித்துக்கொண்டு கரையேறித் தமது தனையனையும், அவர் கடைவாயில் ஒழுகும் பாலையும் கண்டு, மனம் விண்டு, ''யாரோ எச்சில் மயங்க இதனை அருத்தினர்''என உளங்கொண்டு பெறலரும் புதல்வனை நோக்கி ''எச்சில் மயங்கிட உனக்கீதிட்டாரைக் காட்டு'' என்று கையின்கண் ஓர் சிறிய கோலை எடுத்து ஓச்ச, பிள்ளையார் ஒரு காலை முழந்தாளுடன் பின்னே வளைத்து உச்சியின்மேல் எடுத்தருளும் ஒரு திருக்கை விரலாற் சுட்டி கண்களில் ஆனந்த நீர் பெருக,வானின்கண் மழவிடைமேல் விளங்கும் அம்மையப்பனைக்காட்டி,

'' தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி யென்னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த வருள் செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே.''

என்னும் திருப்பாட்டை முதலாகக்கொண்ட திருப்பதிகத்தைப்பாடி முடித்தனர். அப்பதிகத்தின் எட்டாவது பாட்டிலே இறைவனிடம் அறியாது தவறிழைத்துப்பின் அறிந்து வருந்தினுல் மன்னித்தருள்வன் என்பதை அறிவுறுத்த இராவணனையும் ஒன்பதாவது பாட்டிலே தொழுதகை துன்பம் துடைப்பவன் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் ஒருவனே என உணராது செருக்குற்றுப் பின் அதனை ஒழித்து வழிபட்ட திருமாலையும் நான்முகனையும், பத்தாவது பாட்டிலே தமது பிறப்பு நோக்கமாகிய சமண, புத்தர்களின் தீய செயலையும் கூறி, பதினேராவது பாட்டிலே பதிகப் பயனை அருளிச் செய்தனர்.

இதனை உணர்ந்த வானவர் மலர் மழை பொழிந்தனர். கணநாதரிடமிருந்து எழுகின்ற 'அர' ஒலியின்கண் துந்துபி

முழக்கமும், கந்தருவர், கின்னரர்களின் இசை முழக்கமும், இந்திரன் முதலோர் துதி முழக்கமும் அடங்கிவிட்டன. முனிவர் குழாம் புடைசூழ எழுந்தருளிச் சீகாழிச் செம்மலை ஆட்கொண்ட ஆண்டவன் அம்மையோடும் ஆலயத்திற்கெழுந்தருளினன். பிள்ளையாரும் ஆளுடைய பிள்ளையாராயினர். திருக்கோயிலுட் சென்ற சிவபிரானைக் கண்ட தோணிபுரத்தோன்றல் தமது கண் வழியே கருத்துச் செல்ல அக்கோயிலை அடைந்தனர். நாயனுருக்குத் தந்தையாராவதற்கு அளவிறந்த தவஞ்செய்த சிவபாத இருதயர் கையிலெடுத்த சிறிய கோல் கீழேவிழக் கைகளை முடியிற்குவித்துக் கழிபேருவகையுற்றுக் களிநடம்புரிந்து வியப்பும் விருப்பும் பொங்க, தமிழ் விரகர் அருளிய திருப்பதிகத்தால் அறியக்கிடந்த பொருளை உணர்ந்தனர். தமது தனையனைப் போலத் தாமும் இறைவனைக் களிக்காவிடினும் ஆங்குநிகழ்ந்த வற்றால் "இவையாவும் சிவபெருமான் திருவருட்டிறனே" என எண்ணி இறும்பூதுடன் அருந்தவப் புதல்வர் பின் அம்மையப்பர் ஆலயத்துட் புகுந்தனர். இவ்வற்புதச் செய்தியினையறிந்த அந்தணர் பலரும் "ஆ! இஃதென்னே அதிசயம்? இதற்குமுன் கேட்டிராத செய்தியாக உள்ளதே இஃது!" என வியந்து கோயில் வாயிலில் வந்து குழுமினர். ஆளுடைய பிள்ளையார் அவர்கட்குப் பிரமபுரப் பெம்மான் பிராட்டியாரோடும் விடைமேற் போந்து தம்மையாட்கொண்டருளிய திருவருட்டிறத்தை எடுத்துக் கூறி அவர்களோடு ஆலயவாயிலினின்றும் புறப்பட்டார். காழிப் பதியிலுள்ளார் அனைவரும் கோயில் வாயிலில் வந்து கூடி அப்பெருமானை வரவேற்று,

"காழியர் தவமே! கவுணியர் தனமே! கலைஞானத்(து)
ஆழிய கடலே! அதனிடை அமுதே! அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தனதிரு வருள்பெற் றனை"

"புண்ணிய முதலே! புனமணி யரைஞாணொடுபோதுங்
கண்ணிறை கதிரே! கலைவளர் மதியே! கவின்மேவும்
பண்ணியல் கதியே! பருவம தொருமூ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவர் அருள்பெற்றனை"

எனவியந்து துதிப்பாராயினர். சம்பந்தப்பெருமானும் தந்தையாரோடும் தமது திருமாளிகையை அடைந்து அன்று இரவு முழுவதையும் திருத்தோணிபுரத்துச் செம்மேனியனை நினைத்துக் கழித்தனர்.

## 3. தாளமும் சிவிகையும் சங்கரனிடம் பெறுதல்.

அன்றிரவு அங்ஙனம் கழியவே, காலையிற்காழியர் கோன் பேரன்போடு திருக்கோயிலுட் சென்று அத்தனையும் அன்னையையும் வணங்கி, அப்பதிக்கு அண்மையிலுள்ள திருக்கோலக்காவிற் கோயில் கொண்டருளிய தேவதேவனை வணங்கும் பொருட்டு ஆங்குச் செல்வாராயினர். அங்குள்ள குளங்களும், அவற்றின் கண் மங்கையர் பலர் நீராடுதலும், அவ்வாரவாரத்தால் மடையில் வாளை மீன்கள் மேலெழுந்து பாய்தலுமாகிய இயற்கைவளம் அடிகளின் கண்ணையுங் கருத்தையுங் கவர, இறைவன் திருமுன் சென்று ஆராஅன்புடன் வணங்கி "மடையில்வாளைபாய மாதரார், குடையும் பொய்கைக் கோலக்காவுளான்" என்று தொடங்குந் திருப்பதிகத்தைக் கையினாற் றாளம் போட்டுப் பாடுதலும், ஐந்தெழுத்து வரைந்த பொற்றாளம் இரண்டு, எடுத்தபாடலுக்கிசைந்த அளவில் ஒற்றும்படி பிள்ளையார் திருக்கைகளில் வந்து தங்கின. இவ்வியப்பினைக்கண்ட தோணிபுரத் தோன்றல் ஆண்டவன் அருளிப்பாட்டினை எண்ணி இறும்பூதெய்தி அத்தாளங்களைத்தமது முடியின்கண் வைத்தருளிப் பின்னர் எடுத்துப் பதிகத்தை முடித்துத் திருக்கடைக்காப்புச் சாத்தினர். பின்னர், சீகாழி நோக்கிச் செல்லும் அவர் நடக்கப் பொருத நற்றவத் தந்தையார் தமது தோளின்மேல் எடுத்துச் செல்லச் சண்பை நகரைச்சார்ந்தனர். சார்ந்து அம்மையப்பனைப் "பூவார்கொன்றை" என்று தொடங்குந் திருப்பதிகத்தாற் போற்றித் தமது திருமாளிகையிற்றங்கினர்.

அன்று, சம்பந்தப் பெருமான் தாயாராகிய பகவதியார் பிறந்த திருநனிபள்ளி என்னுந் திருப்பதியிலுள்ள செம்மை சான்ற மறையோரனைவரும் இதனைக்கேள்வி யுற்றுச் சாலவியந்து மட்டற்ற மகிழ்ச்சியுடன் மங்கல இயங்களும் மந்திரங்களும்

ஒலிக்க ஆங்கு வந்து திருத்தோணிபுரச் செம்மலின் திருவடிகளைத் தொழுதனர். மற்றைப்பதிகளிலுள்ள மறையவர்களும் தொண்டர் களும் பிறரும் பிள்ளையார் சிவஞானம் பெற்றதை அறிந்து அங்கு வந்து அடிகளின் திருவடிகளை வணங்கி அகமகிழ்ந்தனர். அவ் வூரார்கள் அங்கு வந்த அனைவருக்கும் உண்டி உறையுள் முதலியன உதவி அவர்களை மகிழ்வித்துத் தாமும் மகிழ்ந்தனர். சீகாழி சிவலோகம் போலத்திகழ்ந்தது.

திருநனிபள்ளி அந்தணரனைவரும் அடிகள் தம்மூருக்கு வந்து ஆண்டவனை வணங்க வேண்டுமென்று அடிபணிந்து வேண்ட, பிள்ளைப்பெருமானும் அதற்கு இசைந்து வேணுபுரவிமல ரிடம் விடைபெற்று ஏனைத்திருப்பதிகளையும் வணங்கும் குறிப் புடன் எழுந்தருளினர். வழக்கம்போல அவரது தந்தையார் தமது தோளின்மேற் பிள்ளையாரை வைத்துச் செல்ல, அப்பெருமான் அம்மையப்பர் திருவடியைத் தமது சென்னியிற்றாங்குங் கருத் தினராய்ச் செல்வாராயினர்.

அங்ஙனம் செல்லுங்காலை வானளாவிய மலர்ச்சோலையை அண்மையிற்கண்டு 'அஃதுஎப்பதி'? எனத்தாதையாரை வினவி னர். அவரும் ''அஃதேதான் திருநனிபள்ளி,' என விடை இறுத்த னர் அடிகள் அத்தர் பியல்மேலிருந்து கொண்டே ''காரைகள் கூகை முல்லை'' எனறு தொடங்குந் திருப்பதிகம் பாடித்திருக் கடைக் காப்பில் திருநனிப்பள்ளியைச் சிந்திப்பார்வினை கெடுமென் பதற்குத் தம்மீது ஆணையிட்டு முடித்தனர்.

பின்னர் திருக்கோயிலை அடைந்து பேரன்போடு பெரு மானைப்பணிந்து அவன் பேரருள்பெற்று அந்தணர்பலர் வேண்டு கோட்கிணங்கி அப்பதியிலமர்ந்தனர். திருத்திலதைப்பதிமறைய வர் பலரும் தொண்டர்களும் தமது ஊரை அலங்கரித்துக்கொண்டு பிள்ளைப்பெருமானை வந்து வணங்கிவேண்ட அவரும் ஆங்குச் சென்று ஆதிமுதல்வனைப் பாடிவணங்கினர்.

அப்பால், திருவலம்புரம் சென்று தேவதேவனைக் 'கொடியுடை' என்று தொடங்குந் திருப்பதிகத்தாற் போற்றினர். திருச்சாய்க்காடு தொழத்திருவுளங் கொண்டு இடையிலுள்ள

பல்லவனீச்சரத்துப் பரஞ்சோதியைப் பாடித்துதித்துச் சாய்க்காடு மேவி "மண்புகார்" என்னும் பதிகத்தால் வானவர்கோனை வாழ்த்தி வணங்கினர். பின்னர்த் திருவெண்காட்டுச் செல்வர்களால்அழைக்கப் பெற்று ஆங்கு எழுந்தருளியுள்ள ஆண்டவனைக் "கண்காட்டு நுதலானும்" என்று தொடங்குந் திருப்பதிகத்தாற் பாடி, அத்திருக்கோயிலிலுள்ள முக்குளப் பெருமையினையும் அப் பதிகத்தில் முறைபெற வைத்தருளினர். பின்னர்த் திருமுல்லை வாயிலை வணங்கிச் சீகாழி வந்து சண்பைநாதன் திருவடியில் தமிழ்மாலை சாத்தித் தங்கியிருந்தகாலை, மயேந்திரப்பள்ளி, குருகாவூர் முதலிய இடங்கட்குஞ்சென்று எம்பெருமானைப் பாமாலையாற் பரவி, காழிக்கு மீண்டனர்.

இங்ஙனம் காழி வள்ளலார் கழுமலத்திற்றங்கியகாலை, திருநீலகண்டயாழ்ப்பாணர் என்பார் ஒருவர் அவரது மனதிற் கிசைந்த மனைவியாராம் மதங்க சூலாமணி என்னும் மாதுடன் பிள்ளைப் பெருமானரது பெறலரும் பேற்றினைக் கேட்டு அவரைக் கண்டு களிக்குங்காதல் மிக்கு ஆங்கு வருவாராயினர். அதனையுணர்ந்த சிறிய பெருந்தகையார் எதிர்கொண்டுவர, பாணர் தமது பழந்தவத்தின் பயனெனஅவரைக் கண்டு அமையா அன்புடன் கிழே வீழ்ந்து வணங்கி எழுந்து மட்டற்ற மகிழ்ச்சியுடன் நிற்க, "அளவிலா மகிழ்ச்சியினுர் தமை நோக்கி 'ஐயர்! நீர், உளமகிழ இங்கணைந்த உறுதியுடையோம்" என இள நிலா நகைமுகிழ்ப்ப இளஞ்செம்மல் இசைத்து, அவரைச் சிவபெருமான் திருக்கோயில் வாயிலுக்கு அழைத்துச் சென்று "உங்கள் இறைவருக்கு யாழ் வாசியும்" எனப் பாணரும் பாணினியாரும் அங்ஙனமே செய்து அனைவரையும் மகிழ்வித்தனர்.

ஞானசம்பந்தர் அவர்களை அழைத்துக்கொண்டு போய் அவர்கட்குத் தங்குமிடங்கொடுத்து விருந்தளித்தனர். ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களைக் கேட்டு மகிழ்ந்து அப் பதிக இசையினைத் தமது யாழிலிட்டு வாசித்து அனைவரும் அக மகிழுமாறு செய்தனர். அத்தொண்டினைப் பிள்ளையாருடன் இடையருது இருந்து செய்தற்கு அவரது இசைவு பெற்று "இஃது ஓர் பெறுதற்கரிய திருவருட்பேறு" எனக் கருதி அந்நாள் போலவே

எந்நாளும் வெங்குரு வேந்தரை விட்டு விலகாமல் அவண் தங்கினர்.

அப்பால் அத்தமிழ் வேந்தருக்குத் தில்லையம்பதியின்கண் திருக்கூத்தியற்றும் செம்பொனம்பலவனைக் கண்டு வணங்குங் காதல் கைமிக, அக்கருத்தைத் தாதையாருக்குத் தெரிவித்து அவரோடும் மற்றை அடியார்களோடும் தோணியப்பரிடம் விடை பெற்றுத் தில்லையம்பதியின் எல்லையை அண்மித் தெற்கு வாயிலை அடைந்தனர்.

தில்லைவாழந்தணர்களனைவரும் திருஞானசம்பந்தப் பெருந்தகையாரின் சீரியவரவைக் கேட்டுச் சிந்தை மகிழ்ந்து தமது ஊரினை ஒப்பனை செய்து மங்கல இயங்களின் முழக்கமும் மறையொலியும் வானின்கட் சென்று வயங்கவும், திசைகள் தோறும் விளக்கும் நிறைகுடமும் திகழவும் வாயிலின் புறத்தே சென்று பிள்ளையாரை எதிர்கொண்டு வாழ்த்துப் பல கூறி வரவேற்றனர்.

பிள்ளைப்பெருமானும் தில்லைப்பதியின்கண் தொண்டர்களின் தூயவுள்ளம்போற் சிவமணங்கமழும் திருவீதியினைக் கண்டுவணங்கி, எழுநிலைக் கோபுரத்தை வழுவில்லாத அன்புடன் தாழ்ந்திறைஞ்சிப் பின்னர்த் திருக்கோயிலினுட் சென்று அன்னம் பாலிக்கும் பொன்னம்பலத்தைத் தொழுது, கடிமலர்க்கைகளை முடியின்கட்குவித்துக் கண்களில் நீர்ததும்ப அமையாத அன்புடன் அம்பலத்தினுட் புகுந்தனர். ஆண்டவன் தமக்கு அருளிச் செய்த மெய்யறிவின் வடிவே அவ்வம்பலமாகவும், அவ்வறிவின் பயனாகத்தமது திருவுள்ளத்து நிறைந்து வழியும் பேரின்பப் பெருக்கே திருநடனமாகவும் தமது புறக்கண்ணிற்குப் புலனாயது கண்டு காழியர்கோன் அத்திருக் கூத்தினைப் பொன்மொழிகளாற் போற்றுவாராயினர்.

"உணர்வினேர் பெறவருஞ் சிவபோகத்தை யொழிவின்றி யுருவின்கண், அணையும் ஐம்பொறியளவினும் எளிவர அருளினை" என்று போற்றி விண்மாரி எனத் தமது கண்மாரி பொழியப்பாடி ஆடித்துதித்தனர். செல்வன் கழலேத்தும் செல்வத்தையே சிறப்புடைப் பொருளாகக் கொண்ட தில்லைவாழந்தணரைப் பதிகத்துள்

முன்வைத்து, "கற்றுங் கெரியோம்பி" என்று தொடங்கும் திருப்பதிகம்பாடினர். தேனும் பாலுந் தீங்கன்னலும் அமுதுமாய்த் தித்தித்து ஊனையும் உயிரையும் உருக்கும் உமையொருபாகன் திருக்கூத்தினை அகத்தேயன்றிப் புறத்தேயுங் கண்டு பெருமகிழ் வெய்தினர். பின்னர்ப் பொன்னம்பலத்தை வலம் வந்து புறம் போந்து கோயிற்றிருமுற்றத்தில் வீழ்ந்து வணங்கி நான்கு திரு விதிகளையும் இறைஞ்சி, தில்லையிற்றங்க எல்லையில்லாத அச்சங் கொண்டவராய்த் திருவேட்களஞ் சென்று அங்குள்ள இறைவன் மீது பதிகம்பாடி ஆண்டேதங்கினர்.

நாடோறும் தில்லைவந்து செம்பொனம்பலவன் திருவடியை வணங்கி வருவார். ஒருநாள் திருக்கழிப்பாலை என்னுந் திருப்பதிக் குச்சென்று ஆண்டுவதியும் ஆலமுண்ட சீலனுக்கு அருந்தமிழ் மாலை சாத்தினர். நீலகண்டயாழ்ப்பாணனும் அவரது திருப்பதிக இசையினைத்தமது யாழிலமைத்துப் பாடிவந்தனர். ஒருநாள் தில்லைக்குச் செல்லும் போது தில்லைவாழந்தணர்களனைவரும் கடவுளருளாற் கணநாதராகத் தோன்றக் கண்ட தோணிபுரத் தோன்றல் அக்காட்சியினைப் பாணர்க்குக் காட்டிப் பரவசமுறச் செய்தனர். பின்னர் அம்பலவன் திருமுன்சென்று "ஆடினாய் நறுநெய்" என்று தொடங்கும் பதிகம்பாடி அதில் தாங்கண்ட காட்சியை வைத்துப் போற்றினர்.

பின்னர்அம்பலவனிடம் பிரியாவிடைபெற்று அரிதினீங்கிப் பொன்னம்பலத்தை வலம் வந்து புறம் போந்தனர். யாழ்ப்பாணர் விருப்பிற்கிசைந்து நிவாநதியின் கரையிலுள்ள பதிகளை வணங் கப் புறப்பட்டுப் போங்காலை, திருவெருக்கத்தம் புலியூர் தென்பட, பாணர் பிள்ளையார் பொற்கழலை வணங்கி "அடிகேள்! அடியேன் பிறந்தபதி இத்திருவெருக்கத் தம்புலியூரே" என்றுகூற, அதனைக் கேட்ட ஆளுடையபிள்ளையார் அகங்கனிந்து "ஐயர்! நீர் அவதரித் திட இப்பதி அளவில் மாதவமுன்பு, செய்தவா' றெனச்சிறப் புரைத்தருளி" ஆண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனைப் பணிந்து பாடினர்.

அப்பால் ஆசிரியப் பெருந்தகையார் அங்கு நின்றும் எழுந் தருளிப் பலபதிகளையும் வணங்கிக் கொண்டு பழமலையை அணு

கித் "திருமுதுகுன்ற மடைவோமே" என்ற இறுதியையுடைய பதிகம்பாடிக் கொண்டு அக்குன்றினை வலம்வந்து திருவிருக்குக்குறள்பாடியபின் இறைவன் திருமுன் சென்று 'முரசதிர்ந்தெழும்' என்னும் பாமாலை சாத்தினர். பின்னர்த் திருப்பெண்ணுகடம் சென்று ஆண்டுள்ள தூங்கானை மாடச்சுடர்க் கொழுந்தை வணங்கிப் பாமாலைபாடி அதனுள் "தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்" என்னும் அறிவுரையை அழகுற அமைத்தனர்.

பின்னர், பிள்ளைப்பெருமான் திருவரத்துறைக்குச் செல்லத் திருவுளங்கொண்டு செல்லுங்காலை, தாதையார் தோளிலிருந்து இறங்கி அந்தணர் புடைசூழ அதிவிரைவாக நடந்தனர். சிவபாத இருதயர் பார்த்துச் சிந்தை நொந்தனர். அடிகளின் திருவடிகளும் சிறிது நொந்தன. அடியார்களும் வழிநடந்த இளைப்பால் வாடினர். அண்மையிலுள்ள மாறன்பாடி என்னும் இடத்தில் அன்றிரவு அனைவருந்தங்கினர். ஆயகாலை அடியர்துயர் பொறுளுகிய திருவரத்துறை ஆண்டவன் பிள்ளைப்பெருமானின் வழி வருத்தத்தை நீக்கியருளத் திருவுளங்கொண்டு அப்பதியின் கண்ணுள்ள அனைவர் கனவிலுந்தோன்றி "ஞானசம்பந்தன் நம்பால் வருகிருன். நம்திருக்கோவிலில் அவன் ஏறுவதற்கு முத்துச்சிவிகையும் அவற்கு நிழற்றர முத்துக்குடையும், முத்துச்சின்னமும் வைக்கப்பட்டுள்ளன. அவைகளை எடுத்துக் கொண்டுபோய்க் கொடுப்பீர்களாக" என்று கட்டளையிட அனைவரும் எழுந்து ஒருவர்க்கொருவர்அவ்வோகை மொழியினை உரைத்து விடிவது நோக்கியிருந்தனர். திருப்பள்ளியெழுச்சிக் காலத்திற் றிருக்காப்புநீக்கிச் சென்று பார்க்குங்காலை, சிவிகை முதலியன ஆங்குத்திகழ்வதைக் கண்டு "திருவருட்பெருமையை அனைவரும் அறிதற்குரிய அறிகுறிகள் இவை" எனக்கருதி அவற்றை எடுத்துச் செல்லுங்காலை, பிள்ளையார்கனவிலும் அருள்வள்ளலார் தோன்றி அவற்றை ஏற்றுக்கொள்ளுமாறு இட்ட கட்டளையை அவர் தந்தையார் முதலோர்க்குக் கூறிக் காலைக்கடன்களை முடித்துத் திருவெண்ணீறணிந்து சிவநாமத்தைச் செபித்துக் கொண்டிருந்தனர். அரத்துறை அடியார்கள் அர, அர, என்னும் முழக்கத்துடன் பிள்ளையார் திருமுன் சென்று இறைவன் கட்டளையை எடுத்தியம்ப, வெங்குரு வேந்தர் அங்கணன் அருளைவியந்து "எந்தையீசனெம்பெரு

மான்'' என்று தொடங்கும் பதிகம்பாடிச் சிவிகையினை வலம் வந்து திருவெண்ணீறணிந்து திருவைந்தெழுத்தோதி உலகெலாம் உய்யும் வண்ணம் சிவபிரான் கட்டளைப்படி சிவிகையில் ஏறியருளினர்.

திருச்சின்னங்களைப் ''பாலறுவாயர் வந்தார்; பரசமய கோளரி வந்தார்; ஞானசம்பந்தர் வந்தார்; முத்தமிழ் விரகர் வந்தார்'' என ஊதினர். பிள்ளையாரும் திருவரத்துறையை அடைந்து திருக்கோபுரவாயிலுக்கு நெடுந்தூரத்திலேயே சிவிகையினின்றும் இறங்கிக் கீழேவிழ்ந்து வணங்கி அயரா அன்புடன் ஆண்டவன் திருமுன் சென்று சென்னிமேற் றிருக்கரங்குவித்து 'என்னையும் பொருளாகஇன்னருள் புரிந்தருளும்,பொன்னடித்தலத் தாமரை போற்றி' எனத்துதித்தனர். பின்னர்ச்சில நாள் அங்குத் தங்கித் திருநெல்வெண்ணெய் முதலிய திருப்பதிகட்கு அன்பருடன் சென்று வணங்கி, திருத்தோணிபுரத்துத் தேவதேவனையும் உமையம்மையையும் உள்ளத்திற் கண்டு உருகிச் சீகாழிக்குச் செல்லத் திருவுள்ளங் கொண்டு அரத்துறை ஐயனிடம் அரிதின் விடைபெற்றுச் சிவிகையிலேறி ஆங்காங்குள்ள அன்பர்கள் வேண்டுகோட்கு இசைந்து அவ்வப்பதிகளை வணங்கி, திருப்பழுவூரை அடைந்து ஆண்டு விமானத்தில் வீற்றிருக்கும் விண்ணவர் பெருமானை வணங்கி மலைநாட்டினர் அங்குச்செய்யும் வழிபாட்டினைச் சிறப்பித்துப் பாடினர்.

அப்பால் திருவிசயமங்கை, திருவைகாவூர், திருப்புறம்பய முதலிய பதிகளை வணங்கிச் சேய்ஞலூரை அடைத்து அது சண்டேசுரநாயனர் பிறந்தபதியாதலின் சிவிகையினின்றும் இறங்கி இறைவனை வணங்கி, தந்தை தாளொடு பிறவித்தாளெறிந்த அந்நாயனர் திருத்தொண்டைத் தமது பதிகத்தில் வைத்துச் சிறப்பித்துப்பாடினர். அப்பால் திருப்பனந்தாள், திருப்பந்தணைநல்லூர் முதலிய தலங்களைப் பணிந்து தமிழ்மாலை சூட்டினர். பின்னர்த் திருவோமாம்புலியூர், திருவாழ்கொளிபுத்தூர், திருக்கடம்பை, திருநாரையூர், திருக்கருப்பறியலூர் முதலிய பதிகட்குச் சென்று பரமனை வணங்கிப் பாமாலைசூட்டிச் சீகாழி ஏகினர். ஆண்டுள்ளார் அடிகளை அன்புமிக்கூர வரவேற்றனர். பிள்ளையார் பிரமபுரப் பெம்மானையும் பிராட்டியையும் பணிந்து தமது திருமாளிகைக்கு

வந்து யாழ்ப்பாணர் அவரிடம் போமாறு விடைகொடுத்தனர். தாயார் போந்து திருநீற்றுக்காப்புச் சாத்தத் தமது திருமடத்திற் றங்கினர். அப்பிரானுர்க்குப் பூணூல் அணியும் பருவமும் வந்தது.

## 4. பூணூல் விழாவும் அப்பர் காட்சியும்

காழிக்கன்று பூணூலணியும் பருவமெய்தியவுடனே தாதையாரும் மற்றை மறையவருங் கூடத் தங்கள் மரபுமுறைக் கேற்ப அச்சடங்கினை நிறைவேற்ற எண்ணினர். பிள்ளையாரும் உலகியல் நடைபெற வேண்டிய தொன்றைக் கருதி உடன் பட்டனர். அஃது அவர்க்கு வேண்டுவதில்லை யென்பது தோன்ற "ஒரு பிறப்பு மெய்தாமையுடையார் தம்மை இருபிறப்பின் நிலைமையினை எய்துவிக்கும் மறைமுனிவர்" என்ருர் ஆசிரியர் சேக்கிழார் பெருமான். உபநயனச் சடங்கு நிறைவேறியது. சடங்கினை நடத்திய மறையவர் பிள்ளையாரை நோக்கி "உமக்கு நான்கு வேதங்களையும் ஓதுதற்கு உரிமை தந்தோம்" எனக்கூறினர். இதனைக் கேட்ட புகலியர்கோன் அளவிறந்த மறைகளையும்அவற்றிற்குஅங்கமான பலகலைகளையும் எடுத்தியம்பினுர். மறையவர் அனைவரும் வியந்து "அல்லையீதல்லையீதென மறைகளும் அன்மைச் சொல்லி னுற்றுதித்திளைக்கும்" சோமசுந்தரக் கடவுளின் திருவருளைப் பிள்ளையார் பெற்றிருப்பதை நினைந்துஅவரைத்தமது கண்முன்வரு தியானப்பொருளென்று இறைஞ்சித் தமக்குள்ள ஐயங்களை யெல்லாம் கேட்டு நீக்கிவாழ்ந்தனர். சண்பை மன்னரும் அம்மறையவர்க்கு எல்லாமந்திரங்களும் தோன்றுவதற்கு மூலமாகவுள்ள மந்திரம் திருவைந்தெழுத்துத்தான் என்பார் "அந்தியுண்மந்திரம் அஞ்செழுத்துமே" என்று பஞ்சாட்சரத் திருப்பதிகத்தினைச் செப்பியருளினர்.

பிள்ளையார் இவ்வாறு வேணுபுரத்தில் வீற்றிருக்குங்காலை, திருநாவுக்கரசர் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர் பெருமையையும் அவருக்கு ஆண்டவன் அளித்த அருளிப் பாட்டையுங்கேட்டு அவரைக் காணுதற்குக் கழுமலம் நோக்கி வந்தனர். அவர் வரவினையறிந்த வேணுபுர வேந்தர் அடியார் பலர் புடைசூழ எதிர் கொண்டு வரவேற்கச் சென்றனர். அப்போழ்து "சிந்தையிடை யருவன்புந், திருமேனிதனிலசைவுங், கந்தைமிகையாங்கருத்தும்,

கையுழவாரப் படையும், வந்திழிகண்ணீர்மழையும், வடிவிற்பொலி திருநீறும், அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய'' ''கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதல் தொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்றே தொழுது'' மகிழ்ந்தனர். அரசும் எதிர்வந்து வணங்க ஒருவர்க்கொருவர் அளவளாவிக் களிகூர்ந்தனர். ஞானக்கன்று அரசினை அழைத்துக் கொண்டு ஆண்டவன் திருமுன் சென்று வணங்கி மீண்டு தமது திருமாளிகைக்கு வந்து நாவுக்கரசருக்கும் ஏனைத்தொண்டர்களுக்கும் அரியவிருந்தளித்தனர். அரசும் அங்குச் சிலநாள் தங்கியிருந்து பின்னர்ச் சிவக்கன்றினிடம் விடைபெற்றுப் பிற பதிகளை வணங்குதற்குச் சென்றனர். அவருடன் சென்று வழியனுப்பிய ஞான வள்ளலார் மீண்டு சீர்காழி வந்து தங்கி மொழி மாற்று, மாலை மாற்று, மடக்கு, இயமகம், ஏகபாதம், இருக்குக் குறள், எழுகூற்றிருக்கை, ஈரடி வைப்பு, முடுகு முதலிய பதிகங்களைப் பரமன் மீது பாடியருளினர். பாணனாரும் பாணினியாரும் தங்களரிய தொண்டினை வழாமல் இயற்றி வந்தனர். பிள்ளையார் தமிழ்நாட்டின்கண் உள்ள திருப்பதிகளனைத்தையும் வணங்குதற்கெழுந்த கருத்தினைத் தமது தந்தையாருக்குத் தெரிவித்தார். சிவபாத இருதயர் ''கவுணியர் குலவிளக்கே! உம்மைப் பிரிந்து யான் ஒரு கணப்பொழுதேனும் வாழேன்; இன்னுஞ் சின்னாட்கழித்து ஒரு வேள்வியியற்றக்கருதியுள்ளேன். அதுவரை நும்மைப் பிரியாதிருக்கத் திருவுளம் பற்றவேண்டும்'' எனக் குறையிரப்ப, நாயனாரும் அதற்கிசைந்து, வெங்குரு விமலனிடம் விடைபெற்றுத் தந்தையாரோடும் மற்ற அடியாரோடும் புறப்பட்டுத் திருக்கண்ணார் கோயில் முதலிய பதிகளை வணங்கி, காவிரியின் வடகரையில் மேற்றிசை நோக்கிச் சென்று திருப்புள்ளிருக்குவேளூர், திருநின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர்; திருமண்ணிப்படிக்கரை, திருக்குறுக்கை, திருவன்னியூர், திருப்பந்தணநல்லூர், திருமணஞ்சேரி, திருவெதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி, திருக்கோடிகா, கஞ்சனூர், திருமங்கலக்குடி, திருவியலூர், திருந்துதேவன்குடி, திருவின்னம்பர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு, திருப்பெரும்புலியூர், திருநெய்த்தானம், திருமழபாடி, திருக்கானூர், திருவன்பிலாலந்துறை, திருமாந்துறை என்னுந் திருப்பதிகடோறுஞ்சென்று பரமனை வணங்கிப் பதிகம் பாடினர்.

## 5. முயலகன் என்னும் நோய் தீர்த்தது.

பின்னர் மழநாட்டிலே காவிரியின் வடகரையே சென்று திருப்பாச் சிலாச்சிராம மென்னுந் திருப்பதியை நெருங்குமுன், அவ்வூரின்கண் கொல்லிமழவன் என்னுஞ் சிற்றரசன் ஒருவன், தன் புதல்வி முயலகன் என்னும் நோயினுல் வருந்துதலைப் பார்த்து அதனைத் தீர்த்தற்கு வேண்டுவன அனைத்துஞ் செய்தும் பயன் படாமை கண்டு மனஞ்சகியானுய்த் தான் சைவ பரம்பரையில் வந்தவனுதலால் அந்நங்கையை ஆண்டவன் திருமுன் கொண்டு போய்விட்டு வைத்தான். பின்னர் ஞானசம்பந்தர் அங்கு வருதலைத் திருச்சின்ன ஒலியால் அறிந்த அவன் உடனே தன்னூரை ஒப்பனை செய்வித்துத் தன் புதல்வியைவிட்டு நீங்கிப் பிள்ளையாரை எதிர்கொள்ளச் சென்று, கண்களில் ஆனந்த அருவி சொரிய அடியற்ற மரம்போல முத்துச் சிவிகைக்கு முன்னே விழுந்தனன். அதுகண்ட ஆளுடைய பிள்ளையார் "எழுக" என்று அருளிச் செய்ய, மழவன் எழுந்து வணங்கி மனமகிழ்ந்து முடியிற் கை குவித்துக் கொண்டு அவர் பின் சென்ருன். பிள்ளையார் திருக் கோபுரத்திற்கருகில் வந்தவுடனே சிவிகையினின்றும் இறங்கி உள்ளே சென்று வலஞ் செய்துகொண்டு திருமுன் சென்றனர். சென்றகாலை, அறிவிழந்து நிலத்திலே கிடக்கும் நங்கையைக் கண்டு "இஃதென்னை?" என்று வினுவ, மழவன் வணங்கி, அடிகேள்! இவள் அடியேன் புதல்வி; முயலகனென்னும் நோயினுல் வருந்துகின்றமையால் இறைவன் திருமுன் கொண்டுவந்து போகட்டேன்" என விண்ணப்பித்தனன். பிள்ளையார் அதனைக் கேட்டுப் பெரிதுமிரங்கி அங்கு நின்றவண்ணமே ஆண்டவனை வணங்கி அவள் நோயை நீக்கும்பொருட்டு, "துணிவளர் திங்கள்" என்றெடுத்து, "மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே" என்று முடியும் திருப்பதிகத்தைப் பாடி முடித்தனர். அம்மங்கை நோய் நீங்கி, எழுந்து பூங்கொடி போல் ஒல்கிவந்து தந்தையின் பக்கலை அடைந்தாள். அதுகண்ட மழவன் மகளோடும் பிள்ளையாரை வீழ்ந்து வணங்கினுன். பிள்ளையார் இறைவனை வணங்கி ஆண்டுச் சிலநாள் தங்கியிருந்தனர்.

## 6. நளிர்சுரம் தீர்த்தலும் (முத்துப்பந்தர் பெறுதலும்)

அதன்பின் சண்பை மன்னர் திருப்பைஞ்ஞீலியையும் திருவீங்கோய்மலையையும் வணங்கிக்கொண்டு, கொங்கு நாட்டிலே உள்ள திருக்கொடிமாடச்செங்குன்றூர் போய் வானவர் கோனை வணங்கி அங்குச் சிலநாள் தங்கினர். அங்கிருக்குங் காலத்திலேயே திருநணு (பவானி) விற்கும் சென்று சிவபிரானை வணங்கி மீண்டும் திருக்கொடிமாடச்செங்குன்றூரில் (திருச்செங்கோடு) வந்துதங்கினர். ஆயகாலை மழைக்காலம் நீங்கிப்பனிக்காலம்வர அடியார்கள் நளிர்சுரத்தால் நலிவுற்றனர். அதனையறிந்த புகலி ஆண்டகையார் "அவ்வினைக் கிவ்வினை" என்னுந்திருநீலகண்டப் பதிகத்தைப்பாடியருளினர். அதனால் அடியார்களேயன்றி அவ்வூரிலும் அந்நாட்டிலுமுள்ளாரும் வெப்பு நோய் நீங்கி மிகமகிழ்ந்தனர். பிள்ளையார் சிலநாள் அங்குத்தங்கியிருந்து பின் அவ்விடத்தைவிட்டு நீங்கி, திருப்பாண்டிக்கொடுமுடி, திருவெஞ்சமாக்கூடல், திருக்கருவூர் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு சோழநாட்டையடைந்தனர்.

சோழநாட்டிலுள்ள திருப்பராய்த்துறை, திருக்கற்குடிமலை, திருமூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருப்பாற்றுறை, திருவெறும்பியூர், திருநெடுங்களம், மேலைத்திருக்காட்டுப்பள்ளி, திருவாலம் பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருவேற்குடி, திருவெண்ணி, திருச்சக்கரப்பள்ளி, திருப்புள்ளமங்கை, திருநல்லூர், திருக்கருகாவூர், திருவவளிவணல்லூர், திருப்பரிதிநியமம், திருப்பூவனூர், திருவாவூர் என்னும் பதிகளை வணங்கித் திருவலஞ்சுழியை அடைந்து இறைவனை வணங்கிக் கொண்டிருந்தனர். அப்போது முதுவேனிற் பருவம் வந்தது. அக்காலத்திற் பிள்ளையார் திருவலஞ்சுழியை விட்டு நீங்கி, திருப்பழையாறைக்குப் போகத் திருவுளங்கொண்டு அடியார்கள் புடைசூழச்சென்று திருவாறை மேற்றளியை அடைந்து வணங்கித் திருச்சத்தி முற்றத்திற் சென்று சிவபெருமானைவணங்கிக் கொண்டு திருப்பட்டீச்சரத்துக்குப் போகப் புறப்பட்டனர். அப்போது சிவபூதம் ஒன்று ஞாயிற்றின் வெம்மையைத் தணிக்கும் பொருட்டுப் பிள்ளையாருடைய திருமுடிக்குமேலே

முத்துப்பந்தரை எடுத்து, பட்டீசர் எம்மை விடுத்தருளினுர்'' என்று பகர்ந்தது. அச்சொல்லும் முத்துப்பந்தரும் வரனின்கண் வயங்க மறைச்சிறுவர் மகாதேவனது மாண்புடை அருளைத்துதித்து நிலத்திலே வீழ்ந்து வணங்கினுர். அவர் ஏவலாளர் அப்பந்தரின் காம்பைப் பிடித்தனர். பிள்ளையார் அம்முத்துப் பந்தர் நிழற்றச் சென்று பட்டீச்சரத்தானைப் பன்முறையும் வணங்கி அவணின்றும் நீங்கித் திருவாறை வடதளி, திருவிரும்பூளை, திருவரதைப்பெரும்பாழி, திருச்சேறை, திருநாலூர்மயானம், திருக்குடவாயில், திருநறையூர், அரிசிற்கரைப்புத்தூர், திருச்சிவபுரம், திருக்குடமூக்கு, திருக்குடந்தைக் கீழக்கோட்டம், திருக்குடந்தைக்காரோணம், திருநாகேச்சரம், திருவிடைமருதூர், திருக்குரங்காடுதுறை என்னும் பதிகளைவணங்கிச் செந்தமிழ்ப் பதிகம்பாடித் திருவாவடுதுறையைச்சேர்ந்தனர்.

## 7. ஆயிரம் பொன் பெறுதல்.

திருவாவடுதுறையிற் செம்மேனியெம்மானைத் தரிசனஞ் செய்துகொண்டிருக்கு நாளிலே, சிவபாத இருதயர் திருமகனுரை நோக்கி ''அரும்பெறல் ஐய! யான் வேள்வி செய்யுங்காலம் நெருங்கிவிட்டது. அதற்குப் பொருளுதவி என்னை அனுப்புதல் வேண்டும்'' எனவேண்ட முத்தமிழ் விரகர் பக்தர்கட்கருள் செய்து பயின்ற பரமனை நோக்கி'' இடரினுந்தளரினும்'' என்னும் இன்னிசைப்பதிகம் பாடினர். ஆயகாலை வேண்டுவார் வேண்டுவன ஈயும் விமலனருளாற் பூதம் ஒன்று விரைந்து வந்து பீடத்தின் மேல் ஆயிரம் பொன் பொதிந்த முடிப்பு ஒன்றுவைத்து, முத்தமிழ் வேந்தர் முன்னின்று ''இந்தக்கிழி பொன்னுலவாக்கிழி; இஃது உமைபாகனுல் உமக்கு அருளிச் செய்யப்பட்டது'' என்று சொல்லி மறைந்தது. பிள்ளையார் திருவருளை நினைந்து கீழே வீழ்ந்து வணங்கி எழுந்து அம்முடிப்பினை எடுத்து முடிமேற் கொண்டு, தாதையார் கையிற்கொடுத்து, சிவபிரானையே தலைவராகக் கொண்டு வேதவிதிப்படி நீரும் காழிப்பதியிலுள்ள மற்ற மறையவரும் வேள்வி இயற்ற இக்கிழி குறையாதுமிகும்'' என்று கூறி அவரை அனுப்பிவிட்டுத் தாம் ஆவடுதுறையில் அமர்ந்தனர்.

## 8. யாழ்முரி பாடியதும் வணிகன் விடந் தீர்த்ததும்.

சின்னாட் சென்றபின் திருஞானசம்பந்தர் திருக்கோழம்பம், திருவைகன் மாடக்கோயில், திருநல்லம், திருவழுந்தூர், திருத்துருத்தி, மாயூரம், திருச்செம்பொன்பள்ளி, திருவிளநகர், திருப்பறியலூர், திருவேட்டக்குடி என்னுந்திருப்பதிகளைக்கண்டு வணங்கிக்கொண்டு தருமபுரத்தைச் சார்ந்தனர். அப்பதி யாழ்ப்பாணர் தாயார் பிறந்த ஊராதலின் அங்குள்ள அவர் சுற்றத்தார்கள் எதிர்கொண்டு வணங்கித் துதித்தார்கள். திருநீலகண்டப் பெரும்பாணர் சீகாழிச்செம்மல் இசைத்தருளும் திருப்பதிகங்களைத் தாம் யாழிலிட்டு வாசிக்கும் பெரும் பேற்றை அவர்களிடங் கூறி மகிழ்ந்தனர். அவர்கள் "நீர் திருப்பதிக இசையை அளவுபெற யாழிலிட்டு வாசித்தலினாலே உலகமுழுவதும் இசை விளங்குக" என்றார்கள். இதனைக்கேட்ட பாணனார் உளநடுங்கி உரை நடுங்கி உடல் நடுங்கி நாயனாரை நோக்கி வணங்கி "அடிகேள் திருப்பதிக இசை அளவுபடாத தன்மையை இவர்களேயன்றி உலகிலுள்ளாரனைவரும் அறிந்து உய்யும்வண்ணம் தேவரீர் ஒரு திருப்பதிகம் பாடியருள வேண்டும்" என வேண்டினர். இன்னிசை வேந்தர் காரணரதி காரணராங் கண்ணுதற் பெருமானை வணங்கித் திருப்பதிகத்தின் உண்மை, மக்கள் கண்டத்திலும், கருவியிலும் இசை நூலிற் கூறப்பட்ட இசைமுயற்சிகளால் அடங்காமையை அறிவுறுத்தும் பொருட்டு, "மாதர் மடப்பிடி" என்னும் அருமைத் திருப்பதிகத்தைப் பாடியருளினர். பாணனார் அப்பதிக இசையை முன்போலத்தமது யாழிலே இட்டு வாசிக்கப்புக, அது அதனிலடங்காமை கண்டு அம்முயற்சியை விடுத்துப் பெரிதும் அச்சங்கொண்டு அடிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று, " அடிகள் அருளிச்செய்த பதிக இசையை யாழிலே ஏற்பேன் என்று சொல்லப் பண்ணியது இந்தயாழன்றோ! ஆதலின் இதனை உடைத்தெறிவேன்" என்று அதனை மேலே ஓங்குதலும் பிள்ளையார் அதனைத்தடுத்து "ஐயரே! இந்தயாழைத்தாரும்" என வாங்கிக்கொண்டு,

*"ஐயர்! நீர், யாழிதனை முரிக்கு மதெனுளுடை யாளுடனே கூடச்
செய்ய சடை யாளித்த திருவருளின் பெருமையெலாந்தெரிய நம்பால்
எய்தியவிக் கருவியினி லளவுபடுமோ நந்தமியல்புக் கேற்ப
வையகத்தோ ரறிவுறவிக் கருவியளவை யினியற்றல் வழக்கேயென்றார்"*

என்று அருளிச்செய் துயாழைக் கொடுத்தருளினர். பெரும்பாணர் பிள்ளையாரைத் தொழுது யாழை வாங்கி முடி மேற்கொண்டனர்.

சில நாளானபின் செந்நெறிச் செல்வர் அத்தருமபுரத்தை அகன்று, திருநள்ளாற்றை அடைந்து திருக்கோயிலுட்புகுந்து சிவபிரானை வணங்கி, "போகமார்த்த பூண்" என்னும் அரிய பதிகத்தை அதன் இசை யாழ்நரம்பிலே அமையும்படி பாடியருளினர். பாணரும் தமது யாழிலே இட்டு வாசித்தனர். பிள்ளையார் பெரு மகிழ்வுற்று அவணின்றும் திருச்சாத்தமங்கைக்குச் செல்லுங் கால் அப் பதியிலுறைவோராகிய திருநீலநக்க நாயனர் எதிர் கொண்டு வணங்க, அவரோடும் சென்று அயவந்தி என்னும் ஆலயத்துட்புக்கு ஆண்டவனை வணங்கிக் கொண்டு திருநீல நக்கர் திருமாளிகைக்குச் சென்று திருவமுது செய்துகொண்டு அன்றிரவு அங்குப் பள்ளிகொண்டனர். மறு நாட்காலையில் திரு நீலநக்கரோடும் அயவந்திக்குச் சென்று ஆண்டவனைத் தொழுது பாடிய திருப்பதிகத்தில் அந்நீலநக்கரின் அரிய தொண்டினைச் சிறப்பித்துப் பாடினர்.

அங்குச் சிலநாள் அமர்ந்து, பின்னர் திருநீலநக்கருக்கு விடைகொடுத்துத் தாம் திருநாகைக்காரோணம், கீழ்வேளூர் என்னும் பதிகளை வணங்கிக்கொண்டு பிறபதிகளையும் தொழு தற்கு எழுந்தருளினர். திருச்செங்காட்டாங்குடி என்னும் திருப் பதியிலுறையும் சிறுத்தொண்டநாயனு ரென்னும் பெரியார், அடிகள் எழுந்தருளுவதைக்கேட்டு விரைந்தோடி அடிகளை எதிர் கொண்டு வணங்கித் தமது திருப்பதிக்கு அழைத்துச் சென்றனர். காழிஞானக்கன்றும் ஆங்குள்ள கணபதீச்சரம் என்னும் திருக் கோயிலுக்குச் சென்று கடவுளைத்தொழுது சிறுத்தொண்டர் திருத் தொண்டினைச் சிறப்பித்துத் திருப்பதிகம்பாடி அந்நாயனுருடைய திருமாளிகையிற் சிலநாள் தங்கினர்.

பின்னர், திருமருகலுக்குச்சென்று சிவபெருமானைத் தொழுது கொண்டு சிலநாள் அங்கிருந்தனர். அந்நாளிலே வழிச் செல்லும் வணிகன் ஒருவன் ஒரு கன்னியையும் உடனழைத்துக் கொண்டு வந்து அத்திருக்கோயிலுக்குப் புறத்திலேயுள்ள ஒரு மடத்திலே தங்கி அன்றிரவு துயின்றனன். துயின்ற அவன் அரவொன்றினால் தீண்டப்பட்டு ஆவியகன்றனன். பாம்பு தீண்டியும் அவனைத் தான் தீண்டாமல் அந்நங்கை அவனருகில் வீழ்ந்து புரண்டு அழுதாள். நச்சுமருத்துவர் பலர் வந்து தங்கள் நற்றிறமைகளைக் காட்டியும் அவன் பிழைத்தானில்லை. பொழுதும் புலர்ந்தது; அப்பொற்கொடி போல்வாள்,

"அன்னையையும் அத்தனையும் பிரிந்து நின்னை அடைவாக
உடன் போந்தேன் அரவால் வீடி
என்னையும் இங்கிட்ட கன்றாய் யான் என்செய்கேன்
இவ்விடுக்கண் தீர்க்கின்றார் யாருமில்லை
மன்னிய சீர்வணிகர் குலமணியே யானும் வாழேன்
என்றென்றயர் வாள் மதியினாலே
சென்னியிளம் பிறையணிவான் கோயில் வாயிற் றிசை
நோக்கிக் கைதொழுவாள் செயலொன்றில்லாள்"

"அடியாரா மிமையவர்தங் கூட்டமுய்ய அலைகடல்
வாய் நஞ்சுண்ட வமுதே செங்கண்
நெடியானும் நான்முகனுங் காணாக் கோல நீலவிட
அரவணிந்த நிமலா வெந்து
பொடியான காமனுயிர் இரதி வேண்டப் புரிந்தளித்த
புண்ணியனே பொங்கர் வாசக்
கடியாரு மலர்ச்சோலை மருங்கு சூழுங்கவின்
மருகற்பெருமானே காவா யென்றும்"

"வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேற் சீறி வருங்காலன்
பெருங்கால வலயம் போலுஞ்
செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலஞ்
சிதைந்துருள உதைத்தருளுஞ் செய்யதாளா
இந்தவிடக் கொடுவேக நீங்குமாறும்
யானிடுக்கட் குழிநின்று மேறுமாறும்
அந்திமதிக் குழவிவளர் செய்ய வேணி யணி
மருகற் பெருமானே யருளா யென்றும்"

பலவாறு கூறிக் குறையிரந்து வேண்டினள். மருகல் மாணிக்கத்தை வணங்கும் பொருட்டு எழுந்தருளிவரும் இரக்கவடி

வினராம், எம்பந்தநீக்குஞ் சம்பந்தப்பிள்ளையார் திருச்செவியில் அத்துன்பஒலி சென்று சார்ந்தது. பிள்ளைப்பெருமான் உடனே உள்ளங்கனிந்து அங்குச்சென்று "நங்காய்! அஞ்சற்க; உனக்கு நேர்ந்தது யாது? கூறுக" என்றனர். கன்னிகை கண்ணீர் சொரிந்து பிள்ளையார் திருவடியில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று, "எய்ப்பினிற் கிடைத்த வைப்புப் போல்வீர்! வைப்பூரிலிருக்கும் தாமன் என்னும் என்தந்தைக்குப் புதல்வியர் ஏழுவர்; அவர்களில் என்னையொழிய மூத்தோர்கள் அறுவரையும் தன்மருகனுகிய இவனுக்கே மணஞ்செய்து கொடுப்பதாகச் சொல்லிச் சொல்லிப் பிறரிடம் பெரும் பொருள் வாங்கிக்கொண்டு அவர்கட்குக் கொடுத்து விட்டான். அதுகண்டு உளைந்த இவனுக்கே மனைவியாதல் வேண்டுமென நினைந்த யான், என்தாய்தந்தையாரை மறைத்து இவனையே சார்ந்து வந்தேன். இவனும் பாம்பினுல் இறந்து பட்டனன்; அடியேன் கடல் நடுவே கலங்கவிழப் பெற்ருர்போல் கலங்கி நிற்கின்றேன்; அடியேன் துன்பமனைத்தும் நீங்கத்தேவரீர் எழுந்தருளிவந்தீர்" என்ருள். வண்டமிழ்ச் செல்வர் வணிகன் விடத்தை நீக்கி மாதரசியின் மனக்கவலையைப் போக்க மனங்கொண்டு மருகற் பெருமான்மேல் "சடையாயெனுமால்" என்று தொடங்குந் திருப்பதிகத்தைப் பாடியருளினுர். உடனே வணிகன் விடம்நீங்கி எழுந்து பிள்ளையாரின் பொன்னடியில் வீழ்ந்து வணங்கினன். மங்கையும் அங்ஙனமே செய்து மகிழ்ந்தனள். பிள்ளைப் பெருமான் அவ்விருவருக்கும் அங்கே மணஞ்செய்வித்து அனுப்பினர்.பின்னர்ச் சிறுத்தொண்டர் அங்கு வந்து தமது ஊருக்கு எழுந்தருளவேண்டு மென்று பெரிதும் வேண்ட, பிள்ளையார் மீண்டும் திருச்செங்காட்டாங்குடி போதற்குத் திருவுளங்கொண்டு மருகற் பெருமானிடம் சென்று விடைகேட்டனர். அப்பெருமான் செங்காட்டாங்குடித்திருக்கோலத்தை அங்கேயேகாண்பித்தனர். பிள்ளையார் "அங்கமும் வேதமும் ஓதுநாவர்" என்னும் அரிய பதிகம்பாடி அங்கேயே தங்கியருளினர்.

## 9. படிக்காசு பெறுதல்

சின்னுட்கழித்து அப்பதியைநீங்கித் தம்மைத் தொடர்ந்த சிறுத்தொண்ட நாயனுருக்கு விடை கொடுத்துத் திருப்பதிகள்

பலவற்றைத் தொழுது கொண்டு திருப்புகலூருக்கு அண்மையில் வருங்காலை, அங்குள்ள முருகநாயனுர் எதிர்கொண்டு வணங்கினுர். அவரோடும் அவருடன் வ ந் த ப ல அடியார்களோடும் சென்று திருக்கோயிலையடைந்து தே வ ர் கோ அறியாததேவ தேவனை வணங்கி முருகநாயனுர் திருமடத்திற் சென்று அவர் வேண்டுகோட்கிசைந்து தங்கினர். அவ்வாறு இருக்கும் நாளிலே வர்த்தமானீச்சரத்தை வணங்கி முருகநாயனுர் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பதிகம்பாடியருளினர். பின்னர்த் "திருநாவுக்கரசுகள் திருவாரூர்நாதனை வணங்கிவிட்டுத் திருப்புகலூருக்கு வருகின்ருர்" எனக்கேள்வியுற்றுப் பேரன்போடு அவரை எதிர்கொள்ளும் பொருட்டுத் திருக்கூட்டத்தோடுந் திருப்புகலூர் எல்லையைக் கடந்து சென்ருர். ஆண்டஅரசும் சிவக்கன்றுக்கு எதிரேவந்தார். பிள்ளைப்பெருமானும் "அப்பரையிங்கணையப் பெறும் பேரருளுடையோம்" என எண்ணிமகிழ்ந்தனர். இருவரும் ஒருவரையொருவர் வணங்கி நல்வரவு நவின்று களிகூர்ந்தனர். பிள்ளையார் "அப்பரே! நீர் வருநாளிலே திருவாரூரில் நிகழ்ந்த சிறப்பினைச் சொல்லியருளும்" எனவேண்ட, நாவின்வேந்தரும் "முத்துவிதானமணி பொற்கவரி" எனும் நற்றமிழ்ப் பதிகம் ஒன்ருல் திருவாதிரைச் சிறப்பினைச் செப்பியருளினர். அதைக்கேட்ட அருட்கலை ஞானக் கன்று "நான் திருவாரூருக்குப் போய் வன்மீக நாதனை வணங்கிவிட்டு மீண்டும் இவண் வந்து உம்முடன் இருப்பேன்" என்று சொல்லியருளினர். தா ண் ட க வே ந் த ர் திருப்பூம்புகலூருக்குச் சென்றருளினர். பிள்ளையார் சென்று திருவிற்குடிவீரட்டத்தை வணங்கிக்கொண்டு திருவாரூரை அடைந்து புற்றிடங்கொண்ட புராதனனைப் போற்றிப் பதிகம்பாடி அப்பதியில் அமர்ந்தருளினர். ஆண்டுள்ள 'அரநெறி'யென்னும் ஆலயத்தையுங் காலந்தோறுஞ் சென்று பணிந்து வந்தார். பின்னர்த் திருவலிவலம், திருக்கோளிலி முதலிய பதிகளைப் பணிந்துகொண்டு ஆரூரை அடைந்தனர். சிலநாளானபின் அப்பரைக்காணும் அ வா மி க் கு அப்பதியை நீங்கித் திருப்பனையூர் சென்று இறைவனை ஏத்தித்திருப்புகலூரை நெருங்கித் தம்மைஎதிர்கொண்ட அப்பர், முருகர், முதலிய அடியார்களோடும் சென்று வர்த்தமானீச்சரத்தானை வணங்கிவிட்டு முருகநாயனுர் திருமடத்திற் றங்கியருளினர். அப்போது திருநீலநக்கரும் சிறுத்தொண்டரும் அங்கு வந்து சேர்ந்தனர்.

இவ்வாறு சிலநாள் கழியவே பிள்ளையாரும் அப்பரும் பிற பதிகளை வணங்கும் விருப்பத்தை மேற்கொண்டு முருகநாயனுர் அங்கேயே தங்கவும், நீலநக்கரும் சிறுத்தொண்டரும் அவரவர் கள் இருப்பிடஞ் செல்லவும் செய்து புறப்பட்டனர். பிள்ளையார் அப்பரை விட்டுப்பிரியாமல் முத்துச் சிவிகை பின்னே வரச்செல் லுங்காலை, அப்பர் "தேவரீருக்குச் சிவபெருமான் அருளிச்செய்த இம்முத்துச் சிவிகையில் ஏறிவருதலே திருவருட்சம்மதமாகும்" என வேண்டிக் கொள்ள, பிள்ளையார், "அப்பரே உமது கருத்து இதுவாயின் யான் அவ்வாறே ஏறிவருவேன்; ஆனுல் அடியார் களோடும் அடிகள் எங்கு எழுந்தருளுகிறீரோ அங்கு வருவேன்" என்று சொல்லியருள நாவுக்கரசரும் 'நல்லதெ'ன இசைந்தருளி னர். அன்று முதல் அங்ஙனமே செய்வாராகி அடியாரோடும் நடந்து திருவம்பரை அடைந்தனர். பிள்ளைப் பெருமானும் பிறை யணி பெருமான் பேரருள் வழியே நிற்பாராகி முத்துச் சிவிகையில் ஏறித் திருப்புகலூரை நீங்கி "அப்பர் எங்குற்ருர்" எனவினுவிக் கொண்டே போய்த் திருவம்பரைச் சேர்ந்தனர். அங்குள்ள மாகாளம் என்னுந் திருக்கோயிலை வணங்கிக் கோச் செங்கட் சோழநாயனுர் செய்தருளிய பெருந்திருக்கோயிலை அடைந்து வணங்கி அவர் தொண்டைச் சிறப்பித்துப் பதிகம்பாடியருளினர். சில நாளானபின் திருவம்பரை நீங்கி நாவுக்கரசரோடும் திருக்கட வூரை நெருங்கிச் சென்று அங்கிருந்து எதிர்கொண்டு வந்து அழைத்த குங்கலியக்கலய நாயனுரோடும் கடவூர் வீரட்டஞ் சென்று காலகாலனை வணங்கிவிட்டுக் கலயர் திருமாளிகையில் திருவமுது செய்து திருக்கடவூர் மயானத்தையும் வணங்கிக் கட வூரிற் சிலநாளைக் கழித்தனர்.

பின்னர், திருக்கடவூரை விட்டு நீங்கித் திருவாக்கூர், திரு மீயச்சூர், திருப்பாம்புரம், என்னுந் திருப்பதிகளை வணங்கிக் கொண்டு திருவீழிமிழலையை அடைந்து திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளை வணங்கித் திருப்பதிகம் பாடி, புறத்தே சென்று நாவுக் கரசர் ஒரு திருமடத்திலே தங்க, நல்லிசை ஞானசம்பந்தர் ஒரு திரு மடத்திலே தங்கினர். அவ்விருவரும் பேணு பெருந்துறை. திருத் திலதைப்பதி என்னும் பதிகளை வணங்கிக் கொண்டு மீண்டும் வீழிமிழலையிற் சென்று தங்கினர். அப்போது வேணுபுர வேதியர்

கள் பலர் வெங்குரு வேந்தரைக் காண வேண்டு மென்னும் அவா உந்த, வீழிமிழலையை யடைந்து தங்களைஎதிர்கொண்டு வரவேற்ற அவ்வூர் அந்தணரோடும் ஆலயத்துக்குச் சென்று ஆண்டவனை வணங்கி விட்டுப் பிள்ளையார் இருக்குந் திருமடத்தைச் சார்ந்து அடிகளை வணங்கி, "பெரியீர்! எங்களோடு காழி நகரைக்காண எழுந்தருளல் வேண்டும்" எனவேண்டினர். பிள்ளையார் மன மகிழ்ந்து "நன்று நன்று; இன்று கழித்துத் திருவீழிமிழலையான் திருவருளைப் பெற்றுக் கொண்டு நாளை உங்களோடு வருவேன்" என்றருளிச் செய்தனர். வீழிமறையவர் வெங்குரு மறையவருக்கு விருந்தளித்தனர். அன்றிரவு பிள்ளையார் கனவின் கண் தோணியப்பர் தோன்றி "நாம் திருத்தோணியில் வீற்றிருக்குந் திருக்கோலத்தை இத்திருவீழிமிழலையில் உள்ள விண்ணிழி விமானத்திலேகாட்டுவோம்" என்று சொல்லி மறைந்தருளினர். பிள்ளையார் விழித்து எழுந்து திருக்கோயிலுக்குச் சென்று அங்கே ஆண்டவனைத்தாம் முன்னே திருத்தோணியிற் கண்டபடியே கண் குளிரக்கண்டு திருவுளமகிழ்ந்து "மைம்மரு பூங்குழல்" என்னும் வினவுரைப்பதிகம் பாடி வெளியே போந்து காழிமறையவர்களை நோக்கித் "திருத்தோணியப்பர் தாம் வீற்றிருக்கும் திருப்பதிகள் தோறுஞ் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடி வருதலில் எனக்குள்ள பேரவாவைக்கண்டு, தாம் அங்கு வீற்றிருக்குத் திருக்கோலத்தை இங்கேயே எனக்குக் காட்டினர்' ஆகலின் நீங்களனைவரும் சீகாழிக்குச் செல்வீர்களாக" எனச்செப்பியருளினர். அவர்கள் அவ்வாறே அகன்றனர்.

காழிக்கன்று ஆமூர் அரசோடும் நாடோறும் தங்கள் நாயகனை நலம்பெற வணங்கிக் கொண்டிருக்கும் நாளிலே மழையின்மையால் பஞ்சம் உண்டாயிற்று; அதனால் உயிர்களெல்லாம் உணவின்றி உளைந்தன. தொண்டர்களையும் பசிப்பிணி தொடர்ந்து வருத்தியது. அதுகண்ட செந்தமிழ்த் தொண்டர் இருவரும் "சிவபிரான் திருவடியையே சிந்திக்கும் சீரிய தொண்டர்கட்கும் கவலைவருமோ" எனத் திருவுளமிரங்கி இறைவன் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டே அன்றிரவு துயின்றனர். ஆயகாலை ஆண்டவன் அவர்களிருவருடைய கனவிலுந்தோன்றி, "காலமாறுதலால் நீங்கள் மனக்கவலை அடையீராயினும்; உங்களை வழிபடும்

அடியார்களின் வருத்தத்தை ஒழித்தற் பொருட்டு, இவ்வற்கடம் நீங்கும் வரைக்கும் நாம் நாடோறும் திருக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் ஒவ்வொரு காசு உங்களுக்குத் தருகின்றோம்" எனச்செப்பி மறைந்தருளினர், பிள்ளையார் விழித்து எழுந்து திருவருளை வியந்து துதித்து நாவுக்கரசரொடும் திருக்கோயிலுக்குச் சென்று கிழக்குப் பீடத்திலிருக்கும் காசினை விருப்பத்தோடும் தொழுது எடுத்துக்கொண்டு வந்து "நாடோறும் சிவனடியார்களனைவரும் வந்து திருவமுது செய்யக்கடவர்" எனப் பறைசாற்றி இரண்டு காலங்களிலும் தமது திருமடத்தில் வரும் அடியார்களுக்குக் கறி, நெய், பால், தயிரோடு உணவு கொடுத்துக் கொண்டு வந்தனர். அரசும், கன்றுபோலவே மேற்குப் பீடத்திலே வைக்கப்பட்டிருக்கும் காசினால் அமுதுத்தொண்டு செய்து வந்தனர். இங்ஙனம் நிகழும் நாளிலே பிள்ளையார், அப்பர் திருமடத்தில் அடியார்கள் காலம்பெற அமுது செய்தலைக் கண்டு தமது திருமடத்துள்ள அடுதொழிலாளரை நோக்கி, "நீங்கள் இங்கேவரும் அடியார்களுக்குக் காலம் பெற உணவு அட்டு உண்பிக்காமைக்குக் காரணம் யாது" எனக்கடவினர். அவர்கள் அடிகளை வணங்கி நின்று "தேவரீர் கடவுளிடத்திற் பெறுங்காசினை நாடோறும் பண்டம் வாங்குவதற்குக் கொண்டு போனால் அதற்கு வாசி கேட்கிறார்கள்; அப்பர் பெறுங்காசோ வாசியின்றி ஏற்றுக்கொள்ளப்படுவதால் இங்ஙனம் நிகழுகிறது" என்றனர். அதனைக் கேட்டபிள்ளையார், "அப்பர் கைத்தொண்டு செய்தலால் அவருக்கு வாசியில்லாத காசு அளிக்கப்படுகிறது" என்று சிந்தித்து, "இனிவரும் நாட்களிலே வாசியில்லாத காசு பெறும் பொருட்டுப் பாடுபடுவேன்" எனத்திருவுளங்கொண்டு மறு நாளே திருக்கோயிலுக்குச் சென்று சிவபிரானை வணங்கி, "வாசி தீரவே காசு நல்குவீர், மாசின் மிழலையீர் ஏசலில்லையே" என்னுந்திருப்பதிகம் பாடி நற்காசினைப் பெற்றனர். அந்தக் காசைக் கொண்டுபோய்ப் பாகுகர்கள் கடையிலே காட்ட "இக் காசு மிகநன்று; வேண்டும் பண்டங்களை நாம் தருவோம்" என்று கொடுத்தனர். அன்று தொடங்கி அடியார்களுக்குக் காலம் பெறத்திருவமுது செய்யப்பட்டது. இருவருடைய திரு மடங்களிலும் நாடோறும் எண்ணிறந்த சிவனடியார்கள் வந்து

உணவு உண்டு உள்ளமகிழ்ந்திருக்கும் நாளிலே, எங்கும் மழை பெய்து உணவுப் பொருள்கள் மிகவும் விளைந்தமையால் நாடு செழிக்க உயிர்களெல்லாம் துன்பம் நீங்கி இன்பமுற்றன.

## 10. திருமறைக்காட்டுக் கதவினைத் திறப்பித்தடைத்தல்

சின்னாட் கழிந்தபின் நாயன்மார்களிருவரும் வீழிமிழலையைவிட்டு அகன்று திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு, திருப்பெருவேளூர், திருக்கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காருயில், திருத்தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தெங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை, திருத்தண்டலைநீணெறி, திருக்களர் முதலிய திருப்பதிகளைத் தொழுது கொண்டு, திருமறைக் காட்டினை அடைந்து திருக்கோயிலுட் புகுந்து வலம் வந்து, மறைகள் வழிபட்டுத் திருக்காப்புச் செய்த அன்று முதல் அடைபட்டேயிருக்கின்ற திருவாயிலுக்கு முன் வந்து, மறைகளாலே அடைக்கப்பட்ட அத் திருக்கதவை அம்மறைகளை ஓதும் அடியார்கள் திறக்காமையால் மக்கள் வேறோர் வாயில் அமைத்து அதன் வழியே சென்று ஆண்டவனை வழிபடுகிறார்கள் என்பதைக் கேட்டறிந்தனர். பிள்ளையார் நாவுக்கரசை நோக்கி "அப்பரே! நாம் எப்படியும் நேர்வாயிலைத் திறந்தே இறைவனை வணங்குதல் வேண்டும்; ஆதலால் இந்தத் திருக்கதவு திறக்கச் சிவபெருமான்மீது நீரே திருப்பதிகம்பாடும்" என்றனர். அங்ஙனமே திருநாவுக்கரசர் பாடத்தொடங்கிப் பத்துப்பாட்டு நிரம்பப்பாடியும் திருக்கதவு திறக்கப்படாமை கண்டு மனம் நொந்து "இரக்க மொன்றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலேபாடி வணங்கினார். திருமறைக் காட்டீசன் திருவருளாலே திருக்காப்பு நீங்கப்பெற்றது. அப்போது நாயன்மாரிருவரும் வீழ்ந்து வணங்கினர்; அடியார்களனைவரும் மகிழ்ச்சி மீக்கூர ஆரவாரித்தனர். பிள்ளையாரும் அப்பரும் பேரின்ப வெள்ளத்திலே அமிழ்ந்து எழுந்து உள்ளே சென்று ஒருவனாய் உலகேத்த நின்றவனைக் கண்குளிரக் கண்டு கழிபேருவகை யுடையாராய்த் திருப்பதிகங்கள் பாடி. அம்மையப்பனை அரிதிற் பிரிந்து வெளியேவந்தனர்.

ஆயகாலை நாவுக்கரசர் ஞானசம்பந்தரை நோக்கி "எம்பெருமான் திருவருளால் இக்கதவு எஞ்ஞான்றும் திறக்கவும் அடைக்கவும் உரியதாகும் பொருட்டுத் தேவரீர் இஃது அடைக்குமாறு ஆண்டவன்மேல் அழகிய பதிகம் பாடியருளும்" எனவேண்டினர். பிள்ளையாரும் அதற்கிசைந்து, "சதுரம்மறை" என்று தொடங்கும் திருப்பதிகத்திலே அந்த முதற்பாட்டைப் பாடி முடித்த அளவிலே திருக்கதவு அடைக்கப்பட்டது. பிள்ளையார் திருப்பதிகத்தைப் பாடிமுடித்தனர். பெரியார் இருவரும் பிரானைப்பணிந்து பெரு மகிழ்வெய்தினர். அன்று முதல் அக்கதவு திறக்கவும் அடைக்கவுமாயிற்று. அங்கே நிகழ்ந்த செயற்கரிய செயலைக்கண்ட அடியார்களனைவரும் இறும்பூதெய்தி மயிர்பொடிப்ப, கண்ணீர் சொரிய அடிகள்மார் இருவருடைய திருவடிகளிலும் வீழ்ந்து வணங்கினர்.

பெருந்தகையா ரிருவரும் தத்தம் திருமடத்தில் வந்து தங்கிய பின்னர். சொல்வேந்தர் ஞானசம்பந்தரின் அருட்செயலும் பிறவுமெண்ணித் துயில்கொள்ளுங்காலை, சிவபெருமான் அவர் கனவிற்றோன்றி "நாம் வாய்மூரிலிருக்கின்றோம் அங்கேவா" எனக்கூறிச் சென்றனர். வாகீசர் விரைந்து எழுந்து கைகளை முடியிற்குவித்து அவர் பின்விரைந்து சென்றனர். அவர் நெருங்குவார் போலத் தோன்றியும் நெருங்காமை கண்டு நெடுந்தூரம் சென்றனர். கடவுள் அண்மையிற் காட்சி கொடுப்பவர் போல ஒரு திருக்கோயிலை எதிரே காண்பித்து அதனுள்ளே புகுந்தருள, அரசும் அவண் விரைந்துதொடர்ந்தனர். பிள்ளையாரும் அப்பர் வாய்முருக்குச்சென்றார் என்பதையுணர்ந்து ஆங்குவந்து கூடினர் அப்போது ஆண்டவன் அம்மையோடும் ஆடல்காட்ட, பிள்ளையார் வணங்கித் திருப்பதிகம் பாடினர். பின் அப்பரோடு திருவாய்மூர் சென்று சிவபிரானை வணங்கிச் சின்னாட்கழித்துத் திருமறைக்காடு வந்து சேர்ந்தனர்.

## 11. பாண்டிநாட்டுப் பயணம்

மதுரையம்பதியிலுள்ள 'நெடுமாறன்' என்னும் பாண்டி மன்னன் தான் முன்செய்த தீவினையினாலே சமணர்கள் சூழ்ச்சியுட்பட்டுச் சைவசமயத்தை விட்டுச் சமணத்தைச் சார்ந்தனன். 'மன்

னன் எப்படி மன்னுயிர் அப்படி' ஆதலின் குடிகளும் அவ்வாரு யின. மயிர் பறிக்கப்பட்ட தலையையும், ஊத்தை வாயையும், உறி பொதிகலனும் மயிற்பீலியுங் கொண்ட கையையும், பாயுடையை யும் மனம் போல மாசுண்ட உடலையும், வெற்றரையையுமுடைய சமணர்களே பாண்டிநாடெங்கும் பரந்து திரிவாராயினர். இங்ஙனம் பாண்டிநாடெங்கும் மறைநெறியும் சைவத்துறையும் மாசடைந்து, சமண சமயமே தழைத்தோங்கியும், அம்மன்னன் மனைவியாராகிய 'மங்கையர்க்கரசி' யாரும் அவ்வரசனது முதலமைச்சராகிய 'குலச்சிறை' நாயனுரும், தாங்களும் அப்பாண்டியனும் பாண்டி நாட்டாரும் பிறரும் செய்த நல்வினையினுல் சைவர்களாகவே இருந்து வந்தனர். அவர்கள் அந்நாட்டிலுள்ள நன்மக்கள் பொருட்டுப் பெருங்கவலை கொண்டு, தாங்கள் சைவவழியில் ஒழு குந்தன்மை அரசனுக்கு விளங்கா வண்ணம் நடந்து வந்தனர். இங்ஙனம் ஒழுகும் நாளிலே உலகனைத்தும் உய்யுமாறு திருவ வதாரஞ் செய்தருளிய திருஞான சம்பந்தப் பெருமானுரது செயற் கரிய செயல்களையும் அவர் திருமறைக் காட்டிலிருப்பதையும் பாண்டிநாடு பண்டுசெய்த தவத்தாற்கேள்வியுற்று அளவிறந்த மகிழ்ச்சியோடு சில ஏவலாளரைத் திருஞானசம்பத்த மூர்த்தி நாய ஞர் எழுந்தருளியிருக்கு மிடத்திற்கு அனுப்பினுர்கள்.

அவ்வேவலாளர் நாடுங்காடும் நதியுங்கடந்து திருமறைக் காட்டையடைந்து ஆளுடைய பிள்ளையார் அமர்ந்தருளிய திரு மடத்தைச் சார்ந்து தங்கள் வரவை வாயிற்காப்போருக்குத் தெரி விக்க, அவர்கள் உள்ளேபோய் நாயனுர் திருவடியை வணங்கி நின்று, 'அடிகேள்! பாண்டிமாதேவியாராகிய மங்கயர்கரசியாரும் கோதில்லா அமைச்சராகிய குலச்சிறையாரும் ஏவ, தேவரீர் திரு வடிகளை வணங்குதற்குச் சிலர் புறத்து வந்து இறுத்தனர். என்று விண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் திருவருள் சுரந்து, 'அவர்களை இங்கே அழையுங்கள்' என்று அருளிச்செய்தனர். வாயிலாளர் அவர்களை அழைக்க, அவர்கள் உள்ளே புகுந்து புகலி வேந்தரின் பொற்பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுந்து கூப்பிய கையினராய் நின்றனர். பிள்ளைப்பெருமான் அவர்களை அரு ளொழுக நோக்கி, " மங்கையர்கரசியரும் குலங்சிறையாரும் நல முடன் இருக்கின்றனரா " என்று வினவியருளினர். அவர்கள்

'ஆம்' என்று சொல்லி, பின் " ஏழுலகமும் உய்யுமாறு திருவவ தாரஞ் செய்தருளிய பரங்கருணைத் தடங்கடலே! பாண்டிமன்ன னும் அந்நாட்டவரும் சமணர்கள் சூழ்ச்சியுட்பட்டு, சிவசாதனங் களைக்கைவிட்டுச் சமணமதத்திற் புகுந்தனர்; அதனைப் பொருத மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மிகுந்த கவலைகொண்டி ருந்தனர். பின்பு தேவரீர் பெருமையைக் கேள்வியுற்று அச்செய் தியை அடிகளுக்கு விண்ணப்பிக்கும் பொருட்டு அடியேங்களை இங்கு அனுப்பினர் " என்றனர். அது கேட்ட அரனடியாரனைவ ரும் ஆளுடைய பிள்ளையாரை வணங்கி, " அடிகேள்! தேவரீர் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளி, சமணர்களை வாதிலே வென்று, சைவசமயத்தை நிலைநிறுத்தி, பாண்டி மன்னனைத் திருநீறு இடு வித்து உய்விக்கும் பொருட்டுத் திருவுளங் கொண்டருள வேண் டும் " எனவேண்டினர். பிள்ளையாரும் அவர்கட்கு அருள்புரிந்து, நாவுக்கரசரோடும் திருக்கோயிலுட் சென்று மறைக்காட்டுமண ளனை வணங்கி, திருக்கோபுரத்துள் இருந்து பாண்டிமாதேவியா ரும் குலச்சிறையாரும் விடுத்த செய்தியை அவருக்குச் சொல்லித் தாம் பாண்டி நாட்டுக்குச் செல்லத்துணிந்தருளினர்.

அப்பொழுது சொல்லரசர், " அடிகேள்! நீங்கள் பிள்ளைப் பருவம் நீங்காதிருக்கின்றீர்கள்; அச்சமணர்கள் செய்யும் வஞ்ச னைக்கோ ஓரளவேயில்லை; தேவரீருக்குக் கோட்களும் வலியில; ஆதலின் அங்கு எழுந்தருளுதற்கு யான் உடன்படேன் " என மறுத்தருளினர். உடனே பிள்ளையார் " அப்பரே! உமையொரு பாகன் நமது உள்ளத்தையே உறைவிடமாகக் கொண்டிருத்தலின் நமக்கு யாதொருதீதும் வாராது " என்று சொல்லி, இறைவன் திரு வடியைத்துதித்து, " வேயுறு தோளிபங்கன் " என்னுங் கோளறு பதிகத்தைப்பாடி யருளினர். அத்திருப்பதிகத்தைக் கேட்டபின் நாவுக்கரசர் உடன்பட்டுத் தாமும் அவர் முன்னே எழுந்தருள அமைந்தகாலை, பிள்ளையார், " அப்பரே! நீர் இந்தச் சோழமண்ட லத்திலே எழுந்தருளியிருப்பீராக " என்று இருகரங்களையும் குவித்து வணங்கிப் பெரிதும் வேண்ட, அவரும் அதற்கு அரிதில் இசைந்தனர். பிள்ளையார் மறைநெறியும் சைவத்துறையும் துலங்க எழுந்து, திருமறைக்காட்டுச் செம்மேனியெம்மானை மீண் டுஞ் சென்று வணங்கி விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு

அப்பர் மறுக்காத வண்ணம் அவரை வணங்கி விடைகொடுத்து நீங்கி, முத்துச்சிவிகையில் ஏறி, திருவைந்தெழுத்தை ஓதி. இறைவனது திருநீறணிந்த செம்மேனியைச் சிந்தித்துக் கொண்டு, திருவகத்தியான்பள்ளி, கோடிக்குழகர்கோயில், திருக்கடிக்குளம், திருவிடும்பாவனம், திருவுசாத்தானம் முதலிய பதிகளை வணங்கிக் கொண்டு சோழவளநாட்டைக் கடந்து, பாண்டி நாட்டை அடைந்து, திருக்கொடுங்குன்றத்திற் சென்று சிவபெருமானை வணங்கித்துதித்து மதுரையம்பதிக்கு அருகில் சென்றனர். இது நிற்க.

எட்டுமலைகளிலும் வசிக்கும் சமணர்களனைவரும் தீய சகுனங்களும் தீயகனவுகளுங் கண்டு மதுரையில் வந்து ஒருங்கு கூடி, தாந்தாம் கண்டகனவுகளை ஒருவருக்கொருவர் சொல்லி. பாண்டி மன்னனுக்குத் தெரிவித்துத் தாங்களுக்குத் தீங்குவிளைவது திடமெனக்கருதி, உணவின்றிக் கவலை கொண்டிருந்தனர். சைவசிகாமணிகளாகிய பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் அளவில்லாத மகிழ்ச்சியைக் காட்டுகின்ற நன்நிமித்தம் பலவற்றைக்கண்டு, சமணமதங்குன்றிச் சைவசமயந் தலையெடுத்தல் முக்காலும் உறுதி யெனக்கருதி மகிழ்ந்திருந்தார்கள். அதுபோது "திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் எழுந்தருளி வருகின்ருர்" என்று சிலர் முன்னே ஓடி அவர்களுக்கு உரைத்தனர். அவர்களுக்கு மங்கையர்க்கரசியார் அளவிறந்த பொன்னும் மணியும் பிறவும் நல்கி, மட்டில்லாத மகிழ்ச்சியுடையவராய், தம்மை வணங்கி நிற்குங் குலச்சிறையாரை நோக்கி, "நமது திருஞானசம்பந்தமூர்த்திநாயனுரை எதிர்கொண்டு அழைப்பீராக" என்று கூறினர். குலச்சிறையார் அவரை வணங்கிப்போந்து, "அரசனுக்கும் இது பயனுடையதாகும்" என்றுகருதி விரைந்து மதுரைக்கு வெளியே பிள்ளையாரை எதிர்கொள்ளச் செல்ல, பாண்டிமாதேவியாரும் தமது ஏவலாளர் சூழத்திருக்கோயிலுட் சென்று சொக்கநாதரை வணங்கி விட்டுப் பிள்ளையாரின் நல்வரவை எதிர்பார்த்து நின்றனர்.

பிள்ளையார் தோற்கருவி முதலிய நால்வகைக் கருவிகளும் ஒலிக்கவும், மறையவர்கள் எடுத்தல், படுத்தல், நலிதல், என்னும் ஒலி வேற்றுமையுடன் மறைமுழக்கஞ் செய்யவும், அடியார்களின் 'அர' ஒலியால் திசைகளெல்லாஞ் செவிடுபடவும், செந்தமிழ் மந்த மாருதம் எதிர்கொண்டு எம்மருங்குஞ் சேவிக்கவும், திரு நீறு தறித்த திருமேனியையுடைய திருக்கூட்டம் எல்லாவுலகத்தவரும் செய்த சிவபுண்ணியத்தின் படையெழுச்சிப் போலப் பொலிந்து விளங்கவும், சமணமதங்குன்றிச் சைவசமயம் தழைத்தோங்கவும், தமது திருப்பெயர்கள் பலவற்றையும் ஊதுகின்ற முத்துச்சின்னங் கள் "பரசமயகோளரி வந்தார் பரசமயகோளரி வந்தார்" என்று பணிமாறவும், அடியாரனைவரும் ஆனந்த அருவி சொரிய உரோ மஞ்சிலிர்ப்ப நமது பிள்ளையார் பெருமைகள் பலவற்றையும் பாடி யாடவும், இவற்றைக்கண்ட சமணர்கள் ஓட்டெடுக்கவும் முத்துச் சிவிகையின்மேல் முத்துக்குடை நிழற்ற எழுந்தருளி வந்தார். முத்துச்சின்னங்களின் ஒலியாகிய அமிர்தம் குலச்சிறையாரின் செவிவழியே சென்று சுவையூட்ட, உடனே அந்நாயனுர் பூமியிலே வீழ்ந்து வணங்கி எழுந்து பெருங்களிப்புடையவராய், கைகள் முடியிலேறிக் குவிய விரைந்து நடந்தனர். பிள்ளையாரோடு வரு கின்ற அடியார்களின் திருக்கூட்டத்தை நெடுந்தூரத்தே கண்டு வீழ்ந்து வணங்கி எழுந்து விரைந்து சென்று முத்துச்சிவிகை யைக்கண்டு தன்வசமற்றவராய் அடியற்ற மரம்போல நிலத்திலே வீழ்ந்து கிடந்தனர். அவரை எதிரே வந்த பலஅடியார்கள் வணங்கியும் அவர் பூமியினின்றும் எழாமையைக் கண்டு மீண்டு போய், பிள்ளையாரை வணங்கி நின்று, "அடிகேள்! பாண்டிமன் னன் அமைச்சராகிய குலச்சிறையார் திருமுன்னே வந்து அடி யற்ற மரம்போல வீழ்ந்து கிடக்கின்றனர்" எனவிண்ணப்பித்த னர். கருணைக்கடலாகிய காழிக்கன்று அதனைக்கேட்டுத் திரு முகமலர்ந்து திடீரென முத்துச்சிவிகையினின்றும் கீழே இறங்கி, கடுகி நடந்து அவரை அணைந்து தமது அருமைத் திருக்கரங்களி னுலேபற்றி எடுக்க, அத்திருக்கைகள் தீண்டுதற்குப் பலபிறவிக ளில் அளவிறந்த சிவபுண்ணியங்களைச் செய்திருந்த நாயனுர், அப்பிள்ளைப் பெருமான் திருமுகமண்டலம் பொழியா நின்ற பேர ருள் வெள்ளத்திலும், அவர் கண்களினின்றும் பொழிகின்ற

ஆனந்த வெள்ளத்திலும் மூழ்கி உடல் நடுங்க, உரைதடுமாற, உரோமஞ்சிலிர்ப்ப எழுந்து கைகளை முடியிற் குவித்து நின்றனர். பிள்ளையார் அவர்மீது திருவருணேக்கஞ் செய்து " அன்புடையீர்! வளவர்கோன் பாவையாம் மங்கையர்க்கரசியார்க்கும் உமக்கும் நமது கடவுளாகிய சிவபெருமான் திருவருள் பெருகும் நன்மை தான் வாலிதே " எனவினவியருளினர். அன்புகனிந்த அவ்வின்ப மொழியைக்கேட்ட குலச்சிறையார் வணங்கி நின்று, " அடியேங்கள் செய்த அருந்தவப்பயனே! அருட்குன்றே! சிவஞானதீபமே! அடியேங்கட்குச் சென்றகாலத்திலே பழுதடையாத திறமும் எதிர் காலத்திலே வருஞ்சிறப்பும் இந்நிகழ்காலத்திலே தேவரீர் இந் நாட்டில் எழுந்தருளுதலினுலே பெற்ற பெரும்பேருகும்; இதனுல் முக்காலத்தும் அடியேங்கள் திருவருளுடையேம்; அன்றியும் சமணமதத்தவர் சூழ்ச்சியுள் அழுந்திய அரசனும் இந்நாடும் வெற்றி பொருந்திய திருநீற்றின் ஒளியினுல் விளங்கும் மேன் மையையும் பெற்றனம். பாண்டிமாதேவியார் தேவரீர் இங்கு எழுந்தருளுதலை அறிந்து பெருமகிழ்வு கொண்டு " நமது பெரு வாழ்வு எழுந்தருளியது; நீர்போய் எதிர்கொண்டு திருவடிபணி வீர் " என்று அடியேனை ஏவினர் " என்று விண்ணப்பித்து மகிழ்ச்சி மீக்கூர்தலினுலே மீண்டும் வணங்கித்துதித்தனர்.

பாலறுவாயர் அங்ஙனம் பணிந்து துதித்த குலச்சிறை யாருக்கு அருண்மொழிகூறி, அடியார்களை நோக்கி, 'நமது ஆண் டவன் வீற்றிருக்கும் ஆலவாய் எம்மருங்கினது' என்று வினவிய ருள, அவர்கள் பிள்ளையாரை வணங்கித் திருமுன்னே நின்று கையினுற்காட்டி " இங்கே திருக்கோபுரந்தோன்றும் இதுவே திரு வாலவாயாகும் " என்றனர். அதுகேட்ட அருள்வள்ளலார் கைகு வித்து வணங்கி மிகுந்த அன்புடன் நிலத்தில் வீழ்ந்து இறைஞ்சி எழுந்து " மங்கையர்க்கரசி " என்று எடுத்து அவரும் குலச்சிறை யாருமாகிய இருவருடைய திருத்தொண்டுகளைக் கொண்டமை யைச்சிறப்பித்துத் திருப்பாட்டினிறுதி தோறும் " ஆலவாயாவது மிதுவே " என்பதை அமைத்துத் திருப்பதிகம் பாடிக்கொண்டு அடியார்களோடுந் திருவாலவாயை அணைந்து கோபுரத்தைக் கும் பிட்டு உள்ளே புகுந்து வலம்வந்து மந்திரியாரோடுஞ் திரு முன்னே சென்றனர். சொக்கலிங்கப் பெருமானைக் கண்குளிரக்

கண்டனர். எட்டுறுப்பும் ஐந்துறுப்பும் நிலந்தோய வீழ்ந்து பலமுறைவணங்கி உரோமஞ்சிலிர்ப்ப, உரைகுழற, கண்களி னின்று இன்பநீர் பெருகநின்று திருப்பதிகம்பாடி விட்டுத்திரு முன்றிலை அடைந்தார். முன்னே எண்டோளீசனை வணங்கும் பொருட்டுப் பிள்ளையார் உள்ளணையும் போது எதிர் செல்லாது ஒருபுடை ஒதுங்கிநின்ற பாண்டிமாதேவியார் இப்போது எதிரேவர குலச்சிறையார் பிள்ளையாரை வணங்கி நின்று, "அடிகேள்! சீரியகைகளைச் சென்னியிற் குவித்துக் கொண்டு வரும் இவரே பாண்டிமாதேவியார்" என்று விண்ணப்பித்தனர், அவரும் அள வில்லாத ஆர்வம் உடையவராய் விரைந்து எதிரே சென்றனர். பாண்டிமாதேவியாரும் பாலறுவாயரின் பாதாரவிந்தங்களில் வீழ்ந்து வணங்கினர். பிள்ளையார் பெருங்கருணை புரிந்துஅவரைத் தமது அருமைத்தி ருக்கரத்தாலெடுத்தருளினுர். பாண்டிமாதேவி யார் தமது மனக்கருத்து முற்றியது என்று நினைத்துக் கண்ணீர் சொரிய வாய்குழறி, "அடியேனும் அடியேனுடைய பதியும் செய்த தவம் யாதோ" என்று சொல்லி வணங்கினர். பிள்ளையார் பர சமயத்தார்களுள்ளிருந்தும் சைவநெறியிலே வாழும் அன்புடை யீர்! உம்மைக்காணுதற்கு வந்தோம்" என்று சொல்லி அவருக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு அடியார்கள் சூழ எழுந்தருளினுர். எழுந்தருளுங்காலை, திருவாலவாயிலே திருத்தொண்டு செய்து கொண்டிருந்த அடியார்களனைவரும் வந்து வணங்கி, ஞான பானுவே! சமணிருள் நீங்குமாறு தேவரீர் இங்கு எழுந்தருளி வரு வதற்கு அடியேங்கள் அளவற்ற அருந்தவங்களை ஆற்றியிருந் தோம்" என்றுர்கள். பிள்ளையார் அவர்களுக்கு அருள்புரிந்து புறத்திலே வந்து குலச்சிறை நாயனுர் திருமடங்காட்ட அடியார் களோடும் அவண் அமர்ந்தருளினர். அம்மையாரின் ஆணையின் படி அமைச்சர் பெருமான் ஆளுடைய பிள்ளையாருக்கும் அடியார் களுக்கும் விருந்தளித்தனர்.

## 12. சமணரைவாதில் வென்றது.

பகலிலே பிள்ளையார் அடியார்கள் பலர்சூழஎழுந்தருளிவரக் கண்ட சமணர்கள் இரவில் ஒன்றுகூடினர். தமிழ்விரகர் தங்கி யிருக்கும் திருமடத்திலே திருத்தொண்டர்கள் ஓதுகின்ற திருப்

பதிக இசையின் ஒலியானது அச்சமணர்கள் செவியிற்காய்ச்சிய ஈயம்போற்புகுந்தது. அதனைப்பொருத அவர், "இதனைப் பாண்டி மன்னனிடஞ் சொல்லுவோம்" என்று துணிந்து அனைவரும் அவ் வரசனை அடைந்தனர். மன்னன் அவர்கள் மனத்துயரத்தைக் கண்டு, உளம்விண்டு, "நீங்கள் இங்ஙனந்திரண்டு வருவதற்குக் காரணம்யாது" என்று பரிந்துவினவ அவர்கள், "மன்னர்மன்ன! உமது மதுரையம்பதியிலே சைவமறையோர் வந்ததால் நாங்கள னைவருங்கண்டுமுட்டு" என்றார்கள். உடனே வேந்தன், "யானுங் கேட்டுமுட்டு" என்றனன். பின்காவலன் கடுஞ்சினங்கொண்டு, "அச்சிவனடியார்கள் இன்றைக்கு இந்நகரத்திற்கு வருவதற்குக் காரணம் என்ன? அவர்கள் யாவர்" என்றான். அதற்குச் சமணர் கள் சோழநாட்டிலே சீர்காழியிலிருக்கின்ற ஒரு மறைச்சிறுன் சிவனிடத்திலே ஞானம் பெற்றதாகச் சொல்லிக்கொண்டு முத்துச் சிவிகையில் ஏறி, எங்களைவாதில் வெல்லும் பொருட்டு அடியார் களோடு வந்திருக்கிறான் என்றார்கள். வேம்பன் மிகச்சினந்து; "இதற்கு நாம் யாதுசெய்யவேண்டும்" என்று சொல்லத்தீயவர் களாகிய அச்சமணர்கள், "நாங்கள் அப்பார்ப்பனச் சிறுவன் இருக்கின்ற மடத்திலே எங்கள் மந்திரவலியால் நெருப்புப்பற்றச் செய்வோமாயின் அவன் இந்நகரத்திலே இராது போய்விடுவான்" என்றார்கள். கைதவன் அதனைகேட்டு, "விரைந்து சென்று அங் ஙனம் செய்யுங்கள்" என்றனன். அவர்களும் சென்றனர். பாண் டியன் யாதொரு பேச்சுமின்றிப் பெருங்கவலையுடன் பள்ளியறை யுட்புக்கான். மாதேவியார் ஆங்குப்போந்து மன்னன் வாய்வா ளாவிருக்கும் நிலையினைக்கண்டு, "எனது ஆருயிர்க்காதல! நீர் முன்னுள்ளமகிழ்ச்சியின்றி முகம் புலர்ந்திருத்தற்குக் காரணம் யாதோ" எனவினவினர். அரசன் அரசியாரை நோக்கி, "எனது ஆருயிர்க்காதலி! சோழநாட்டுச் சீர்காழியிலிருந்து ஒருஅந்தணப் பையன் சிவன் அருளைப்பெற்று நமது ஆசிரியர்களோடு வாது செய்து அவர்களை வெல்லும் பொருட்டுப் பல அடியார்களோடும் நமதுபதியில் வந்திருக்கின்றானும், ஆசாரியர்கள் அவர்களைக் கண்டுமுட்டு; யான் கேட்டுமுட்டு; இதுவே என்கவலைக்குக் காரணம்" என்றான். இறைவி "என் இன்னுயிர்த்தலைவா! நீர் மனம் வருந்தவேண்டுவதில்லை; இருதிறத்தாரும் வாதுசெய்தால்,

வென்றவர் பக்கம் சேர்ந்து அவர் மேற்கொள்ளும் சமயத்தையே நாமும் மேற்கொள்ளுதலே நலந்தருவதாகும்'' என்று சொல்லி விட்டுப் பெருமகிழ்வுடன் தமது மாளிகை சென்றிருந்தார். அமைச்சர் அங்கு எய்தினர். மாதேவியார் இச்செய்தியை அவருக்குத் தெரிவித்தனர். குலச்சிறையார் கைகுவித்து நின்று, ''இன்று புகலிமன்னர் இங்கு எழுந்தருளி வரப்பெற்றோம்; இனிச் சமணர்கள் செய்யும் வஞ்சனையை அறியேன்'' என்றார், மங்கையர்க்கரசியாரும் மனம்நடுங்கி, வஞ்சகப்புலையராகிய சமணர்கள் தீத்தொழில் செய்ய வல்லவர்கள்; என்செய்வோம்'' என்று நினைந்து வருந்தி, ''உலகமுய்ய வந்தாருக்கு யாதாயினும் ஒருறு வருமாயின் நாமும் உயிர்துறந்து விடுதலே உறுதி'' என்றனர்.

தவமறைந்து அல்லன செய்யுஞ் சமணர்கள், இளவேறு போல்வார் எழுந்தருளியிருக்கும் மடத்திலே அழல்பற்றுமாறு தாங்கள் கற்றுவல்ல மந்திரத்தை உருவேற்றினார்கள். உயர் ஒப்பில்லாததும் எல்லாமனுக்களுக்கும் மூலமாகவுள்ளது மாகிய திருவைந்தெழுத்தை ஓதும் பெரியோர்கள் பார்க்குந்திசைகளிலும் மற்றைமந்திரங்கள் பலிக்குமோ, பலியா. அடியாருடைய திருமடத்திலே தங்கள் மந்திரவலி சென்று பயன்தராமையைக் கண்ட அவர்கள் மனந்தளர்ந்து, ''மன்னன் இதனை அறியின் நம்மை ஒரு சிறிதும் மதியான். நம்மவர் ஆக்கத்தையும் ஒழித்து விடுவான்'' என்று நினைந்து அஞ்சி, தீயினைக் கொண்டுபோய்த் திருமடப்புறச் சுற்றிலே கொளுவினார்கள். அத்தொழில் வெளிப்படுதலும் ஏவலாளர் மனம்பதைத்து அவ்வனலைச் சிதைத்து நீக்கி, அது செய்தவர்கள் தீவினையாளர்களாகிய சமணர்களென்பதை உணர்ந்து பிள்ளையாரிடஞ் சென்று வணங்கிச சமணர்கள் செய்த தீங்கைத் தெரிவித்தனர். உடனே பிள்ளையார் சிவனடியார்கள் உறங்கும் இத்திருமடத்திலே பாவிகள் இங்ஙனம் பழுது செய்யலாமோ'' என்று பரிந்து, ''அவர்கள் என்பொருட்டுச் செய்த தீங்காயினும் சிவனடியார்களுக்கு இப்படிவருமோ' என்று நினைந்து அச்சமும் அடங்காச்சினமுங் கொண்டு, ''இத்தீங்கு அரசனால் நேர்ந்தது'' எனத்திருவுளங் கொண்டு, ''செய்யனே திருவால

வாய் " என்னுந்திருப்பதிகத்தை, " அமணர்கொளுவுஞ் சுடர் பையவேசென்று பாண்டியற்காகவே " என்று பாடியருளினர். இறைவன்பால் இடையருப் பேரன்புவாய்ந்த மங்கையர்க்கரசியாரின் மங்கலநாணைப்பாதுகாத்தல் தமது கடமையாதலாலும், குலச்சிறையாரின் அன்பினுலும், மன்னனிடம் தீங்குமருவுதலாலும், அவனுக்கு மீண்டு சைவநெறியை அடையும் ஊழ்உண்மையாலும் அவன், வெப்புநோய் நீங்குமாறு தமது அருமைந் திருக்கரங்களாலே தீண்டித் திருநீறுசாத்தும் பெரும்பேற்றை உடையவனுதலாலும் தீப்பிணியைப் " பையவே சென்று பாண்டியற்காகவே " என்று அருளிச்செய்தனர். திருப்பதிகம் பாடியவுடனே தீயின் வெம்மை சென்று பாண்டியனை அடைந்தது.

ஞாயிறு தோன்றியபின், நள்ளிரவில் ஞானவள்ளலாருக்கு ஈனர்கள் செய்த தீங்கினை அரசியாரும் அமைச்சரும் அறிந்து, " சீர்காழிச் செல்வத்தை இத்தீயவர்களிருக்கும் நாட்டிற்கு வரவழைத்த நாம் இறப்பதே திண்ணம்" என்று மனமாழ்கி அஞ்சிப்பதைபதைத்தனர். பின்பு திருமடத்திலே தீது இல்லாமையைத் தெரிந்து மனந்தேறினர்; எனினும் " தீத்தொழிலோர் செய்த தீங்கு இறுதியில் எவ்வாறு ஆகுமோ" எனக்கவலுங்காலை, " அரசனை வெப்புநோய் அடுத்தது " என்று கஞ்சுகிகள் வந்து தெரிவித்தனர். மாதேவியார் உடனே மனம் பதைத்துச் சென்றனர். குலச்சிறையாரும் விரைந்து சென்றனர். மன்னன் அந்நோயால் மனமாழ்கி, பல மருத்துவர்கள் வந்து மருத்துவஞ் செய்யவும் அந்நோய் சிறிதும் நீங்காமல் மிக, அறிவிழந்து பேச்சின்றிக்கிடந்தான். அதனையறிந்த சமணர்கள் பெருமூச்செறிந்து ஒருங்கு ஓடிவந்து, அந்நோயின் மூலம் இன்னதென அறியாதவராய், தங்கள் மந்திரங்களைச் சொல்லி மயிற்பீலியினுலேதடவ, பீலிகள்பிரம்பினேடு பொரிந்துசரிந்து சிதறிவீழ்ந்தன. அந்த வெப்பின் வீறினை நோக்கி இறும்பூதெய்தித் தங்கள் கையிலே தூங்குகிற குண்டிகையிலுள்ள நீரினை, " அருகனே காவாய்; அருகனேகாவாய்" என்று சொல்லி மன்னன்மேலே தெளிக்க, அந்நீர் மிகக்கனலுகின்ற நெருப்பிற் சொரிந்த நெய்போலாக, வேம்பன் மிகவருந்திச் சமணர்களை நோக்கி, "நீங்கள்

'ஒருவரும் என் முன் நில்லாமற் போய்விடுங்கள் " என்று சொல்லி அறிவு சோர்ந்தான். அரசியார் மிகவும் அச்சமெய்தி அமைச்சரை நோக்கி " அமணர்கள் ஆளுடைய பிள்ளையாருக்குச் செய்த தீங்கே இப்படி முடிந்ததோ " என்றனர். அமைச்சர் அவரது அடி வணங்கி நின்று, " அசுரர்களின் முப்புரத்தையும் எரித்த ஆண்டவன் திருக்குமாரராகிய சீகாழிச் செம்மலுக்கு இவர்கள் இழைத்த இன்னலே இங்ஙனம் வந்து முடிந்தது; இவர்கள் தீர்க்கப்புகின், அது நெய்யினைச்சொரிந்து நெருப்பினை அவிக்க முயல்வதுபோலாகும் " என்றனர். பின் அவ்விருவரும் ஏந்தலை வணங்கி நின்று, " திருஞானசம்பந்தப் பெருமானுக்கு இச்சமணர்கள் செய்த தீங்கே உமக்கு வெப்பு நோயாக வந்தது; ஆதலால் இத்தீவினையாளர் செய்யும் மாயம் இந்நோயினை வளர்ப்பதேயன்றிப் போக்குவதன்று அந்நாயனர் திருவுளமிரங்கித் திருவருள் நோக்கஞ் செய்வாராயின், இந்தவெப்பு நோய்மட்டுமா, எவராலும் நீக்குதற்கரிய பிறவியென்னும் பெருநோயும் நீங்கிவிடும்; இது சத்தியம் " என்றனர். அவ்விருவரும் சொல்லிய "திருஞானசம்பந்தர் " என்ற திருமந்திரமானது பாண்டியன் செவியிற்பட்டவுடனே சிறிது அயர்வு நீங்கப்பெற்றான். அவன், " இச்சமணர்கள் செய்யுஞ்செயல்களனைத்தும் இந்நோய் வளர்வதற்கே ஏதுவாக இருக்கின்றன " என்று எண்ணி, அவ்விருவரையும் நோக்கி, " அந்நாயனரை இங்கே அழையுங்கள். எனது நோயைப் போக்கி வென்றவர் யாரோ அவர்பக்கஞ் சேருவேன் " என்றான்.

அரசியார் அதுகேட்டுப் பெருங்களிப்புடையவராகி, சிவிகையில் ஏறி நங்கையர் பலர் சூழ, குலச்சிறைநாயனர் குதிரையில் ஏறிக்கொண்டு முன்னே செல்ல, சென்று திருமடத்தை அடைந்தார். அமைச்சர் அசுவத்தினின்றும் இறங்கி ஏவலாளரை நோக்கி, " அடியேங்கள் வந்து நிற்றலை அடிகளுக்கு விண்ணப்பம் செய்ய வேண்டும் " என்றார். அவர்கள் உள்ளே புகுந்து பிள்ளைப் பெருமானை வணங்கி நின்று, " அடிகேள்! அரசியாரும் அமைச்சரும் வந்து புறத்தில் நிற்கின்றனர் " என்று விண்ணப்பம் செய்ய, பிள்ளையார் " அவர்களை இங்கே அழையுங்கள் " என்று அருளிச்செய்தார். காவலாளர் மீண்டுபோய் அழைக்க அவர்கள் இருவரும் உள்ளே சென்று,

'ஞானத்தின் திருவுருவை நான் மறையின் றனித்துணையை
வானத்தின் மிசையின்றி மண்ணில்வளர் மதிக் கொழுந்தைத்
தேனக்க மலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்."

அங்ஙனம் கண்ட அவர்கள் சமணர்கள் செய்த கொடுந் தொழிலை நினைந்து கண்களில் நீர் சொரிய, பெருமூச்செறிந்து பிள்ளையாரின் திருவடிகளின் கீழேவீழ்ந்தார்கள். உடல் நடுங்க, உரைகுழற ஒன்றும் அறிந்திலராகிப்பூமியிற் புரண்டு அயர்ந்து திருவடிகளைப் பற்றிக் கொண்டு கவலைக்கடற்கு ஓர் கரைகண் டார் போன்று மெய்யன்பினுலே விடாது கிடந்தார்கள். பிள்ளை யார் அதுகண்டு தமது திருக்கரத்தினுல் அவ்விருவரையும் எடுத்த ருளித் தேற்றலும் அவர்கள் தெளியாராக; அவர்களை நோக்கி, "அன்பர்களே! உங்களிடத்தில் யாதேனும் தீங்குளதோ?" என்று வினுவியருளினுர். அதற்கு அவர்கள், "அடிகேள்! அடியேங்கள் அமணர்கள் முன்செய்த வஞ்சனைக்கு மிக அஞ்சி வருந்தினேம். அது திருமேனிக்குத் தீங்கிழைக்காததை உணர்ந்து பின் அது தீர்ந்தோம். அத்தீயவர்கள் செய்த தீத்தொழில் வெப்பு நோயாகி மன்னவனை அடைந்து வாட்டுகின்றது. அச்சமணர்கள் அதனைத் தீர்க்கப்புகின் அது வளர்கின்றது. ஆதலால் தேவரீர் அவ்வேந் தன்முன் அவர்களை வென்றருளின் அவன் உயிரும் அடியேங்கள் உயிரும் உய்யும்." என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்பொழுது அருளின் உறைவிடமாகிய ஆளுடைய பிள்ளையார் "நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம்; நாம் மெய்யுணர்வில்லாத அச்சமணர்களை அனைவருங்காண, நீங்கள் மகிழுமாறு இன் றைக்கு வாதிலே வென்று பாண்டியனைத் திருநீறு அணிவிப் போம்" என்று சொல்லியருளினுர். அவ்விருவரும் அதைக்கேட்டு, தேவரீர் அடியேங்களை இன்னற்கடலினின்றும் எடுத்தருளும் பொருட்டு இவ்விடத்திற்கு எழுந்தருளி வரப்பெற்றுக் கொண்ட நாங்கள் என்தான் பெறேம்" என்று கூறி வணங்கினுர்கள்.

பிள்ளையார், "பாவிகளாகிய சமணர்களைப்பார்த்து வாது செய்து வெல்லுதற்குச் சொக்கலிங்கப் பெருமானின் திருவுள் ளத்தை அறிவேம்" என்றுதிருமடத்தினின்றும் நீங்கித் திருக்கூட் டம் சூழச்சென்று திருக்கோயிலுட் புகுந்து நோக்க விதியில்லாத

சமணர்களை நோக்கி வாதுபுரிதற்குத் திருவுள்ளமோ என்பதை அறியும் பொருட்டு, "காட்டுமாவதுரித்து" என்னும் திருப்பதிகம் பாடிச் சிவபெருமான் திருவுள்ளத்தை அறிந்து, பின்னும் சமணர் களை வாதில் வென்று அழிக்கும் பொருட்டும் சிவநாமத்தையே உலகமெங்கும் பரப்பும் பொருட்டும், "வேதவேள்வியை" என்னும் திருப்பதிகத்தைப்பாடித் திருவருள் பெற்றுத் திருவுள்ளம் மகிழ்ந்து விடைபெற்றுக் கொண்டு கோபுரவாயிலைக் கடந்து முத் துச்சிவிகையின் மீதேறி முத்துக்குடை நிழற்ற மெய்யடியார்கள் புடைசூழ, பல்வேறு வகைப்பட்ட இன்னியங்கள் ஒலிக்க, முத்துச் சின்னங்கள் முழங்க, அரசியார் சிவிகைமேலேறிப்பின்வர, அமைச்சர் அடியார் கூட்டத்துடன் முன் செல்லப் பாண்டியனு டைய அரண்மனைக்கு எழுந்தருளினர்.

அமைச்சர் முன்னே சென்று பிள்ளையாரின் வருகையை அரசனிடம் சொல்ல, அவன் தன்னுடைய துன்பம் சிறிது நீங்கப் பெற்றுத்தன் முடியின் பக்கத்திலே மணியாசனம் ஒன்று இடு வித்துப் பின்னும் எதிர் செல்லும் பொருட்டு அமைச்சரை ஏவினன். குலச்சிறைநாயனர் உளம் மகிழ்ந்து எதிர் கொள்ளச் சென்றார். அமணர்கள் அரசனுடைய தன்மையைக்கண்டு, "மன்னர் மன்ன! நமது சமயத்தை நிலை நிறுத்தும் நெறி இது தானே, உம்முடைய அறநெறியை நீர் காத்தருள வேண்டும்; ஆயின் அவரை இங்கே அழைத்தீர்; உம்முடைய நோயை அவரும் நாங்களும் ஒருங்கு தீர்க்கும்படி சொல்லி முழுவதும் அவராலேயே தீர்க்கப்பட்டது ஆயினும் எங்களாலும் தீர்க்கப்பட்டதாக நீர் சொல்ல வேண்டும்." என்றார்கள். அதுகேட்ட அரசன், தான் முற்பிறப்பில் செய்த தவப் பயனை அடையுங்காலம் அண்மையில் வந்து விட்டதால் அவர் களை நோக்கி, "நீங்கள் இருதிறத்தீரும் தெய்வச் சார்பினலே எனது பிணியைப் போக்குங்கள் நான் வஞ்சகம் பேசேன்" என்றான். அதனைக்கேட்ட அமணர்கள் "என் செய்வோம்" என ஏங்கி இருந்தனர். அப்பொழுது தமிழ்நாடு செய்த தவக்கொழுந்து போலும் சம்பந்தப்பெருமான் அரண்மனை வாயிலை அடைந்து முத் துச்சிவிகையினின்றும் இறங்கி அமைச்சர், முன் செல்ல, அரசி யார், பின்வர உள்ளே எழுந்தருளினர். பாண்டியன் பிள்ளையா ரைக்கண்டவுடனே அஞ்சலி செய்து அவர் அண்மையில் வர அவரை நோக்கித் தன் பக்கத்தில் அமைத்திருக்கின்ற மணியாச

னத்தைக்காட்ட அவர் அதிலே வீற்றிருந்தருளினர். அமணர்கள் அனைவரும் அச்சங் கொண்டனர். அரசன் பிள்ளையாருடைய திருமேனியைத் தரிசிக்கப் பெற்றதனல் வெப்பு நோய்சிறிது நீங்கி "அடிகேள்! தேவரீருடைய ஊர் யாது?" என்று வினவ, பிள்ளையார், "பிரமனூர் வேணுபுரம்" என்று எடுத்து "கழுமலநாம் பரவுமூரே" என்று முடிக்கும் திருப்பதிகத்தினலே விடையிறுத்தார்.

புகலி மன்னர் இரத்தினசனத்தில் எழுந்தருளியிருந்த பொழுது அண்மையில் இருந்த அமணர்கள் பொருமை கொண்டு தங்களுடைய உள்ளத்தில் உள்ள அச்சத்தை மறைத்து, கண்கள் சிவந்து இளஞாயிற்றினைச்சூழ்கின்ற கருமுகிற்குழாங்கள் போலப் பிள்ளையாரைச் சூழ்ந்து அவரை வாதினல் வெல்லக் கருதித்தங்கள் சமயக்கொள்கைகளை எடுத்துச் சொல்லி ஆரவாரித்தனர். அதனைக்கேட்ட பிள்ளையார், "உங்கள் சமயநூற்றுணிபை உள்ளபடி ஒழுங்காகப் பேசுங்கள்" என்று சொல்லியருள; சமணர்கள் துள்ளியெழுந்து பதறிக்கதறினர்கள். அரசியார் அதுகண்டு பொருராகி உளம் நடுங்கி அரசனை நோக்கி, "இவ்வடிகள் சிறுவர். இச்சமணர்களோ எண்ணில்லாதவர்கள். என் ஆருயிர்க் காதல! இப்பிரானர் உம்முடைய பிணியைப் போக்கி அருளட்டும் பின்பு இச்சமணர்கள் பேசவல்லவர்களாயிற் பேசக் கடவர்கள்" என்ருர். அரசன் அரசியாரை நோக்கி "நீ வருந்தாதே" என்று சொல்லி. சமணர்களை நோக்கி, "நீங்களும் இச் சிவனடியாரும் உங்கள் உங்கள் தெய்வத்தன்மையை எனது வெப்பு நோயை நீக்குதலினலே புலப்படுத்துங்கள்" என்ருன். பிள்ளையார் பாண்டிமாதேவியாரை நோக்கி, "மாதேவியே! என்னைச் சிறுவன் என்றெண்ணி நீ அஞ்ச வேண்டாம். திருவாலவாயரன் நிற்க நான் சமணர்களுக்கு எளியேன் அல்லேன்" என்னும் கருத்தினை உடைய "மானினேர் விழி மாதராய்" என்னும் திருப்பதிகத்தைப்பாடி யருளினர். அதுகேட்ட அரசன் பிள்ளையாரையும், ஆரவாரித்த லொழியாத சமணர்களையும் நோக்கி, "நீங்கள் எனது பிணியை இகலித் தீருங்கள் தீர்த்தவரெவரோ அவரே வாதில் வென்றவர்" என்று சொல்லச் சமணர்கள், "மன்னர் மன்ன! உம்முடைய இடப்பாகத்து வலியை நாங்கள் எங்கள் சமயமந்திரத்தினலே தீர்ப்போம் அவர் வலப்பாகத்து

நோயைப் போக்கக்கடவர்'' என்று சொல்லி அரசனுடைய இடப் பாகத்தைப் பீலியினலே தடவினர். அதனுலே வெப்பு நோய் வளர அரசன் அதைப் பொறுக்கலாற்றதவனுகிப் பிள்ளையாரைப் பார்த்தான்; அவர் அவனது நோக்கினை அறிந்து "மந்திரமாவது நீறு'' என்னும் திருநீற்றுப் பதிகத்தைப்பாடி அவனுடைய வலப் பாகத்தைத் திருநீறு கொண்டு திருக்கரத்தினுலே தடவியருள; அப்பாகம் வெப்பு நோய் நீங்கிப் பொய்கைப் போலக்குளிர்ந்தது, இடப்பாகத்து வெப்பு நோய் முன்னையிலும் இருமடங்கு மிகுந்து பொங்க சமணர்கள், உளம் நடுங்கி மயிற்பீலிதீய, அவ்வெப்புத்தீ, தம்மேலும் தாவ உடலுங் கன்றிச் செருக்கும் ஒழிந்து தூரத்திலே சென்று நின்ருர்கள், அரசன் அவர்களை நோக்கி, "சமணர்களே நீங்கள் தோற்றுப் போனீர்கள்; என்னை விட்டு அகலப்போய் விடுங்கள்'' என்று சொல்லிப் பின் பிள்ளையாரை நோக்கி, "அடி யேனை ஒரு பொருளெனக் கொண்டு உய்வித்த கருணைக்கடலாகிய பெருமானே! இடப்பாகத்து வெம்மையையும் தேவரீரே நீக்கியரு ளும்'' என்று உளத்தால் வணங்கிப்பெரிதும் வேண்டினுன். அவர் முன்போலவே இடப்பாகத்தையும் திருநீறு கொண்டு தடவியருள பாண்டியன் வெப்புநோய் முழுதும் நீங்கி உய்ந்தான். அதுகண்ட பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் பிள்ளையா ரின் திருவடிகளில் விழுந்து வணங்கி, "எங்கள் அரசர் பிறவாமை பெற்றனர்'' என்று களிப்படைந்தார்கள். பாண்டியர்படுக்கையை விட்டு எழுந்து இரண்டுகைகளையும் சென்னிமேல் ஏறக்குவித்து, "பொய்யராகிய சமணர்கள்முன், அடியேனுடைய பிணியைப் போக்கியருளிய பிள்ளையாரின் திருவடிகளை அடைந்துஉய்ந்தேன் உய்ந்தேன்'' என்ருர்.

சமணர்கள் காழிவேந்தரின் சொல்வெற்றியை அவர் பாடிய தமிழ்ப்பதிகம் அரசன் வெப்புநோயை நீக்கினமையால் அறிந்த பின், "வாதம்பேசி இவரை வெல்லுதல் நமக்கு வாய்ப்பது ஒன்று அன்று. அனலாலும் புனலாலுமே இவரை வெல்லல் வேண்டும்'' என்று தங்களுள்ளே எண்ணினுர்கள். புகலிமன்னர் அப்பொய்யர் களை நோக்கி, "இனி உங்கள் சமயநூல் வாய்மைகளை சாற்றுங் கள்'' என்று அருளிச்செய்ய அவர்கள் அறியாதவாறு தருக்கம் பேசி வெல்ல வேண்டுவதில்லை. நாம் இருதிறத்தோரும் நமது

நமது சமய உண்மையை உள்ளபடி கண்கூடாகக் காட்டி வெல்லுவோம்" என்று ஒட்டினுர்கள். அப்போழுது அரசர் பெருமான் "என்னுடைய வெப்புநோயை நீங்கள் ஒழித்திலீர்கள். உங்களுக்கு என்ன வாது?" என்று சொல்ல அவர்கள் அரசர் உங்களுக்கு 'என்ன வாது' என்றதையே வினுவாகக் கொண்டு, "நாங்கள் இருதிறத்தோமும் எங்கள் எங்கள் சமயக்கருத்தை ஏட்டிலே தீட்டி நெருப்பின் கண் இடக்கடவோம். வேவப்பெருமையே வெற்றி" என்ருர்கள். அப்போது அரசர் ஒன்று சொல்லுமுன்னே, பிள்ளையார், "நீங்கள் சொல்லியது நன்று நன்று அரசனெதிரே அப்படியே செய்வோம். வாருங்கள்" என்று சொல்லியருளினுர். அவரது ஆணையால் அவைமுன்னே அழலை அமைக்கும்படி ஏவலாளர்களைஏவ அவர்களும் நெருப்பை மூட்டினுர்கள். பிள்ளையார் அண்மையிலே எழுந்தருளிவந்து "சிவபெருமானே மெய்ப்பொருள்" என்று தாம் பாடியருளிய தமிழ் வேதத் திருமறையைத் துதித்து, "நமது சிவபெருமானே பரம்பொருள்" என்று சொல்லி வணங்கித் திருக்கரத்தினுல் எடுத்துச் சென்னிமேற்கொண்டு திருக்காப்பு இட்டகயிற்றை அவிழ்த்து அத்திருமுறையைத்தமது திருக்கரத்தினுல் மறிக்க, திருநள்ளாற்றின் மேலதாகிய "போகமார்த்த பூண்முலையாள்" என்னும் திருப்பதிகம் வந்து நேர்ந்தது. பிள்ளையார் அப்பதிகத்தையே விரும்பித் திருநள்ளாற்றுத் தேவதேவனை வணங்கி அது எழுதப்பெற்ற திருவேட்டைக்கழற்றித் திருக்கரத்திலே கொண்டு "ஆலமுண்டகண்டனே மெய்ப்பொருள்" என்பதை அனைவருக்கும் உணர்த்தும் பொருட்டு, "இவைநெருப்பில் இடப்படுமாயின் பழுதில்லை. இது சத்தியம்" என்னும் கருத்தை உடைய "தளிரிளவளரொளி" என்னும் திருப்பதிகத்தைப்பாடி அங்குள்ளோர் அனைவரும்காண அமணர்களுடைய சிந்தைவேவ அந்நெருப்பிலே அந்த ஏட்டை இட்டருளினுர். இட்ட ஏட்டில் எழுதப்பட்ட திருப்பதிகம் உமையை ஒரு பாகத்திலுள்ளவரும் அட்டமூர்த்தியுமாகிய சிவபெருமானையே மெய்ப்பொருளென உடைமையால் மேலெழுந்து எரிகின்ற பெருநெருப்பினுல் வேவாது பச்சைப் பசலேன விளங்கி யது. சமணர்களும் தங்கள் நூற்பொருள் எழுதிய ஏட்டினை, "இவ்வேடு உய்யுமோ" என்கின்ற கவலைநிறைந்த உணர்வினுல் நையும் நெஞ்சோடு நின்று அந்நெருப்பிலிட அது தீயிடைப்பட்ட பஞ்சுபோல் அழிந்தது அதுகண்டு அவர் அச்சத்

திருலே மனம்சோர்ந்தும் பீலிகை சோராது நின்ருர். பிள்ளையார் நெருப்பிலிட்ட ஏட்டை அது இடப்பட்டது முதல் கடைசிவரை பழு துபடாமை கண்டுவரும் பெருவியப்புற்று அதனை எடுத்தார்கள். அதுமுன்னையிலும் பசுமையும் புதுமையும் பயப்பதாய் சிறப்புற்று விளங்கிற்று. பிள்ளையார் எடுத்த அவ்வேட்டினைச் சபையாரின் முன்னே காட்டித் திருமுறையிலே முன் இருந்தவாறே கோத்து வைத்தலும் அரசர் இதனைக்கண்டு இறும்பூதுற்று பீலிகொண்டு நிற்கும் சமணர்களை "நீங்கள் இட்ட ஏட்டைக் காட்டுங்கள்" என்று வினவ அவர்கள் தாங்கள் இட்ட ஏட்டை எடுத்தற்காக பெருகுநெருப்பிடை நெருங்குங்காலை அது மிகவும் வெம்மையாக இருத்தலைக்கண்டு திரும்பிவிட்டார்கள். அது கண்ட மன்னர் நீரி ருலே நெருப்பினைத் தணிப்பித்தார். அங்கும் சமணர்கள் சாம்ப லும் கரியுமன்றி மற்ருென்றுங் கிடைக்கப்பெருதவராகிச் செய்வ தொன்றும் அறியாது திகைத்துச் சாம்பர்பூராவையும் கையினுலே பிசைந்து தூற்றிப்பார்த்தார்கள். அது கண்ட மன்னர் புன்முறு வல் புரிந்து, "ஏட்டை யின்னும் அரித்துக்காணும் பொய்ந்நெ றியே மெய்ந்நெறியாகக் கொண்டு காலத்தினை போக்குகின்றவர் களே! போங்கள். முன் நான் வெப்பெறும் தீயினின்றும் உய்ய நீங்கள் அப்பொழுது அழிந்து தோற்றீர் ஆதலால் அதுவேவழி யாக இப்பொழுது எரியில் இட்ட ஏடு உய்ந்ததில்லை என்ருல் நீங் கள் தோற்றிலீர் போலும்" என்ருர்.

சமணர்கள் அரசர் நகையை உட்கொண்டு சொல்லிய சொற்பொருளை அறியாராகித் திரித்துணர்ந் தோராராய் இரண்டுதரம்வாது செய்தோம். இன்னும் ஒரு முறை வாதுசெய்ய வேண்டும். மும்முறையில் ஒருமுறையாவது வெற்றி பெறுவோம்" என்ருர்கள். ஏந்தல் "இதுஎன்ன மாற்றமாகும்? என்று மறுத்த பின்னும், பிள்ளையார் சமணர்களைப் பின்னும் நோக்கி, "இனி யென்ன வாது செய்வது? என்று வினவியருள; சமணர்கள் நாம் இருதிறத்தினேமும் அவரவர் சமய உண்மையை எழுதிய ஏட்டை யாமும் நீங்களும் யாற்றிலே விடுவோம். எதிர்த்து வரும் ஏடு நல்ல மெய்ப்பொருளையுடையது" என்ருர்கள். அதுகேட்ட பிள் ளையார், "நன்று அது செய்வோம்" என்று அருள் செய்தலும் இவைகளைக்கேட்ட அமைச்சர் அவர்கள் அருகில் வந்து, "வேருக

இனிச்செய்யும் இந்தவாதிலே தோற்றவர்கள் செய்வது யாது ?'' என்று கேட்டலும் அங்குநின்ற சமணர்கள் அவர்மேற் சினங் கொண்டு பொருமைகாரணமாகத் தங்கள் வாய் சோர்ந்து, " இத் தனிவாதில் தோற்று அழிவோமாயின் இ வ் வ ர ச ர் எங்களைக் கொடிய க ழு வி ல் ஏற்றக்கடவர் என்ருர்கள். அதைக்கேட்ட அரசர், உண்மைப்பொருள் ஏழுதப்பட்ட ஏடுகளை வைகையாற்றில் இடும் பொருட்டுப் புறப்படுவோம்'' என்று கூ று த லு ம் அது கேட்ட பிள்ளையார் இரத்திருசனத்தினின்றும் எழுந்து சென்று தமது முத்துச்சிவிகை மேற்கொண்டு எழுந்தருளினுர்கள். அவர் கள் பின் அரசர், குதிரைமேலேறிச் சென்ருர். குடைகளும், சின் னங்களும் முன்செல்ல சிவிகைமேற்கோண்டு சம்பந்தர் சென்ருர். பின்முரசும், பல்லியமும் முழங்க மன்னரும் தேவியாரும் செல்ல சமணர்களும் மிகுந்த விரைவாக வேருேர்பக்கமாக வந்து எல்லோ ரும் வைகையாற்றின் கரையை அடைந்தார்கள். மன்னர் பெரு மான் இருதிறத்தாரும் தங்கள் தங்கள் சமய உண்மைகளை எழுதி அவ்வாறெழுதிய ஏட்டை இடக்கடவர்கள் " என்று கூ றி ஞ ர். அது கேட்டு உள்ளீடு இல்லாத நெற்பதர்போல உள்ளீடு என்பது இல்லாத மக்கட்பதராகிய அமணர்கள், " அத்தி நாத்தி '' என்று எழுதிய ஏட்டை ஆற்றில் அதிகநீர்வேகமாக வருதலைக்கண்டும் அவாமேலீட்டிஞல் இட்டார்கள். அ வ்வேடுகடலை நோக்கிவிரைந்து படர்ந்து சென்றது கண்டு ஓடும் ஏட்டைத் தொடர்ந்து சென்று எதிர் அணைப்பவர்கள்போல கரைமேல் ஓடிச்சென்ருர்கள். ஏடு நூறு விற்கிடைக்கு அப்பால் ஓடிப்போயிற்று. போனது நோக்கி அதனைக் காணுதவராயினர். காணஇயலாதவர்களாகிய சமணர் கள், ''ஏடுநம்மை நடுஆற்றில் விட்டுவிட்டுக் கடலிற்சென்று சேர்ந்து விட்டது'' என்று நாணமடைந்து தூ ர மா க ஒதுங்கி நின்று மனம் நொந்து சிதறித்திகைத்தார்கள். எனினும் மன்னர் ஆணைக்கு அஞ்சி மீண்டும் அவர்பால் நெருங்கி வந்து வேறு செயலில்லாதவர்களாகி ந ம க் கு இறுதிக்காலம் வந்துற்றுவிட் டதே! என்செய்வேம்' என்று மிகவும் அஞ்சி நடுங்கிஞர்கள். துன் புறுகின்றதம் நெஞ்சத்து அச்சத்தினை வெளிப்பட்டு விடாமல் ஒளித்துக் கொண்டவர்களாக அ வ ர் க ள் மன்னர் முன்வந்து நின்று, " மாறு கொண்டநீரும் நும் சமயஉண்மைகள் எழுதிய ஏட்டை ஆற்றிலே இடுவீராக. அது எதிர்த்து வருவதைப்பார்ப்

போம் " என்று கூறினர்கள். குற்றம் நிறைந்த அமணர்கள் மதி மயங்கி இவ்வாறுகூற, தீநெறி நீங்கி நன்னெறி சேர்ந்த மன்னர் பிரான், ஞானஒளிவீச நிற்கும் பிள்ளையார் அவர்களுடைய திருவுளக்குறிப்புயாதோ ? என்று நோக்குதலும் காழிவேந்தர் பரசமயங்கள் எல்லாம் அழியும் வண்ணம் " வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் " என்று துவங்கும் திருப்பாசுரத்தினை அருள்செய்யலுற்றனர்

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே"

என்ற ஞானச்செம்பொருள் வழங்கும் செஞ் சொற்றிருப்பாசுரத்தினை ஏட்டில் எழுதி அவ்வேட்டினைத்தம் திருக்கரத்தினலேயே ஆற்றிலே இட்டருளினர். அவ்வேடு அவ்வாற்றில் எதிர்த்து நீரினைக்கிழித்துக் கொண்டு எல்லா உயிர்களுக்கும் சிவமே மெய்ப்பொருள் என்று காட்டிக் கொண்டு சென்றது. அப்பதிகத்தில் " வேந்தனும் ஓங்குக " என்று பாடியருளிய படியால் அரசனுடைய கூன் நிமிர்ந்தது. ஏடு எதிர்ந்து செல்லும் பொழுது தேவர்கள் அனைவரும் துதித்து மலர்மாரி பொழிந்தனர். அரசர் ஆச்சரியமுற்று நின்றார். அமணர்கள் அனைவரும் அஞ்சிப்பதைபதைத்துத் தலைகுனிந்து நின்றார்கள். அமைச்சர் அத்திருவேட்டைத் தொடர்ந்து எடுத்தற்கு விரும்பி, காற்றினும் கடுகிச் செல்லும் கவனவாம்பரி மேற்கொண்டு பின்சென்றார். பிள்ளையார் அவ்வேடு தங்கும் பொருட்டு " வன்னியும் மத்தமும்,' என்னும் திருப்பதிகம்பாட, குலச்சிறைநாயனர் திருவேடகத்திலுள்ள திருக்கோவிலுக்குப் பக்கத்தில் ஓடுகின்ற நீர் நடுவிலே புகுந்து அங்கேதங்கிய ஏட்டை எடுத்துச் சென்னி மேற்கொண்டு மகிழ்ச்சி துளும்ப, கரையில் ஏறி திருவேடகத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை வணங்கித்துதித்து, திருஞானசம்பந்தப் பெருமான் திருமுன்வந்து அவருடைய திருவடிகளை வணங்கிக் கொண்டு அரசர் முதல் அனைவருக்கும் காட்ட அடியார்கள் அனைவரும் அளவிறந்த ஆனந்தத்துடனே " அரகர " வென்று ஆரவாரித்தனர்.

அரசர்கண்டு அமைச்சரை நோக்கி, "வாதிலேயொட்டித் தோல்வியுற்ற இச்சமணர்கள் முன்னரே பிள்ளையாரிடத்தில் நெருப்பு வைத்தலாகிய பெருங்குற்றத்தினைச் செய்தனர். ஆதலால் இவர்களைக் கழுவிலே யேற்றுக" என்று ஆணையிட்டனர். பேரருட்கடலாகிய பிள்ளையார் அதனைக்கேட்டும், தாம் அவர்கள் மேற்சிறிதும் பகையில்லாராயினும் அவர்கள் சிவனடியார்கள் வாழும் திருமடத்திலே செய்ததீங்கு மிகப்பெரிதாதலாலும், பெருங் குற்றம் செய்தாரைத் தண்டித்தல் அரசனது கடமையாதலாலும் மிகையில்லாத வேந்தன் செய்கையை விலக்காது இருந்தனர். உறுதியான அன்புவாய்ந்த குலச்சிரையார் கழுத்தறிகளை நிரையாகநாட்டுவிக்கச்சமணர் எண்ணுயிரவரும் அவற்றில்ஏறினுர்கள். பிள்ளைப்பெருமான் மன்னர் பெருமானுக்குத் திருநீறு கொடுத்தருள அவர் அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து வாங்கி அணிந்து கொண்டனர். அந்நாட்டில் உள்ள அனைவரும் திருநீறு தரித்தனர். அரசர் சைவராயினமையால் சமணசமயம் பாழாக, சைவசமயமே தழைத்து ஓங்கிற்று. பிள்ளையாரின் பெரும் புகழே எங்கும் பரந்தது. அவர் சொக்கலிங்கப் பொருமானைக் கண்டு வணங்கவேண்டு மென்னும் பெருவிருப்பால் எழுந்து முத்துச்சிவிகைமேல் ஏறிச்சென்றுர். அரசரும் அரசியாரும் அவரைத் துதித்துக்கொண்டு உடன்சென்றுர்கள். அடியார்கள் அனைவரும் பெருமகிழ்ச்சி தலைக்கூடப் பிள்ளையாரின் பெரும்புகழைப் பரவிக் கொண்டே சென்றனர். சீகாழிச் செம்மல் திருக்கோயிலையடைந்து முத்துச் சிவிகையினின்று மிறங்கி மன்னரும் மாதேவியாரும் மந்திரியாரும் தம்மைத்துதித்துக் கொண்டு உடன் செல்லக் கோயிலுக்குட் புகுந்து வலம் செய்து திருமுன் நின்று பெருமானை வணங்கி "வீடலாலவாயிலாய்" என்னும் திருப்பதிகம் பாடினுர். அரசர் ஆண்டவனை வணங்கி நின்று, "திருவாலவாயில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! அமணர்களுடைய மாயையினுலே மயங்கித் "தேவரீரை அறியாதிருந்த சிறியேனைப் பிணிநீக்கி ஆட்கொள்ளும் பொருட்டு இப்பிள்ளையாரைத் தந்தருளிய பெருங் கருணையை எங்ஙனம் அறிந்து எவ்வாறு வாழ்த்துவேன்" என்று துதித்தனர். பிள்ளையார் இறைவனை வணங்கி, இன்னருள் பெற்று அங்கு நின்று அரிதின் நீங்கித் திருமடத்திற் சென்று எழுந்தருளியிருந்தனர். மன்னரும் மாதேவியாரும் ஞானவள்ள

லாரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு தங்கள் மாளிகையை யடைந்தார்கள். பிள்ளையார் "ஆல நிழலுகந்த திருக்கையே" யென்னும் திருவியமகத் திருப்பதிகத்திலே திருநீலகண்டப் பெரும் பாணருக்கு அருளிச் செய்த திறப்பாட்டினையும் துதித்து அவரோ டும் கலந்து மகிழ்ந்திருந்தனர்.

பிள்ளையார் மங்கையர்க்கரசியாரும் மன்னவர் பெருமானும் மந்திரியாரும் நாள்தோறும் வந்து தமது திருவடிகளை வணங்கித் துதிக்க, தாம் சொக்கலிங்கப் பொருமானை வணங்கி த் துதித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கும் நாளிலே சீகாழியில் இருந்து சிவ பாதவிருதயர் "சமணர்களுடன் வாது செய்து வெல்லுவதற்கும் பாண்டிய நாடெங்கும் திருநீற்றைப் பரப்புதற்கும் போயருளிய திருஞானசம்பந்த நாயனுரிடத்தில் நிகழ்ந்தவற்றை அறிவேன்" என்று புறப்பட்டு மதுரையம்பதியையடைந்து திருவாலவாயிற் சென்று ஆலவாயரனை வணங்கிக் கொண்டு பிள்ளையார் எழுந்தரு ளியிருக்கின்ற திருமடத்தை யடைந்தார். பிள்ளையார் தந்தையார் வந்தமையை அடியார்கள் சொல்லக்கேட்டுத் திருவுளமகிழ்ந்து, "எப்பொழுது வந்தருளிற்று" என்று எதிரே எழுந்தருள, தாதை யாரும் தொழுது கொண்டு முன் சென்றணைய, பிள்ளையார் அவரை எதிர் தொழுது தமக்குச் சிவஞானம் அருளிய திருத்தோணியப் பனை நினைந்து சீகாழிமேல் "மண்ணினல்ல வண்ணம்" என்னும் திருப்பதிகம் பாடியருளினுர்.

சின்னுட் சென்றபின் பிறபதிகளையும் வணங்கும் பொருட் டுப் பிள்ளையார் அடியார்களுடன் புறப்பட்டு அரசரும் அரசியாரும் அமைச்சரும் உடன் செல்லச்சென்று திருப்பரங்குன்றம், திரு வாப்பனூர்; திருப்புத்தூர். திருப்பூவணம், திருக்கானப்பேர், திருச் சூழியல், திருக்குற்றாலம், திருக்குறும்பலா, திருநெல்வேலி யென் னும் தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு, திரு விராமேச்சுரத்தையடைந்து இறைவனை வணங்கி ஏழிசைப் பதிகம் பாடி அங்கே எழுந்தருளியிருந்தனர். அங்கிருந்தே ஈழநாட்டில் உள்ள திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் என்னும் பதிகளை வணங்கித் திருப்பதிகம் பாடியருளினுர். சின்னுளான பின் இரா மேச்சரத்தை நீங்கி, திருவாடானை, திருப்புன வாயில் என்னும்

பதிகளை வணங்கி, குலச்சிறையாரின் ஊராகிய மணமேற்குடிக்கு வந்து அங்கே எழுந்தருளியிருந்தார். இருக்குநாளிலே அதற்கு அண்மையில் உள்ள திருப்பதிகள் தோறும் சென்று சிவபெருமானை வணங்கித் திரும்பினர். சின்னாளானபின் பிள்ளையார் சோழநாட்டிற்குச் செல்லுதற்கு திருவுளங்கொண்டருள அரசர் முதல் மூவரும் அவருடைய திருவடிகளைப் பிரியலாற்றுமையால் அவருடன் போவதற்கு ஒருப்பட்டார்கள். அது கண்டு பிள்ளையார், "அன்பர்களே! நீங்கள் நமது சொல்லை மறுக்காமல் சைவ சமயத்தைப் புரந்து கொண்டு உங்கள் நகரத்திலேயே இருப்பீர்களாக " என்றருளிச் செய்தார். அவர்கள் பிள்ளையாரின் ஆணையை மறுப்பதற்கஞ்சி அவருடைய திருவடிகளை வணங்கி விடைபெற்றுத் திரும்பி மதுரையையடைத்து அவரை ஒருபொழுதும் மறவாத சிந்தையுடன் சைவசமயத்தைப் பாதுகாத்துக் கொண்டிருந்தனர்.

பிள்ளையார் அடியார்களோடு பாண்டிநாட்டைக் கடந்து சோழநாட்டையடைந்து திருக்களர், திருபாதளீச்சரம் முதலிய திருப்பதிகளை வணங்கிக்கொண்டு முள்ளிவாய்க்கரையையடைந்தார். அங்கே ஆறு மிகப் பெருகிவருதலால் நீர்வாணர்கள் ஓடக்கோல் நிலைக்காமை பற்றி ஓடத்தைக்கரையிலே நிறுத்திப் போய்விட்டார்கள். பிள்ளையார் அதுகண்டு கரையிலே எழுந்தருளிநின்ற பொழுது திருக்கொள்ளம்பூதூர் எதிரே தோன்ற அங்கே சென்று ஆண்டவனை வணங்குதற்குத் திருவுள்ளம் விரும்புதலால் ஓடத்தின் கட்டையவிழ்த்து அடியார்களை அதிலே ஏற்றி நாவலமே கோலாக அதன்மேல் நின்று, "கொட்டமே கமழும்" என்னும் திருப்பதிகத்தைப்பாடியருளினர். சிவபெருமான் திருவருளினல் ஓடம் சென்று அடுத்தகரையை யடைந்தது. பிள்ளையார் அடியார்களுடனே இறங்கித் திருக்கோயிலையடைந்து ஆண்டவனை வணங்கி அங்கே எழுந்தருளியிருந்தனர். சின்னாட்களுக்குப் பின், சமணர்களோடு செய்த வாதில் நெருப்பின் கண் வேவாத திருப்பதிகத்தையுடைய சிவபெருமானை வணங்க விரும்பித் திருநள்ளாற்றையடைந்து அப்பெருமானை வணங்கி "பாடக மெல்லடி" யென்னும் வினவுரைப்பதிகம் பாடி அங்குச்சின்னாள் தங்கியிருந்தனர்.

பின்பு பிள்ளையார் திருத்தெளிச்சேரியையடைந்து சிவபெருமானை வணங்கிக் கொண்டு செல்லுங்காலை பௌத்தர்கள் இருக்கின்ற போதிமங்கை நெருங்க, அதனையறிந்த அடியார்கள் அனைவரும் கடலொலிபோலச்சங்கு, தாரை, முதலியவற்றால் முழக்கி ஆரவாரித்தார்கள். முத்துச் சின்னங்கள் எல்லாம் "பரசமய கோளரி வந்தார்" என்று ஊதின. புத்தர்கள் ஒருங்கு கூடிப் பிள்ளையார் தங்கள் எல்லையில் எழுந்தருளும் போது அடியார்கள் எடுத்த ஆரவாரத்தினாலும் திருச்சின்னங்களின் ஒலியினாலும் பொறாமை கொண்டு தங்கள் சமய நூலிலே வல்லவராகிய புத்தநந்தி முதலியோருக்குத் தெரிவித்தார்கள். அவர்களுடைய சொல்லும் முத்துச்சின்ன ஒலியும் அடியார்களுடைய ஆரவாரமும் காதினுள்ளே காய்ந்த இரும்பைப் போற்புகுத, புத்தநந்தி மிகவும் சினந்தெழுந்து பௌத்தர்களுடைய கூட்டம் சூழச் சென்று சிவனடியார்களைத் தடுத்து "நீங்கள் எங்களை வாதின்கண் வென்ற பின்னன்றே வெற்றிச் சின்னங்கள் ஊதவேண்டும்" என்று சினங்கொண்டு விலக்கினான். அப்பொழுது அடியார்கள் மிகச்சினந்து, "இந்தக்கொடும் செயலுக்கு இவர்களைக் கொல்லாது பொறுத்தால் இவர்கள் தங்கள் தீச்செயலைக் காட்டிவிடுவார்கள்" என்று முத்துச்சிவிகைமேல் எழுந்தருளியிருக்கின்ற பிள்ளையாரிடம் இச்செய்தியைத் தெரிவித்தார்கள். அவர் "நாம்வருமிடத்திலே இது நமக்கு அழகியதாய் இருக்கின்றது. புத்தநந்தி வாது செய்யப்புகுங்காலை அவனுடைய பொய்மேற்கோளை அறிகின்றோம்" என்று அருளிச் செய்தார். அதற்கு முன்னரே தேவாரத் திருமுறையினை எழுதும் பேறுவாய்த்த அடியவர் ஒருவர் பொறுக்காமல் அத்தேவாரத்திலே "புத்தர் சமண் கழுக்கையர் பொய் கொளாச்–சித்தத்தவர்க டெளிந்துதேறின–வித்தக நீறணி வார்வினைப் பகைக்–கத்திரமாவனவஞ் செழுத்துமே" என்னும் திருப்பாட்டை ஓதி, "இப்புத்தனுடைய தலை உருண்டு விழும்படி இடியிடித்து விழக்கடவது" என்று சொன்னார். உடனே இடியிடித்து அப்புத்தனின் உடலையும் தலையையும் வேறுக்கிற்று. அதுகண்ட பௌத்தர் கூட்டம் அஞ்சிக்குலைந்து ஓடிற்று. அவர்களின் நிலைமையையும் புத்தநந்தியின் உடலும் தலையும் வேறுகும்படி திருமறை எழுதுவோர் தேவாரத் திருப்பாட்டினாற் செய்ததையும் கண்ட அடியார்கள் அனைவரும் ஓடிப்போய்ப் பிள்ளையாருக்

குத் தெரிவித்தனர். அவர், "இங்ஙனம் எ தி ர் ந் த தடையை நீக்கும் முறை அதுவேயாகும். நீங்கள் அ னே வீ ரு ம் அரகர வென்று ஆரவாரியுங்கள். " என்று அருளிச்செய்ய அவ்வொலி மிகுந்து ஓங்குவதாயிற்று. அஞ்சியோடிய பௌத்தர்களனைவரும் ஆச்சரியமுடைய வராய்மறித்தும் ஒருங்குகூடி, "இ ச் செ ய ல் வஞ்சனையோ, அ ல் ல து அவர்களுடைய சைவசமயத்து உண் மையோ" என மயங்கி, "நீங்கள் எங்களோடு மந்திரவாதமின்றி எதிர்ந்து தருக்கம் பேச வாருங்கள்" என்று தங்களுக்குள்ளே தலைவனாகிய சாரிபுத்தனை முன்கொண்டு பின்னும் வந்தார்கள். பிள்ளையார் அதைக்கேட்டுத் திருவுளம் மகிழ்ந்து வி ரை ந் து சென்று முத்துச்சிவிகையினின்றும் இறங்கி ஓர் அறவிடுதி மண் டபத்தின் மீதேறி அடியார்கள் சூழவீற்றிருந்து கொ ண் டு திரு முன்னே நின்ற சில அடியாரை நோக்கி, "தருக்கம் பேசவிரும் பிய பௌத்தர்களை இங்கே அழையுங்கள்" என்று ஆணை தந்தரு ளினர். அவ்வடியார்கள் அதைச் சென்னிமேற் கொண்டு பௌத் தர் கூட்டத்தையணைந்து, "மறைமுதலிய அறிவுநூல்கள் அனைத் தையும் ஓதாது உணர்ந்தவரும், முத்தமிழ் வேந்தரும், பரசமயக் கோளரியும் எங்கள் பேராசிரியருமாகிய திருஞானசம்பந்தப்பெரு மானர் உ ங் க ள் விருப்பத்தின்படி வாது செய்வதற்கு உங்களை மகிழ்ச்சியோடும் அழைக்கின்றார். வா ரு ங் க ள்" என்றார்கள். அது கேட்ட சாரிபுத்தன் பௌத்தர்களோடு வந்து மண்டபத்தி லேறிப் பிள்ளையாருக்கு அண்மையில் நின்றான். அப்பொழுது திருச் சின்னத்தைத் தடைப்படுத்திய புத்தநந்தியின் தலையைப்பொடி படுத்திய திருமுறையெழுதுவோர் பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி அவர் அ னு ம தி யை ப் பெற்று அப்புத்தனோடு வாது செய்து அச்சமயத்தை நிராகரணம் பண்ணி அ வ னை வென்று பிள்ளையாரின் திருவடிகளை வணங்கினார். பௌத்தர்கள் தோற் றுத் தங்கள் சமயம் பொய்ந்நெறி யென்றுகண்டு பிள்ளையாரை வீழ்ந்து வணங்கினார்கள். அவர் சைவசமயமே சிறந்த சமயம் என்பதை அவர்களுக்கு ஐயம்திரிபு அற உணர்த்தியருள, அவர் கள் அவருடைய அருள் நோக்கம் பெற்றமையால் அதனை இனிது உணர்ந்து அவரை வணங்கிச் சைவரானார்கள்.

## 13. தொண்டை நாட்டுச்செலவு

ஆளுடைய பிள்ளையார் அவ்விடத்தினின்றும் நீங்கித் திருக்கடவூருக்குச் சென்று காலகாலனைக் கண்டு வணங்கி அங்கே சின்னாள்வரை எழுந்தருளியிருந்தார். பின்னர் ஆமூரரசுகள் திருப்பூந்துருத்தியில் இருத்தலைக் கேள்வியுற்று, அவரைக் காண விரும்பிப் புறப்பட்டுப்போய் அவ்வூரை அணுகினார். அதனைத்தாண்டக வேந்தர் அறிந்து களிகூர்ந்து அவரை எதிர்கொண்டு வணங்கும்படி சென்று அவர்வரும் எல்லையை அடைந்து திருச்சின்னத்தின் ஒலியினைக் கேட்டு அவரைக்காணுதற்குச் சூழ்ந்த மக்களின் நெருக்கத்தினாலே தம்மை ஒருவரும் காணாதபடி உட்புகுந்து அவர் ஏறிவரும் முத்துச்சிவிகையைத்தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த்தாங்கிக் கொண்டு வந்தனர். பிள்ளையார் பூந்துருத்தியை மிகவும் அணுகியகாலை, "அப்பர் எங்குற்றார்?" என்றுவினவ, அதைக்கேட்ட அப்பெரியார், "அடியேன், தேவரீரைத்தாங்கி வரும் பெருவாழ்வைப்பெற்று இங்குற்றேன்," என்றார். உடனே சீகாழிச்செம்மல் உள்ளப்பதைப்போடும் சிவிகையினின்றும் இறங்கி நாவுக்கரசரை வணங்க, அவரும் தம்மை அவர் வணங்குதற்கு முன் தாம் அவரை வணங்க, அது கண்ட அடியார்களனைவரும் வணங்கி ஆரவாரித்தனர். பிள்ளையார் அப்பரோடும் திருப்பூந்துருத்தியிற் சென்று சிவபெருமானை வணங்கிச் சொல்வேந்தர்க்குத் தாம்பாண்டி நாட்டிற்சென்று சமணர்களை வாதில் வென்றதும் நெடுமாறனது கூனை நிமிர்த்ததும் அந்நாடெங்கும் திருநீற்றை வளர்த்ததும் அரசியார் அமைச்சர் என்கின்ற இருவருடைய பெருமையும் ஆகிய இவற்றைச் சொல்லியருளினார். ஆளுடைய அரசுகள் தாம் தொண்டை நாட்டுக்குச் சென்று ஆங்குச் சிவபிரான் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளை வணங்கியதைப் பிள்ளையாருக்குச் சொல்லியருளினார். பின், அவர் விடைபெற்றுக்கொண்டு பாண்டிநாட்டுக்குச்செல்ல, பிள்ளையார் காவிரிக்கு வடகரையிற்சென்று, திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் முதலிய பதிகளை வணங்கிக் கொண்டு சீகாழியை அடைந்து தோணியப்பரை நாள்தோறும் இறைஞ்சித் திருப்பதிகம் பாடிக்கொண்டிருந்தார்.

நெடுநாட் சென்றபின், பிள்ளையார் தொண்டைநாடு செல்லத்திருவுளங் கொண்டு தோணியப்பரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு அடியார்களோடு புறப்பட்டுத் தம்மோடு உடன் வருவதற்குத்துணிந்த சிவபாதஇருதயரை நோக்கி, "அப்பரே, நீர் இங்கேதானே வேதவேள்வி செய்து சிவபெருமானைப் பணிந்து கொண்டிரும்" என்று செப்பிச்சென்று, சிதம்பரம், திருத்தினைநகர், திருமாணிகுழி, திருப்பாதிரிப்புலியூர், திருவடுகூர், திருவக்கரை, திருவிரும்பைமாகாளம், திருவதிகை, திருவாமாத்தூர், திருக்கோவலூர், திருவறையணிநல்லூர்; திருவண்ணுமலை என்னும் பதிகளைப் பணிந்து கொண்டு வடதிசையில் உள்ள பதிகளையும் பணிந்து வணங்கித் தொண்டை நாட்டையடைந்தனர். அங்கே, திருவோத்தூர்க்குச் சென்று இறைவனைப் பணிந்து கொண்டு எழுந்தருளியிருந்தார். அந்தப்பதியிலுள்ள சிவனடியார், அழுதுதொழுது பிள்ளையாரை வணங்கிநின்று, "பரசமயப்புன்னெறி மாற்றிச் சைவசமயத்தை நிலைநிறுத்துதற் பொருட்டுத் திருவருளால் தோன்றிய எம்பொருமானே, நமது மெய்கண்ட தெய்வமாகிய சிவபெருமானுக்கு அடியேன் வைத்து வளர்க்கும் பனைமரங்களெல்லாம் மிகஉயர்வாய் வளர்ந்தும் ஆண்பனைமரங்களாகி இதுகாறும் காயாவாயின. அதுகண்ட அமணர்கள், "நீவிர் வைத்துஉண்டு பண்ணும் ஆண்பனைகளனைத்தையும் காய்க்கும் படிச்செய்தல் கூடுமோ! என்று நகைசெய்து இகழ்ந்து பேசினுர்கள். தேவரீர் திருவருள் செய்தல் வேண்டும்" என்று விண்ணப்பித்தனர். அது கேட்ட பிள்ளையார் திருவுளம் இரங்கி எழுந்து விரைவாகத் திருக்கோவிலுக்குச் சென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சிப் "பூத்தேர்ந்தாயன" என்னும் திருப்பதிகத்தைத் தொடங்கி அதன் திருக்கடைக்காப்பிலே, "குரும்பையாண்பனை யீன்குலையோத்தூர்" என்றருளிச் செய்தனர். அதனுல் ஆண்பனைகளனைத்தும் குலைகுலையாகக்குரும்பைகளை யுடையனவாய்ப் பெண்பனைகளாயின. இதனைக்கண்டவரெவரும் இரும்பூதெய்தினர். பிள்ளையார் அவ்வாறு அருள் செய்து பரமசிவனைப் பணிந்து கொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார். சமணர்கள் பரசமய கோளரியாகிய பிள்ளையாரது செயற்கரிய செயலைக்கண்டு அந் நாட்டைவிட்டு ஓடினுர்கள். அவர்களிற் சிலர் சிவபெருமானே உண்மைக்கடவுள் என்று துணிந்து சைவர்களாயினர். பிள்ளை

யாரது திருவாக்கினைப் பெற்றமையால் அப்பனைகளெல்லாம் தங்கள் காலத்தைக் கழித்து ஒழியாப்பிறவியை ஒழித்து அழியாப் பதவியை அடைந்தன.

சின்னுட் சென்றபின் பிள்ளையார் அத்திருப்பதியை நீங்கித் திருமாகறல், திருக்குரங்கணின் முட்டம் என்னும் பதிகளைப் பணிந்து கொண்டு காஞ்சீபுரத்தையடைந்தார். அங்கே திருவேகம்பம், திருக்கச்சிநெறிக்காரைக்காடு, திருஅநேகதங்காவதம், திருக்கச்சிமேற்றளி என்னும் திருப்பதிகளைத்தரிசித்துக் கொண்டு சின்னுள் அங்குத்தங்கியிருந்து, பின் அப்பதியை நீங்கித் திருமாற்பேறு, திருவல்லம், திருஇலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், திருவூறல் முதலிய பதிகளைப்பணிந்து கொண்டு பழையனூர்த் திருவாலங்காட்டிற்கு அருகிற்சென்றனர். அது காரைக்காலம்மையார் திருத்தலையாலே நடந்த திருப்பதியாதலால் அதனை மிதிக்க அஞ்சி, அதற்கு அண்மையிலுள்ள ஒரூரிலே அன்றிரவு துயின்றனர். திருவாலங்காட்டிலே எழுந்தருளியிருக்கும் சிவ பெருமான் நள்ளிரவில் அவரது கனவின்கண் தோன்றி, " நம்மைப்பாடுதற்கு மறந்தனையோ! " என்று அருளிச்செய்ய, சரேலெனப் பிள்ளையார் எழுந்து திருவருளைப்புகழ்ந்து, " துஞ்சவருவாரும், " என்னும் திருப்பதிகம் பாடியருளினர். மறுநாட்காலையில் திருக்கூட்டம் தம்மையணைந்த பொழுது இரவில் நிகழ்ந்ததை அவர்களுக்குக் கூறியருளினர். பின்பு, திருப்பாசூர், திருவெண்பாக்கம், திருக்காரிகரை முதலிய திருப்பதிகளை வணங்கிக் கொண்டு திருக்காளத்திமலையை அண்மி அதன்மேல் கண்ணப்ப நாயனுருடைய திருத்தொண்டைச்சிறப்பித்து, " வானவர்கள்தானவர்கள், " என்னும் திருப்பதிகம்பாடிக் கொண்டே சென்று மலையின்மேல் ஏறித்திருமுன்போய்த் தேவதேவனை வணங்கினுர். அவ்வணக்கத்தாற் பெற்றபயனைக்காண்பார் போல அன்பு வடிவமாகிய கண்ணப்பநாயனுரைக்கண்டு ஆனந்த அருவிசொரியக் கீழே விழுந்து வணங்கினுர். பின் அம்மலையினின்றும் இறங்கி ஒரு திருமடத்தில் அமர்ந்தருளினுர். காலந்தோறும் காளத்தி நாதரை வணங்கிக் கொண்டு அங்கே எழுந்தருளியிருக்கும் நாளிலே, வடதிசையிலும் மேற்றிசையிலும் தமிழ்மொழி வழங்குதலின்மையால் ஆங்குச் செல்லத் திருவுள்ளங் கொள்ளாராய் அங்கி

கிருந்தபடியே உத்தரகைலாசம், திருக்கேதாரம். திருக்கோகர்ணம், திருப்பருப்பதம், இந்திரநீலபருப்பதம் முதலிய பதிகளைப் பணிந்து பதிகம்பாடியருளினர். சில நாட்சென்றபின் திருக்காளத்தியை நீங்கித் திருவேற்காடு, திருவலிதாயம் முதலிய திருப்பதிகளைத்தரிசித்துக்கொண்டு, திருவொற்றியூரை அடைந்து சிவபெருமானைப் பணிந்து கொண்டு ஆங்கு எழுந்தருளியிருந்தார்.

## 14. என்பைப் பெண்ணுக்குதல்

திருமயிலாப்பூரிலே வணிகமரபிலே தோன்றி இறைவனிடத்தும் அடியார்களிடத்தும் வைத்த அன்பிற் சிறந்தவரும், பரசமயங்களைப்பாற்றல்வேண்டும் என்னும் சிந்தையுடையவரும் பெரும் செல்வருமாகிய சிவநேசர் என்பார் ஒருவர் இருந்தார். அவர் ஆளுடைய பிள்ளையார் ஞானப்பால் உண்டமையையும், மூன்ருவது ஆண்டிலிருந்தே தாம்பாடிய திருப்பதிகங்களிலே அமணர்களையும் பௌத்தர்களையும் இழித்துப் பாடுதலையும் சிவனடியார்கள் சொல்லக் கேள்வியுற்று உளம் மிகமகிழ்ந்து அவருடைய திருவடிகளிலே உழுவலன்புடையராகி இரவும் பகலும் அவரது அருட்செயல்களையே பேசலும் கேட்டலுமாகிய தொழிலை மேற்கொள்வாராயினர். அவர் பெருஞ்செல்வமும் பெரும் புகழும் உடையராயினும் பிள்ளைப்பேறு இன்மையால்மிகவும் கவலையுற்று சிவவழிபாடும் அடியார் வழிபாடும் செய்து அவற்றின்பயனுக ஓர் பெண்மகவைப் பெற்றெடுத்தார். அந்நங்கை செந்தாமரையாளாகிய திருமகளைப் போன்று பேரழகுவாய்ந்திருந்தாளாதலின் அவளுக்குப் பூம்பாவை என்னும் பெயர் வைக்கப்பட்டது. அவள் பேதைப்பருவம் கடந்து பெதும்பைப்பருவத்தை உற்றகாலை, தந்தையார் அவளுடையசிறந்த குணங்களைக்கண்டு வியப்புற்று மனமகிழ்ந்து, " இவளைமணஞ் செய்பவரே என்னுடைய பெருஞ்செல்வத்திற்கு உரியவராவர்" என்ருர். அக்காலத்திலே பிள்ளையார் பாண்டி நாட்டிற்குச் சென்று செய்தருளிய திருவருட்டிறங்கள் அனைத்தையும் அறிந்தவர்கள் வந்து சிவநேசரிடம் செப்பினர்கள். அவர் அதைக்கேட்டு அகமகிழ்ந்து அவர்கள் அனைவருக்கும் அளவிறந்த பொருள்களைக் கொடுத்து, பிள்ளையாரைத்திக்கு நோக்கி வணங்கி எழுந்துநின்று தம்முடையசுற்றத்தார்கள் அனை

வரும்கேட்க, " அடியேன் எனதுபுதல்வியாகிய பூம்பாவையையும் பொருள்களையும் என்னையும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுருக்குக் கொடுத்து விட்டேன் " என்று சொல்லிப் பெரும் மகிழ்வுற்றனர். ஒரு நாள் பூம்பாவை தோழியரோடு கன்னிமாடத்திற்கு அருகில் இருக்கின்ற பூஞ்சோலையிற் சென்று மலர்களைக்கொய்யும் பொழுது ஒரு பாம்பு மல்லிகைப் பந்தரிலே மறைந்து வந்து அவளுடைய விரலிலே கடித்து நஞ்சினை உகுத்து மேலேபடத்தை விரித்து நின்ருடி அடங்கிற்று. பூம்பாவை மயங்கிக் கீழேவிழச் சேடியர்கள் அச்சுற்று அவளைத்தாங்கிக் கன்னிமாடத்துள்ளே கொண்டு போனுர்கள். சிவநேசர் சுற்றத்தாருடன் அகங்கலங்கி அழுதனர். நச்சுமருத்துவர்கள் பலர் தனித்தனியேமந்திரதியான பாவகங்கள் செய்தும் அளவு கடந்த மருந்துகளைக் கொடுத்தும் அந்நச்சு நீர் நீங்காமல் ஏழுவேகமும் முறையே பொங்கித் தலைக் கொண்டது. உயிர் தங்குதற்குரிய குறிகள் இன்மையால் அம்மருத்துவர்கள் கைவிடச்சுற்றத்தார்கள் அவள்மேலே விழுந்து அலறி அழுதார்கள். சிவநேசர் ஒருவாறு தெளிந்து, " இந்த விடத்தினை நீக்கினவர்கட்கு என்அளவிறந்த பொருள்கள் அனைத்தும் கொடுப்பேன் " என்று பறையறைவித்தார். மூன்று நாளளவும் மன்னரிடத்துள்ளோர் முதலாகிய மந்திரவாதிகள் அனைவரும் வந்து தங்கள் செய்கையினுலே தீராமையினுல் திரும்பிவிட்டனர். சிவநேசர் அதுகண்டு அவலமுற்று, பின் ஒருவாறு தேறி " இவளைப் பிள்ளையாருக்கு என்று சொல்லியதனுல் நான் கவலை வேண்டுவதில்லை." என்று துன்பம் நீங்கி, பிள்ளையார் வருமளவும் இவ்வுடலை எரித்து எலும்பையும் சாம்பரையும் சேமித்து வைப்பேன் " எனத்துணிந்து அப்படியே எரித்து எலும்பையும் சாம்பரையும் ஒருகுடத்திலிட்டுக் கன்னிமாடத்திலே ஆடைசாத்தி அணிகள் அணிந்து பஞ்சணைமேல் வைத்தார். நாள்தோறும் தவருமல் மஞ்சனம், மாலை, சந்தனம், சோறு, விளக்கு முதலியவைகளை அமைத்தார். அதனையறிந்த யாவரும் வியந்தார்கள்.

இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருக்கும் நாளில், " பிள்ளையார் திருக்கூட்டத்தோடு திருவொற்றியூரில் வந்து இறைவனை வணங்கிக் கொண்டிருக்கின்ருர் " என்று அவ்வூரார்கள் பலர் வந்து சிவநேசரிடம் செப்பினுர்கள். அவர் அவர்கள் அனைவருக்

கும் ஆடைகளையும் பொன்களையும் கொடுத்துக் களிபேருவகை உடையாராகித் திருவொற்றியூர் வரைக்கும் நடைப்பந்தர் இட்டு ஆடைகளால் அணிசெய்து கமுகுகளும் வாழைகளும் நாட்டித் தோரணங்கள் நிரைத்துக் கொடிகள்கட்டி மாலைகளைத் தூக்கினர். பின்பு, "ஒற்றியூரிற் சென்று பிள்ளையாரின் திருவடிகளை வணங்குவேன்" என்று எழுந்து அம்மயிலாப்பூரில் உள்ள அடியார்களும் உடன் செல்லச்சென்று திருவொற்றியூரை அணுகினர். அப்பொழுது பிள்ளையாரும் திருவொற்றியூரை அகன்று திருமைலாப்பூரை நோக்கி அடியார் குழாத்தோடும் போந்தனர். சிவநேசரும் சிவனடியார்களும் அடியார் கூட்டத்தைத் தூரத்திலே கண்டு சிவபிரான் புதல்வராகிய திருஞானசம்பந்தர் எழுந்தருளிவருகின்றார் என்று மட்டற்றமகிழ்ச்சி கொண்டு கீழேவிழுந்து வணங்கினர்கள். பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி அவர்கள் எதிரே தொழுதுகொண்டு சென்று சிவநேசரின் செய்கையை அடியார்கள் சொல்லக் கேட்டு திருமயிலாப்பூரை அடைந்தார்.

ஆளுடைய பிள்ளையார் சிவநேசரிடத்து நடந்தசெயலைத் திருவுள்ளத்தடைந்து அவருடைய கருத்தைநிறைவேற்றும் பொருட்டும், சமணமதமும், பௌத்தமதமும்ஆகிய இவற்றின் தலைமையை அழித்தற்பொருட்டும் திருவுளம் கொண்டு 'கபாலீச்சரம்' என்னும் திருக்கோயிலுட்சென்று சிவபெருமானை வலம் செய்து வணங்கித்துதித்துத் திருக்கோயிலுக்குட் புறத்திலே வந்து சிவநேசரை நோக்கி, "உம்முடைய மகளினது எலும்பைநிறைத்த குடத்தைத்திருக்கோயிலின் புறமதிற்றிருவாயிலிலே கொண்டு வாரும்" என்று அருளிச்செய்தார். சிவநேசர் பெருமகிழ்ச்சி கொண்டு கீழேவிழுந்து வணங்கி எழுந்து தமது இல்லத்தையடைந்து கன்னிமாடத்திற் புகுந்து வெந்தசாம்பலும் எலும்பும் நிறைந்த குடத்தை எடுத்து மூடுகின்ற மணிச்சிவிகையினுள்ளே வைத்துத் தோழியர்கள் புடைசூழ்ந்துவர எடுப்பித்துக் கொண்டு வந்து திருக்கோபுரத்துக்கெதிரே சிவிகையை நீக்கி அக்குடத்தை எடுத்து சிவலிங்கப் பெருமானுக்குநேர் முகத்திலேவைத்து வணங்கினர். அவ்வூரில் உள்ளவர்களும், பிறஊர்களில் உள்ளவர்களும், சமணர் முதலாகிய புறச்சமயிகளும் இதனைப்பார்க்கும் பொருட்டுப்பக்கத்திலே வந்து சூழ்ந்தார்கள். தேவர்கள் முதலி

யோர் வானின்கண் வந்து நெருங்கினுர்கள். பிள்ளையார் உயிர்கள் அனைத்திற்கும் உறுதிபயப்பித்தற் பொருட்டு அ டி ய ா ர் கூட்டம் தன்னைச்சூழ்ந்து வரத்திருக்கோபுரவாயிலின் நேரேவந்து பூம்பாவையினது எலும்பு இ ரு க் கி ன் ற மட்குடத்தைக்கண்டு எல்லாம் வல்ல இறைவனது திருவருட்பெருமையைச் சிந்தித்துத் திருவருள் நோக்கினுலே "பூம்பாவாய்" என்று விளித்து, "பூமியிலே மக்கட்பிறவியினை எடுத்தவர்கள் பெறுதற்குரிய பயன் அன்புடனே சிவனடியார்கட்கு அமுது செய்வித்தலும் சைவாகம வி தி ப் ப டி செய்யப்படுகின்ற அச்சிவபிரானது திருவிழாவைக் கண்டுகளித்தலுமே என்பவை சத்தியமாயின் நீ இவ்வுலகர் முன் வருவாய்" என்று, "ம ட் டி ட் ட புன்னை" என்னும் திருப்பதிகத்தை எடுத்தருளினுர். அதில் அருளிச்செய்யப்பட்ட "போதியோ என்னும் திருவாக்காகிய அமிர்தம் அவ்வங்கத்திலே பொருந்த குடத்தினுள்ளே உடலாய் மாறியது. பூம்பாவை முதற்றிருப்பாட்டிலே வடிவுபெற்று வேறெட்டுப்பாட்டிலே பன்னிரெண்டு ஆண்டு அடைந்து குடத்தினுள் அடங்கியிருந்தனள். பின்பு பிள்ளையார் சமணர்களும் பௌத்தர்களும் இச்செயலை ஏற்றதன்று என்று எடுத்துச்சொல்வார்கள் என்னும்கருத்தினுல் பத்தாம்திருப்பாட்டை அருளிச்செய்தனர். அப்பொழுது பூம்பாவைதன் கைவெளியே தோன்றக்குட முடைத்தெழுந்தாள். பிள்ளையார் அ து க ண் டு திருக்கடைக்காப்புச் சாத்தியருளினுர், அங்ஙனம் எழுந்து நின்ற பூம்பாவையைப் பார்த்தவர்களனைவரும் என்று மடையா இறும்பூதெய்தினுர். அடியார்கள் அனைவரும் 'அரகரா' எ ன் று சொல்லும் ஓசைமிகுந்து ஓங்கிற்று. தேவர்களும் முனிவர்களும் திருவருட்சிறப்பை நோக்கி மலர்மாரி பொழிந்தார்கள். நிலத்தில் உள்ளவர்கள் "இது எம்பெருமானது பேரருளே" என்று கைகள் சென்னிமேல் ஏறக்குவியத்தம் வயம் அற்றவராய்க் கீழே வீழ்ந்தார்கள். செயற்கரிய அச்செயலைக்கண்ட சமணர்கள் முதலிய புறச்சமயிகள் அனைவரும் ஏங்கித்தள்ளாடி வீழ்ந்தனர். அளவிறந்த வயதையுடைய பிரமதேவர் த ம் ம ா லே படைக்கப்பட்ட திலோத்தமை யென்னும் மங்கையிடத்து அவள் அழகின் வெள்ளத்தை நான்குமுகத்தினுலே கண்டார். பதினுறு அகவையை யுடைய பிள்ளையாரோ அத்திலோத்தமையை விடப் பே ர ழ கு வாய்ந்த, தம்மாலே படைக்கப்பட்ட பூம்பாவையினிடத்தே சிவ

பிரானது பெருங்கருணை வெள்ளத்தை ஆயிரம் முகத்தினுலே கண் டார். பூம்பாவையைக்கண்ட தந்தையாராகிய சிவநேசர் பிள்ளை யாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுர். அந்நங்கை ஆண் டவனை வ ண ங் கி ப் பின்பு ஆளுடையபிள்ளையாரை வணங்கி எழுந்து நின்ருள்.

பிள்ளையார் சிவநேசரை நோக்கி, "இனிஉம்முடைய புதல் வியை வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போம்" என்று திருவாய் மலர்ந்தருளினுர். சிவநேசர் காழிக்கன்றினது திருவடித்தாமரை களை வணங்கித்துதித்து, "அடிகேள்! அ டி யே ன் அருந்தவம் செய்து பெற்ற இம்மங்கையைத் தேவரீர் திருமணம் செய்தருளல் வேண்டும்" என்று வேண்ட பிள்ளையார் அவரை நோக்கி, "நீர் பெற்றபெண், பாம்பினுல் இறந்தபின் நாம் உயிர்கள் அனைத்திற் கும் சிவபெருமானது திருவருள் மகிமயை விளக்கிக்காட்டுதற் பொருட்டுத் திருப்பதிகம்பாடி உய்யும்படி செய்தோம்! ஆதலின் இவ்வார்த்தைதகாது" என்று மறுத்தருளினுர். அதுகேட்டு வணி கரும் அவர்கிளைஞரும் மனம் க ல ங் கி ப் பிள்ளையாரது திருவடி களிலே வீழ்ந்துஅழ, பிள்ளையார் அ வ ரு டை ய பெருந்துயரம் தணியும் பொருட்டுப்பல நீதிகளை அவர்கட்கு எடுத்துப் போதித் தருளினுர். அதுகேட்ட அவர்கள் அவலம் நீங்கினுர்கள். பிள்ளைப் பெருமான் திருகோயிலின் உள்ளே சென்றருளினுர். சிவநேசர் "பூம்பாவையை வேருெருவருக்கும் ம ண ம் செய்து கொடுப்ப தில்லை" என்று கொண்டுபோய்க் கன்னிமாடத்தில் வைத்தார். அவளும் அழியாப்பதவியை அ டை ந் த ன ள். திருக்கோயிலி னுள்ளே எழுந்தருளிய பிள்ளையார் சுவாமியை வணங்கித் திருவரு ளைப்புகழ்ந்து திருப்பதிகம் பாடிக்கொண்டு புறம் போந்து அங் குத்தங்கியிருந்தார்.

## 15. திருமணமும் வீடுபேறும்

சின்னுட்சென்றபின் பிள்ளையார் திருமயிலாப்பூரை நீங்கி அங்குள்ள அடியார்கள் விடைகொள்ள, சிவநேசர் துன்பம் நீங்கு மாறு அவருக்கு இன்மொழிகள் பல அ ரு ளி விடைகொடுத்து விட்டுத்தாம் திருவான்மியூர், திருவிடைச்சுரம், தி ரு க் க ழு க்

குன்று, திருவச்சிறுபாக்கம், திருவரசிலி, திருப்புறவார் பனங்காட்டூர் முதலாகிய திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு சிதம்பரத்தை யடைந்து காலந்தோறும் திருக்கூத்தரைத்தரிசனம் செய்து கொண்டு எழுந்தருளியிருந்தார். அவர்தாதையாரும் காழியில் உள்ள மற்ற மறையவர்களும் அடியார்களும், "பிள்ளையார் சிதம்பரத்தில் வந்து எழுந்தருளியிருக்கின்றார்" என்று கேள்வியுற்று ஆங்குவந்து சேர்ந்தனர். வெங்குரு வேந்தர் அவர்களோடு மன்றுளாடியை வணங்கி அருள்பெற்றுச் சிதம்பரத்தை அகன்று சீகாழியை அடைந்து காலந்தோறும் தோணியப்பரைத் தரிசனம் செய்து கொண்டு ஆங்கு எழுந்தருளியிருந்தார். அவ்வாறு இருக்கும் நாளிலே முருகநாயனர் திருநீலநக்கநாயனர் முதலாகிய திருத்தொண்டர்கள் சுற்றத்தார்களோடு சீகாழியில் வந்து பிள்ளையாரை வணங்கிக் கொண்டிருந்தனர்.

சிவபாதஇருதயரும் அவர் சுற்றத்தார்களும் ஒருங்கு சேர்ந்து, "பிள்ளையாருக்குத் திருமணம் செய்வதற்கு இதுவேதக்க கலமாகும்" என்று எண்ணி அவரை அடைந்து, அடிகேள்! தேவரீர்மணச்சடங்கைப் பிறருக்குக் காட்டும்பொருட்டு ஒரு கன்னியை மணம் செய்தல் வேண்டும்" என்று விண்ணப்பித்தனர். பிள்ளைப்பெருமான், "அதுகூடாது" என்று மறுத்தருள, மறையவர்கள் பின்னும் வணங்கி, "தேவரீர் இந்நிலவுலகத்தின் கண்ணே மறைநெறியை நிலைநிறுத்தப்புகுந்தீர். ஆதலால் அவ்வேத விதிப்படி திருமணம் செய்தருளுதற்குத் திருவுளம் செய்தல் வேண்டும்" என்றார்கள். பிள்ளையார் மறைநெறி நிலைப்படும் பொருட்டு அதற்கு உடன்பட்டருளினர். அதுகண்ட தந்தையாரும் மற்றமறையவர்களும், "இது சிவபிரான் திருவருளேயாகும்" என்று உருகி உளம் மகிழ்ந்து, "திருநல்லூரில் இருக்கின்ற நம்பாண்டார்நம்பி என்பவருடைய புதல்வியே பிள்ளையார் மனைவியாதற்குத்தகுதியுடையவள்" என்று எண்ணினர்கள். சிவபாத இருதயர் மறையவர்களோடும் திருத்தொண்டர்களோடும், திருமணம்பேசுதற்குத் திருநல்லூருக்கு ச்சென்று சுற்றத்தார்களோடு வந்து தம்மைஎதிர் கொண்டு வணங்கிய நம்பாண்டார் நம்பியின் இல்லத்தையடைந்தார். அவர் வந்தவர்கட்கு முகமன்கூறி, "நீங்கள் இங்கு எழுந்தருளியது என்னை?" என்றுவினவ, அவர்கள்அவ

ரைப்பார்த்து, நாங்கள் ஞானசம்பந்தப்பெருமானுக்கு உம்முடைய புதல்வியைத் திருமணம் பேசவந்தோம்" என்று சொல்ல, நம் பாண்டார்நம்பி கழிபேருவகை உடையராய்ச்சிவபாத இருதயரை நோக்கி, "தேவரீருடைய பெருந்தவத்தினுலே திருவவதாரம் செய்தவரும் உலகமாதாவாகிய உமாதேவியாரது திருமுலைப்பாலை யுண்டவருமாகிய திருஞானசம்பந்தப் பெருமானுர்க்கு அடியேனும் என்குலமும் உய்யும் பொருட்டு என்குலக்கொழுந்தைத்திருமணம் செய்து கொடுப்பதற்கு என்தவம் செய்தேனே?" என்ருர். அது கேட்ட சிவபாதஇருதயர் மற்றவர்களோடு மனமகிழ்ந்து மீண்டு சீகாழிசேர்ந்து பிள்ளையாருக்கு அதனைத்தெரிவித்துக் கணிகனைக் கொண்டு திருமணத்திற்கு உரிய நன்னுளை உறுதிசெய்து எங்கும் திருமணமுடங்கலைப் போக்கி அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்வித்தார். நம்பாண்டார் நம்பியும் அங்ஙனமே செய்தனர்.

ஆளுடைய பிள்ளையார் திருமணநாளுக்கு முதனுளே கங்கணம் அணிந்து கொண்டு மறுநாட்காலையில் நாட்கடன்களை மூடித்துத் திருத்தோணியப்பரை வணங்கிக்கொண்டு முத்துச்சிவிகைமேல் ஏறித்திருமணம் காணவந்த அனைவரும் சூழ, மங்கல இயங்கள் ஒலிக்க, குடைகள் சாமரங்கள் ஆலவட்டங்கள் முதலியன நெருங்க, முத்துக்குடை நிழற்ற, பெருஞ்சிறப்புடனே சென்று திருநல்லூரை அணுகி அங்கிருந்து வந்து பலர் எதிர் கொள்ளப்போய் அங்குள்ள திருப்பெருமணம் என்னும் திருக்கோயிலுட் புகுந்து இறைவனைப் பணிந்து திருப்பதிகம்பாடிக் கொண்டு மறையவர்களின் வேண்டுகோளின்படி திருக்கோயிலுக்குப்புறத்தில் இருக்கின்ற ஒரு திருமடத்தில் எழுந்தருளியிருந்தனர். மறையவர்கள் பிள்ளையாரைத் திருமஞ்சனநீராட்டி விலைமதிப்பில்லாத ஆடையணிகளினுலே ஒப்பனை செய்தார்கள். பின்பு பிள்ளையார் திருவருட் குறியாக அக்கமாலையை அனைவரும் துதிக்கும்படி வணங்கித்தாமே எடுத்துத் தரித்துப்பசுமல நீக்கத் திற்குச் சிவத்துவக்குறியாகி அழகுக்கு அணியாய் விளங்குகின்ற திருவெண்ணீற்றைத் திருவைந்தெழுத்தோதி அணிந்து கொண்டு மிகவும் ஒப்பனை செய்யப்பட்ட திருவீதியிலே எழுந்தருளிவந்து சிவபிரானை வணங்கி முத்துச்சிவிகைமேல் ஏறியருளினுர். அப்பொழுது பலவகைப்பட்ட இன்னியங்களும் ஒலித்தன. வானி

லுள்ளதேவர்கள் கற்பகப்பூமாரி பெய்தார்கள். மறையவர்கள் மறையொலி செய்தார்கள். பிள்ளையார் முத்துக்குடை நிழற்ற முத்துச்சின்னங்களெல்லாம் தமது எண்ணிறந்த திருப்பெயர்களை எடுத்துச்சொல்லி ஊத எழுந்தருளிவந்தார். பூப்பந்தலுக்குமுன் வந்தஉடனே சிவிகையினின்றும் இறங்கி மலர்களும் பொற்பொடியும் பரந்தபாவாடைமேல் நடந்து திருக்கலியாண மண்டபத்துட் புகுந்து இரத்திஞசனத்தின் மேல் வீற்றிருந்தருளினர். அப்பொழுது நம்பாண்டார்நம்பிதம்முடைய மனைவியார் ஆவின்பாலும் தூயநீரும் ஏந்திப்பின்வர வந்து பிள்ளையாரைச் சிவபெருமாஞகப் பாவித்துத்தம்முடைய மனைவியார் கரகநீரைவார்க்க அவருடைய திருவடிகளை விளக்கி அங்ஙனம் செய்தநன்னீரைத்தமது முடியின்மேல் தெளித்து உள்ளும் பூரித்துச்சுற்றத்தாரின் மீதும்தெளித்தார். பிள்ளையாருடைய திருக்கரத்திலே நீரைவார்த்துத்தம்முடைய கோத்திரத்தைச் சொல்லி, "என்னுடைய புதல்வியைத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனுருக்குக் கொடுத்தேன்," என்ருர். மணம்செய்தற்குரிய நல்லோரைவர மணமகளைக் கொண்டுவந்து பிள்ளையாருக்கு வலப்பக்கத்தில் இருத்தினர்கள். திருநீலநக்க நாயனர் பிள்ளையார் திருமுன்பு சிவபிரானைத் தியானித்துக் கொண்டு மறைநெறிப்படி சடங்கினைச் செய்ய, மறைகள் ஒலிக்க பிள்ளையார் அந்நங்கையின் கையைப்பிடித்து, பொரியை நெருப்பில் இட்டுச் சிவபெருமானைத் துதித்து நெருப்பினை வலம்செய்ய வேண்டி, "தீயாவார் சிவபெருமானே" யென்று திருவுளம் கொண்டு திருப்பெருமணம் என்னும் திருக்கோயிலுட் செல்லக் கருதி மறைநெறிப்படி வளர்க்கப்பட்ட தீயினைவலம் செய்து, "இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே. நாம் இவளோடு இறைவன் திருவடியை அடைவேம்" என்று எண்ணி அனைவரும் சூழ அந்நங்கையோடும் சென்று திருக்கோயிலுட்புகுந்து தம்முடைய திருமணத்தைக்காண வந்தவர்களுடைய மலத்தைநீக்கத்திருவுளங் கொண்டு, "திருநல்லூர்ப் பெருமணத்துள் எழுந்தருளியிருக்கும் கடவுளே, தேவரீருடைய திருவடிகளை அடையும் பதம் இதுவே" என்று "கல்லூர்ப்பெருமணம்" என்னும் திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

ஆயகாலை பெருங்கருணைத் தடங்கடலாய பெருமான், "நீயும் உன்மனைவியும் உன்னுடைய திருமணத்தைக் காணவந்த அனைவரும் இந்த ஒளியினுள்ளேவந்து நம்மை அடையக்கடவீர் களாக" என்று அருளிச்செய்து திருக்கோயில் உட்படமேலோங் கிய தூயஒளிவடிவமாகி அவ்வொளிக்குள் ஒருதிருவாயிலை வகுத் துக்காட்டியருளினுர். கருணைக்கடலாகிய பிள்ளையார் ஒளிவடி வாகிய அக்கடவுளை வணங்கித்துதித்து உலகம் உய்யும்பொருட்டு அதனையடையும் நெறியை அருளிச்செய்யத் திருவுளம் கொண்டு யாவருக்கும் ஞானமெய்ந்நெறி நமச்சிவாய என்கின்றமந்திரம் என்னும் கருத்தையுடைய "காதலாகிக்கசிந்து" என்னும் நமச்சி வாயத்திருப்பதிகத்தை அனைவரும் கேட்க அருளிச்செய்து, "இம் மணங்காண வந்த எல்லீரும் உங்கள் பிறவிநோய் நீங்கும் பொருட்டு இந்த ஒளியினுள்ளே புகுவீர்களாக" என்று திருவாய் மலர்ந்தருளினுர். பிறவிக்கடலிலே கரைகாணுது அழுந்தி மயங்கு கின்றவர்கள் பிள்ளையாருடைய திருமணத்தைக்கண்டு வணங் கப்பெற்றமையால் அந்த ஒளியினுள்ளே புகுந்தார்கள். திருநீல நக்கநாயனுர், முருகநாயனுர், சிவபாதஇருதயர், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் தங்கள் வாழ்க்கைத்துணைகளோடும் கிளைஞர்களோடும் புகுந்தார்கள். முத்தமிழ் விரகரின்முத்துச்சிவிகை முதலியவற்றைத் தாங்கிச்சென்றவர்களும் ஏனையஏவலாளர்களும் வணங்கிப்புகுந் தார்கள். சைவர், பாசுபதர், மகாவிரதர், காளாமுகர், வாமர், வயி ரவர் என்ற அறுவகை உட்சமயிகளும், வைதீகசைவர்களும் சைவ சித்தாந்திகளும் ஆகிய அனைவரும் அந்த ஒளியினுள்ளே புகுந்த பின் பிள்ளையார் தமது மனைவியாரைக் கைப்பற்றிக் கொண்டு அவ்வொளியினை வலம்செய்து அதனுள்ளேபுகுந்து பேரின்பத்தைப் பெற்றனர். அதன்பின் அந்தஒளி மறைந்துவிடத் திருப்பெரு மணமாய திருக்கோயில் தோன்றுதலும் உலகத்தின்கண் அப் பேறுவாயாதவர்கள் அனைவரும் அவலமுற்று அழுங்கினர். பிள் ளையார் ஒளியுட்புகுந்தமையைச்சேய்மையிற் கண்டு அணுகப் பெருத தேவர்களும் முனிவர்களும் தங்கள் தங்கள் கவலை நீங்கத் துதித்தார்கள்.

# 11. திருஞான சம்பந்தர் வரலாற்று ஆராய்ச்சி

## 1. வரலாற்றின் உண்மைகாணும் ஆதரவுகள்

முற்காலத்திலிருந்த பெரியார் பலரின் வரலாற்றுண்மையை அறிந்து கோடற்குக் கருவிகளாகவுள்ளனபல; அவை அகச்சான்றுகளும் கல்வெட்டுமுதலிய புறச்சான்றுகளும் ஆகும். அகச்சான்றை ஆதரவாகக்கொண்டு கூறப்பட்ட வரலாறுகள் எவ்வகையானும் எள்ளப்படாதனவாகும். அகச்சான்றை ஆதரவாகக் கொள்ளாத பகுதிகள் புறச்சான்றிற்காணப் படுமேல் அவற்றைக் கூறியவர் கூறப்பட்டார் காலத்திற்கு அண்மைக் காலத்திற் றோன்றியவராய், சரித்திரவுணர்ச்சி, உலகியலுணர்வு, புனைந்துரைக்கு அஞ்சுதல், கூறப்பட்டாருக்கு அமையாததொரு பெருமையைத்தமது புனைந்துரையாற்புகுத்தாமை, முன்னோர்கள் கூறியவற்றைத்தாமும் ஆராய்ந்து நன்குதெளிதல் முதலிய குணங்களாற் பொலிவரேல் அவர் கூற்றும் வலியுடையதேயாகும்.

இனி, இவ்வாதரவுகளைக் கொண்டு வரலாற்றுண்மைகாண்பவர் அச்சரிதத்தலைவர்களாகிய பெருமக்களாற் செய்யப்பட்ட செயற்கரிய செயல்களின் உண்மையை அறியுங்கருவியாகிய யோகக்காட்சி கொண்டு அறியவேண்டுமேயன்றி அதற்கு வேறுபட்டதுறையினின்று கொண்டு அவைமக்கட்டன்மைக்கு மீறியனவாயுள்ளன' என்றுகருதி அவையிற்றைப்பொய்யெனக் கூறுதல் அறிவுடைமையாகாது. எனவே வரலாற்றுண்மைகாணுங் கருவிவேறு; செயற்கரிய செயல்களின் உண்மை காணுங்கருவி வேறு என்பது பெற்றும்.

இனி, இவ்விருபெருமக்களின் வரலாற்றினைப் 'பெரியபுராணம்' என்று வழங்குகின்ற 'திருத்தொண்டர் புராண' த்திற்பாரித்துக் கூறியருளியவர் **'சேக்கிழார்'** என்னும் புலவர் பெருமகனாராவர், இவரிடத்தில் மேற்கூறிய குணங்கள் முற்றும் பொருந்தியிருந்தன. அவற்றை விரிப்பின்மற்றென்று விரித்தலாகி விடுமாதலின் சுருக்கமாகச் சிலவற்றைத் தெரிந்து கோடல் ஈண்டைக்குப் பொருந்தியதொன்றாகும்.

# 2 சேக்கிழார்

குலோத்துங்க சோழன் வேண்டுகோளுக்கு இசைந்து திருத்தொண்டர் வரலாற்றினைக் கூறத்தொடங்கிய இவர் தில்லைக் குச்சென்று திருக்கூத்தன் திருமுன்நின்று பருகற்கினிய அப் பரங்கருணைத் தடங்கடலை உருகிப்பருகியுளங்குளிர முகந்து கொண்டு அதனைப்பாடிமுடித்தற்குரிய ஆற்றலைத் தமக்குந்தந் தருளவேண்டுமென்று குறையிரந்துவேண்ட, அவ்விறைவனது இன்னருளால் 'உலகெலாம்' என்னும்ஒலி அசரீரியாக எழுந்தது. இவ்வுண்மையை,

*" அருளினீர்மைத்திருத் தொண்டறி வருந்*
*தெருளினீரிது செப்புதற் காமெனின்*
*வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய*
*பொருளினாகு மெனப்புகல் வாமன்றே "*

என்னுஞ் செய்யுளால் அவரே விளக்கியருளினர்.

இனி, இங்ஙனம் வானிழல் கூறியது கொண்டு அனைத்தை யும் உணர்ந்துபாடி முடித்தனரெனக் கூறுவர்சிலர். அது அன் புக்கண் ஒன்றுமட்டுங் கொண்டு கூறுவதாகும். அதனோடு ஆராய்ச்சிக் கண்ணையுங் கொண்டு நோக்கினால் அவர், வன் றொண்டர் அருளிய 'திருத்தொண்டத்தொகை' யையும் ஏனைய தேவாரங்களையும், நம்பிண்டார் நம்பிகள் அருளிய 'திருத்தொண் டர் திருவந்தாதி' என்னும் வகையையும் ஆதரவாகக்கொண்டு ஒவ்வொரு அடியாரிருந்த ஊருக்கும்தாமே சென்று ஆங்காங் குள்ளகுறிகளையுஞ் செவிவழிச் செய்திகளையும் முறையேகண்டுங் கேட்டும், தாம் அச்சோழமன்னனிடம் அமைச்சராக இருந்தமை யின் அறிஞர் பலரை ஏவி உண்மைகளை அறிந்தும், இவ்வாதரவு களுடன் தாமும் தம் அறிவுக்குப் பொருந்த நன்கு ஆராய்ந் துமேபாடி முடித்தனரென்பது நன்கு புலனாகும்.

'இங்ஙனம் பல வகையாலும் ஆராய்ந்து உண்மைகண்டு உரைத்தனர்' என்பதற்கு நம்பியாண்டார்நம்பிகள் என்னும்வகை நூலாசிரியர் கூறாது விட்டமரபையும் ஊரையும் நாயன்மார் சில ருக்குக் கூறியிருப்பதே போதிய சான்றாகும். 'இதனைப் புனைந்து

ரையாகக் கொள்ளலாகாதோ' எனின், அந்நாயன்மார் சிலரின் மரபினைக்கூறுதும் போந்தனராதலின் அங்ஙனங் கொள்ளுதற்கில்லையென்க. என்னை ? புனைந்துரைக்கப்புக்கார் அனைவருக்குங் கூறியிருப்பாராதலின். இனி, திருஞானசம்பந்தரின் ஊர்முதலிய வற்றிற்குள்ள ஆதரவுகளைப்பார்ப்போம்.

## 3. ஊர், பெயர், மரபு

பிள்ளையார் பிறந்தருளிய ஊர் சீகாழி எனவரலாற்றிற்கண்டோம். இதற்கு அகச்சான்றுகள் நிறையவுள்ளன. நாயனுர் மங்கையர்க்கரசியார், குலச்சிறையாராகிய இ வ ர் க ள் வேண்டுகோளுக்கிணங்கிப் பாண்டிமன்னரது வெப்பு நோயைத் தீர்க்கச் சென்று அவரால் இடப்பட்ட ஆதனத்தில் அ ம ர் ந் த கா லை 'அவ்வரசர் அடிகேள்! உமது ஊர்யாது' எனவினவினபோது,

*" பிரமனூர் வேணுபுரம் புகலிவெங்குரு பெருநீர்த்தோணி*
*புரமன்னு பூந்தராய் பொன்னஞ்சிரபுரம் புறவஞ்சண்பை*
*ஆன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங்காதியாய*
*பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக்கழுமலம் நாம்பரவுமூரே "*

எ ன் று திருச்சக்கரமாற்றுகப்பாடிய திருப்பதிகத்தால் விடையளித்தனர். இஃது அந்நாயனுர் பிறந்தருளிய ஊர் சீகாழி என்பதற்குத்தக்க சான்றுதல் காண்க.

சோழமன்னன் அவைக்களத்திற்குக் க ம் ப நா ட ர் முதன் முறை சென்றகாலை அம்மன்னன் அவரை 'நுமது ஊர்யாது' என வினவியகாலை,

*" மோட்டெருமை வாவிபுகமுட்டுவரால் கன்றென்று*
*வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே = நாட்டில்*
*அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்*
*உடையான் சடையப்ப னூர் "*

எனக்கம்பர் செய்யுளால் விடையிறுத்தமை ஈண்டுக் கருதற்பாலது. இனி, 'காழியுள் ஞானசம்பந்தன்' எனவும், 'நான்மறைஞானசம்பந்தன்' எனவும், பூசுரன்ஞானசம்பந்தன்' எனவும்

வருஉம் அடிகள் திருவாக்குக்களானும் இங்ஙனமே ஒவ்வொரு திருப்பதிகத்தின் இறுதிதோறுமுள்ள திருக்கடைக்காப்பில் வரு மவற்றானும் அவர்பெயர் திருஞானசம்பந்த ரென்பதும் மரபு மறை யவர் குலமென்பதும் பெறப்படுதல் காண்க. இவர் தந்தைதாய ரின் பெயர்கள் சேக்கிழாராலே புராணத்திற்கூறப்பட்டிருத்த லன்றி அதற்கு முற்பட்டுக் கூறப்பட்டுள வென்பதற்குப் போதிய ஆதரவுகளில்லை,

## 4. இளமையில் ஞானப்பால் பெற்றமை

ஆளுடைய பிள்ளையார் ஆலவாயின்கண் அமணர்கள் சூழ்ச்சியை அழித்து அமர்ந்திருந்த காலை அவரது தாதையார் காழியிலிருந்து அவரைப்பார்க்கச் சென்றனர். பிள்ளையார் தந்தை யாரைக் காண்டலும் தோணியப்பரும் உமையம்மையுமாகிய இவர்கள் நினைவு தலைக்கொள்ளப் பெற்றாராய் அவரை நோக்கி 'எனது இன்னுயிர்த் தந்தையும் தாயும் கழுமலவள நகரின் கண் காட்சிக்கினியவராய் வீற்றிருக்கின்றார்களோ' எனவினவ எடுத்த திருப்பதிகமாகிய 'மண்ணினல்ல வண்ணம்' என்னுந்திருப்பதிகத் தில்இரண்டாவது திருப்பாட்டில் "போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத், தாதையார் முனிவுறத்தானெனையாண் டவன்" எனப்பிள்ளையாரே கூறுமாற்றால், பொற்கிண்ணத்தில் ஞானப்பாலுண்டமையும் அதன் பொருட்டுத் தாதையார் முனிந்த மையும் நன்குபுலனாதல் காண்க.

## 5. இளமையிலேயே பாடினமை

இவர் ஆண்டவனருளைப் பெற்றமறுநாளே தன் தாயா ராகிய பகவதியார் பிறந்தபதியாகிய திருநனிபள்ளிக்கு, ஆங்கி ருந்து வந்து வேண்டிய மறையோர்களின் வேண்டுகோட்கிணங் கிப்போங்காலை, தந்தையாராகிய சிவபாதஇருதயர் தம்மைத்தோளி லெடுத்துச்செல்ல அதுபோது பாடிய 'காரைகள் கூகைமுல்லை' என்று தொடங்குந் திருநனிபள்ளிப் பதிகத்திறுதியில்,

*"கடல்வரை யோதமல்கு கழிகானல் பானல் கமழ்*
*காழியென்று கருதப்*
*படுபொருளாறு நாலுமுளதாக வைத்தபதியான*
*ஞானமுனிவன்*

*இடுமறை யொன்ற அத்தர்பியன் மேலிருந்தின்*
*னிசையாலுரைத்தபனுவல்*
*நடுவிருளாடு மெந்தை நனிபள்ளியுள்கவினை*
*கெடுதலாணை நமதே. ”*

என அருளிய அருட்பாவினுல், அவர் பாடுங்கால் தந்தை யார் தோளிலிருத்தற்குரிய அத்துணை இளமைப்பருவம் வாய்ந்த வரென்பதும், அப்பாட்டுக்கள் மறைமுடிவின் கருத்துக்களையுடை யனவென்பதும் அவை இனிய இசைப் பாட்டுக்களளென்பதும் பிறவும் வெள்ளிடை விலங்கல் எனவிளங்குதல் காண்க. இன்னும் மதுரையிற்சமணர்களுடன் வாது செய்யப் புகுங்கால், இவரது இளமைப்பருவத்தைக் கண்டு 'சமணர்களால் இக்குழந்தைக்கு யாதேனுந்தீது நேருமோ' என அஞ்சிய மங்கையர்க்கரசியாரை நோக்கி,

*“ மானினேர் விழிமாதராய் வழுதிக்கு மாபெருந்தேவிகேள்*
*பானல் வாயொரு பாலனீங்கிவ னென்று நீபரிவெய்திடேல்*
*ஆனைமாமலையாதி யாயவிடங்களிற்பல அல்லல்சேர்*
*ஈனர்கட்கெளியேனலேன் திருவாலவாயரனிற்கவே ”*

எனத் தம்மிளமைப் பருவத்தினைக்குறிக்கின்றனர். “கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய், பாலனாய தொண்டு செய்து ” என்பதனுலும் இவர் இளமைப்பருவமும் பாடலும் விளங் குதல்காண்க.

## 6. முதற்பதிகம் தோடுடைய செவியன் என்பது

இனி, “இவர் ஆண்டவனருளால் ஞானப்பாலைப்பருகின மையை அறியாத தாதை “யார் எச்சிலை நுகர்ந்தாய் ” எனவின வியகாலை, 'தோடுடையசெவியன்' என்று தொடங்கும் பதிகந் தான்பாடினரெனக்கொள்ளுதல் யாங்ஙனம்? அகச்சான்றில் லையே ” என ஐயுறுவார் சிலர். அகச்சான்று இல்லையேனும் முற் றத்துறந்த பட்டினத்தடிகள் திருக்கழுமல மும்மணிக்கோவையில்,

“ தாதையொடு வந்த வேதியச்சிறுவன் தளர்நடைப் பரு வத்து வளர்பசிவருத்த அன்னுயோ வென்றழைப்ப முன்னின்று

ஞானபோனகத்தருளட்டிக் குழைத்த ஆனுத்திரளையவன் வயினருள அந்தணன் முனிந்து தந்தாரியாரென அவனைக்காட்டு வனப்பவானுர் தோடுடைய செவியனென்றும் பீடுடைய பெம்மா னென்றும் கையிற் சுட்டிக்காட்ட ஐய நீ வெளிப்பட்டருளினை யாங்கே"

என அருளினமைகாண்க. இவர் ஒன்பதாவது நூற்றுண்டிலிருந்த வகுணபாண்டியனைத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் 'பெரிய அன்பின் வரகுணதேவரும்' எனப்பாராட்டியிருப்பதால் அந்நூற்றுண்டுக்குப் பின்னும் பதினேராவது நூற்றுண்டிலிருந்த நம்பியாண்டார் நம்பிகள் இப்பட்டினத்தடிகளியற்றிய நூல்களைப் பதினேராவது திருமுறையிற் சேர்த்திருப்பதால் அந் நூற்றுண் டுக்கு முன்னும், எனவே பத்தாவது நூற்றுண்டில் இருந்தவராதல் வேண்டுமென்பது ஆராச்சியாளர் துணிபு. ஆகவே இவர் ஆளு டைய பிள்ளையார் காலத்திற்கு இரண்டு நூற்ருண்டுக்குப் பின் இருந்தவராதலானும், பெரும்புலவர் பெருமானும், இறைவன் மாட்டும் அடியார்மாட்டும் பேரன்பருமாவரென்பது இவர் இயற் றிய நூல்களால் விளங்குகின்றமையாலும் இவர் கூற்றுவலி யுடைய தென்க. இனி, நம்பியாண்டார் நம்பிகள் 'திருத்தொண் டர் திருவந்தாதியேயன்றி, ஆளுடையபிள்ளையார் மேல், திரு வந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திரு வுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என ஆறு நூல்கள் இயற்றியருளினர். அவற்றுள் திருவந்தாதியில்,

"மெல்விரலாற் றேட்டியல் காதனிவனென்று தாதைக்குச் சூழ்விசும்பிற்காட்டியகன்று" எனவும், திருக்கலம்பகத்தில்,

*"செஞ்சடை வெண்மதியணிந்த சிவனெந்தை திருவருளால்*
*வஞ்சியன நண்ணிடையாள் மலையரையன் மடப்பாவை*
*மற்கண்ணியள விறந்த ஞானத்தையமீர் தாக்கிப்*
*பொற்கிண்ணத் தருள் புரிந்த போனகமுன் னுகர்ந்தனையே"*
*"தோடணிகா தினனென்றுந் தொல்லமரர்க்கெஞ்ஞான்றும்*
*தேடரிய பராபரனைச் செழுமறையி னகன்பொருளை*
*அந்திச் செம்மேனியனை யடையாளம் பலசொல்லி*
*உந்தைக்குக் காணவானுவனு மென்றுரைத்தனையே"*

எனவுங் கூறிப்போந்தனர். இவ்வாதரவுகளைக் கொண்டே சேக்கிழார்பெருமான் விரித்துக் கூறினரென்க.

இனி ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில்

"காதனனி பள்ளிசூழ் நகர் கானகமாக்கியஃதே
போதின் மலிவயலாக்கிய கோனமர் பொற்புகலி
யோத நெடுங்கடல் வாருங்கயலோ விலைக்குளது
காதினளவு மிளிர்கயலோ சொல்லுகாரிகையே"

என்றும் திருச்சண்பை விருத்தத்தில்,

"கள்ளம் பொழினனி பள்ளித்தடங்கடமாக்கியஃதே
வெள்ளம் பணிசெய்த லாக்கிய வித்தகன் வெண்குருகு
புள்ளொண்ட வளப்புரிசங் கொடாலக் கயலுகளத்
தள்ளத் தடம்புனற் சண்பையர் காவலன் சம்பந்தனே"

எனவும் திருநனிபள்ளியில் உள்ள பாலைநிலத்தை நெய்தல் நிலமாகுமாறு திருஞானசம்பந்தர் பாடியருளினர் என நம்பியாண்டார்நம்பி கூறியிருக்கவும், சேக்கிழார்பெருமான் அதைப் பற்றியாதும் கூருமற்போனதற்குக் காரணம் விளங்கவில்லை.

## 7. பொற்றாளம் பெற்றமை

திருக்கோலக்காவில் ஆளுடைய பிள்ளையார் ஆண்டவனிடம் பொற்றாளம் பெற்றமைக்கு அகச்சான்று இல்லை; எனினும் இவருக்கு அடுத்தநூற்றாண்டில் இருந்தவரும் இறைவனாலே தடுத்தாட்கொள்ளப்பட்டவரும் சைவசமய குரவருள் ஒருவரும் தீதகன்றுலகமுய்யத் திருத்தொண்டத்தொகையருளிய திருவாளருமாகிய திருநாவலூர்ப்பெருமான்,

"நாளுமின்னிசையாற்றமிழ் பரப்பும்
ஞானசம்பந்தனுக்குலகவர் முன்,
தாளமீந்தவன் பாடலுக்கிரங்குந் தன்மையாளனை
என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின்றாடும் அங்கணன்றனை
என்கணம் இறைஞ்சும்
கோளிலிப்பெருங் கோயிலுளானைக் கோலக்
காவினிற்கண்டு கொண்டேனே"

என அருளியவாற்ருனும், நம்பியாண்டார்நம்பிகள் திரு வந்தாதியில்.

*"கண்ணார் திருநுதலோன் கோலக்காவிற் கரகொடியாற்*
*பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி நொந்திருமென்*
*றெண்ணு வெழுத்தஞ்சுமிட்ட பொற்ருளங்களீயக்கண்டு*
*மண்ணார் சிலர்சண்பை நாதனேயேத்தார் வருந்துவதே"*

*எனக்கூறியவற்ருலும் அவ்வுண்மை உறுதியுடைத்தாதல் காண்க.*

அவ்வன்ருெண்டர் தேவாரமும் திருக்கோலக்காவில்கூறியிருப்பது சிந்தனைக்குரியதொன்ருகும். இவைதான் சேக்கிழாருக்கு ஆதர வளித்தனவென்க.

## 8. முத்துச் சிவிகையும் முத்துச் சின்னங்களும் பெற்றமை

திருஞானசம்பந்தர் திருவரத்துறையில் முத்துப்பல்லக்கு முதலியன பெற்றதற்கு வெளிப்படையான அகச்சான்றில்லை. ஆனுல் நம்பியாண்டார் நம்பிகள் பிள்ளையார் திருவந்தாதியில்.

*"வருந்துங் கொலாங்கழன் மண்மிசையே கிடினென்று மென்னுர்த்*
*திருந்தும் புகழ்ச்சண்பை ஞானசம்பந்தற்குச் சீர்மணிகள்*
*பொருந்துஞ் சிவிகை கொடுத்தனன் காண்புணரித் திகழ்கஞ்*
*சுருந்தும் பிரானம் மாத்துறை மேயவரும் பொருளே"*

*எனவும் மும்மணிக்கோவையில்,*

*"அத்தியின் மாவும்தவிர ஆரத்துறை முத்தின்சிவிகை முன்னுட் பெற்றே பாடிற்று"*

*எனவும் கூறுமாற்ருல் இப்பகுதியும் வலியுடைத்தாதல் காண்க.*

## 9. முயலகனென்னும் பிணி போக்கினமை.

பிள்ளையார் திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழவன் புதல்வியின் நோயைத் தீர்த்தமைக்கு வெளிப்படையான அகச் சான்று இல்லையேனும் அதுபோது பாடிய 'துணிவளர்' என்று

தொடங்கும் திருப்பாச்சிலாச்சிராமத்துப் பதிகத்தினிறுதி தோறும் இக்குறிப்பு அமைந்துகிடத்தல் காண்க. அவை,

"அணிவளர் கோலமெலாஞ் செய்து பாச்சிலாச் சிராமத்துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை வாடமயல் செய்வதோ-
இவர் மாண்பே"

"இலைபுனைவேலரோ ஏழையை வாடஇடர் செய்வதோ இவரீடே"

"ஏவலத்தால் விசயற்கருள் செய்து இராவணனையீடழித்து
மூவரிலுமுதலாய் நடுவாய்மூர்த்தியையன் றிமொழியாள்
யாவர்களும் பரவுமெழிற் பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
தேவர்கள் தேவரோ சேயிழைவாடச்சிதைசெய்வதோ இவர்சார்வே"

என வருவனவும் இவைபோல்வன பிறவுமாம். இனி, "இப்பதிகம் அகப்பொருள்பற்றிப் பாடியதோ" வென ஐயம்விளைப் பினும் ஏழாவது பாட்டின் கண்உள்ள, "அங்கிளமங்கையோர் பங்கினர் பாச்சிலாச்சிராமத்துறைகின்ற சங்கொளிவண்ணரோ தாழ்குழல் வாடச்சதுர் செய்வதோ இவர்சார்வே"

என்பதில் 'அங்கிளமங்கையோர் பங்கினர் என்ற குறிப்பு அதற்கிடங்கொடாமை காண்க. அன்றியும் நம்பியாண்டார் நம்பிகள், ஆளுடையபிள்ளையார் திருத்தொண்டத் தொகையின் கண்.

"மழவன் சிறுமதலை வான்பெரு நோய்தீர்த்த
குழகன் குலமறையோர் கோமான்"

என இவ்வுண்மையை உரைத்தருளியதுங் காண்க.

## 10. நளிர் சுரத்தை நீக்கியது.

பிள்ளையார் திருக்கொடிமாடச் செங்குன்றூரில் அடியார்களுக்குப் பனியினுல் நேர்ந்த நளிர்சுரத்தை "அவ்வினைக்கிவ் வினை" என்று தொடங்கும் பதிகம்பாடி நீக்கியருளினுரென, வரலாற்றிற் கேட்டோம். இதற்கும் வெளிப்படையான அகச் சான்றில்லையேனும் அத்திருநீலகண்டப் பதிகத்தின் இறுதி தோறும் "செய்வினைவந்தெமைத் தீண்டப்பெரு திருநீலகண்டம்" என்பது போன்ற அடிகள் இதனைக்குறிப்பால் உணர்த்துதல்

காண்க. இனி நம்பியாண்டயார் நம்பிகள் ஆளுடையபிள்ளையார் திருவந்தாதியின் கண்,

*"மின்னார் குடுமி நெடுவெற்பகங் கொங்கில் வீழ்பனிநோய்*
*தன்னார் வழிகெட்ட ழிந்தமை சொல்லுவர் காணிறையே*
*மன்னார் பரிசனத்தோர் மேற்புகலு மெவர்க்கு மிக்க*
*நன்னாவலர் பெருமானருகாசனி நல்கிடவே"*

எனவும் பிள்ளையார் திருவுலாமாலையில்

*"தாழ்பொழில்சூழ்-கொங்கிற் பனிநோய் பரிசனத்தைத் தீர்ப்பித்தும்"*

எனவும் கூறி இவ்வுண்மையை உணர்த்துதல் காண்க.

## 11. திருமருகலில் விடந்தீர்த்தது

திருமருக மென்னும் திருப்பதியின்கண்ணே, பாம்பினு லிறந்த வணிகனைப் பிள்ளையார் எழுப்பியருளினரென்பது வரலாறு. இதற்கு அகச்சான்று கிடையாது. அப்பொழுது பாடியது "சடையா யெனுமால்" என்றுதொடங்கும் திருமருகற்பதிகம் என்பர் சேக்கிழாரடிகள். ஆனால் "இது அகப்பொருட்டுறையுள் அமைந்துள்ளதோ வென்னும்ஐயம்எழுகின்றது. அதன்மூன்ருவது பாட்டில் 'அழல்வாய் அரவும்' என்ற குறிப்பு இதனை உணர்த்தும் என்பர். அப்பாட்டின் இறுதியில் 'இவளை, 'இறையார்வளை கொண்டெழில் வவ்விணையே" எனவருந்தொடர் மேற்காட்டிய ஐயுறவைவலி பெறச்செய்கிறது.

" ஆருவது பாட்டின் மூன்று நான்கு அடிகளாகிய

*"புலருந்தனையுந் துயிலாள் புடைபோந்*
*தலரும் படுமோ வடியாளிவளே"*

என்பன வரலாற்றை ஒட்டியிருப்பதால் விடந்தீர்த்தற்பொருட்டுப் பாடிய தென்பதற்குப் போதிய சான்று எனக் கொள்ளலாகாதோ? "எனின் எழுவாள் நினைவாள் இரவும் பகலும்" எனுந் தொடரும் "அலங்கலிவளை யலராக்கினையே" என்பதும் "நெறியார் குழலி நிறை நீக்கினையே" என்பதுமாகிய இவற்றுக்கு என் கூறுவது? மேற்கண்ட தொடர்கள் அகப்பொருட்டுறையில் வரும்பல பதிகங் களில் வருதல்காண்க. இது நன்கு ஆராய்ந்து முடிவுகட்ட

வேண்டுவது ஒன்று. நம்பியாண்டார்நம்பிகள்

"*கழல்கின்ற வெங்கணையத்தியுமன்றிலுங் கால்பரபிட்*
*டழல்கின்ற தென்றலும் வந்திங்கடர்ப்ப வன்றுபிழைக்காச்*
*சுழல்கின்ற நஞ்சந்தணித்தவன் றன்னைத் தொடர்ந்து பின்போ*
*யுழல்கின்ற நெஞ்சமிங் கென்னே வினியின்றுறுகின்றதே*"

என ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியிலும்

"*குவளைக் கருங்கட் கொடியிடை துன்பத்தவிரவன்று*
*தவளத்தொடு விடந்தீர்த்த தமிழன் றெகை செய்தவன்*
*திவளக் கொடிக்குன்ற மாளிகைச் சூளிகைச் சென்னியின்வாய்த்*
*தவளப்பிறை தங்கு சண்பையர் காவலன் சம்பந்தனே*"

எனத்திருச்சண்பை விருத்தத்திலும் இவ்வுண்மையைக் கூறியிருத்தல் காண்க.

இனி, திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றதற்கும் திருமறைக்காட்டுத் திருக்கோயிலுள்ள திருக்கதவை அடைத்ததற்கும் சான்றுகளை இவ்விருபெருமக்களையும் ஒன்றுபடுத்தி ஆராய்ந்த பொதுவாராய்ச்சி என்னுந்தலைப்பின் கீழ்க்காண்க.

## 12. சமணரைவாதில் வென்றது

பிள்ளையார் அரசியாரும் அமைச்சருமாகிய இவர்கள் வேண்டு கோட்கிணங்கி மதுரைசென்று சமணர்களை வாதில் வென்ற செய்தி வரலாற்றிற் கேட்கப்படுகின்றது. இது பெரியதொருவிஷயமாகும். இதனை அறிவதற்கு முன்னரே பரசமய கோளரியாகிய திருஞானசம்பந்தப் பெருமானரது திருவவதாரத்தின் நோக்கம் யாது என ஆராய்ந்து முடிவுகாண்டல் இன்றியமையாததாகும். பல ஆதரவுகளைக்கொண்டு உய்த்துணரின் அஃது அற்றைநாள் சமணர்கள் தங்கள் சமயக்கொள்கைக்குப் புறம்பாகி மன்னர்களைத் தம்வயமாக்கிக்கொண்டு செய்தகொடுஞ் செயல்களை ஒழித்தற்பொருட்டே இறைவன் ஆணையால் இந்நிலவுலகிற்போந்தது என்பது நன்கு புலனாகும். சிரபுரச் செம்மல் திருத்துருத்தித் தேவாரமொன்றில்

"*மறக்குமா சொலப்படாய் தருத்தியாப் திருந்தடி மறக்கு மாறிலாத வென்னை மையல் செய்திம் மண்ணின்மேல் பிறக்கு மாறு காட்டினாய்*"

எனக்கூறுவதனுல் அவர் முன்னர் ஆண்டவனுடைய திருவடியை மறவாத ஒருவராக இருந்தமையும், அங்ஙன மிருக்கவும் அவ்விறைவன் அவர் இந்நிலவுலகத்திற் பிறத்தற்கேற்ற ஒருகாரணத்தைச் செய்வித்துப் பிறப்பித்தார் என்பதும் விளங்குதல்காண்க. இவ்வாதரவினைக் கொண்டு சேக்கிழார்பெருமான் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் புராணத்தில் அப்பெருமான் பிள்ளைப்பருவத்தில் அழுதமையைக் குறிப்பிடுங்கால்

*"பண்டுதிருவடி மறவாப்பான்மை யோர்தமைப் பரமர்*
*மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டினளித்தருளத்*
*தொண்டினிலை தரவருவார் தொடர்ந்த பிரிவுணர் வொருகாற்*
*கொண்டெழலும் வெருக்கொண்டாற் போலழுவர் குறிப்பயலாய்"*

எனக்கூறியருளினமை வியக்கத்தகுவ தொன்ருகும். இன்னும் பிள்ளையார் "பாலனுயதொண்டு செய்து பண்டுமின்றும் முன்னையே" எனக்கூறுவதாலும் முற்பிறப்பிலதான் ஆண்டவனருட்கழலை மறவாத ஒரு தொண்டரென்பதைக் குறிப்பிக்கின்ருர். பாலன் ஆய இன்னும்; பண்டும் எனக் கொண்டு கூட்டிப் பண்டு என்பதற்கு முற்பிறவி எனக்கொள்க. அதற்குக் காரணமாகிய 'மையல்' யாதென விளங்கவில்லை. அஃது நமது ஞானவள்ளலாருக்கு ஒரு தீவினையாகத் தோன்றினமையாற்ருன்.

*"பண்டு நான்செய்த பாவங்கள் தீர்ப்பார்*
*பாம்புர நன்னகராரே" எனவும்*
*"பண்டுநான் செய்த வினைகள் பறையவோர்*
*நெறியருள் பயப்பார். எனவுங் கூறியருளினரெனக.*

இங்ஙனம் தோன்றியருளிய இவர் மூன்ருவது ஆண்டிலே பாடுங்கால் (இதற்கு ஆதரவு முன்னரே காட்டப்பட்டது) பத்தாவது பாட்டில் சமணர்களுடைய தீச்செயலைக் குறிப்பதென்ருல் அவர் பிறப்பின்நோக்கம் நன்கு விளங்குகின்றதன்ருே! இவ்வாதரவுகளைக் கொண்டே சேக்கிழார்பெருமான், சிவபாதஇருதயரும் அவர் மனைவியாராகிய பகவதியாரும் "சமண்முதலிய சமயத்தார் கொடுமையை ஒழித்துச்சைவசமயத்தை நிலை நாட்டவல்ல அருள் வலிமை வாய்ந்த மகவு ஒன்று வேண்டும்" என அம்மையையும்

அப்பனையும் வணங்கி வந்தனரெனக் கூறியருளியதூஉமென்க. என்னை? தாய் தந்தையரின் நினைவுமுதிர்ச்சியே குழந்தைகளின் குணமாய் அமைதலின்என்க.

இனி, வெங்குரு வேந்தர் மதுரையின்கண் பல அடியார் களுடன் உறங்கப்பெற்ற மடத்திலே சமணர்கள் பாண்டிமன்னன் ஆதரவை வஞ்சகமாகப் பெற்று நெருப்பு வைத்துவிட்டனர். அதனையறிந்த காழிக்கன்று "அத்தீவெப்பு நோயாகி மெல்லச் சென்று பாண்டியனைப் பற்றக்கடவது" எனப் பணித்தனர்: இதனை,

*"செய்யனே திருவாலவாய் மேவிய*
*ஐயனேயஞ்ச லென்றருள் செய்யனைப்*
*பொய்ய ராமமணர் கொளுவுஞ் சுடர்*
*பையவே சென்று பாண்டியற் காகவே.*

*"அப்பனல வாயாதி யருளினுய்*
*வெப்பர் தென்னவன் மேலுற மேதினிக்*
*கொப்பஞான சம்பந்தனுரை பத்துஞ்*
*செப்பவல்லவர் தீதிலாச் செல்வரே."*

என்னுந்தமிழ் மறையால் உணர்க. அரசன் ஆதரவிற் சமணர்கள் தீவைத்தனராதலின் பெருங்குற்றம் மன்னன்பாலது நோக்கியும் அத்தீங்கின் பயனை அவன் நுகர்தல்தான் பெரி யோருக்கு ஒப்பமுடிந்ததாகு மென்பது நோக்கியும்.

*'வெப்பர் தென்னவன் மேலுற மேதினிக்கு*
*ஒப்பஞான சப்பந்தனுரை பத்தும்"*

என ஆளுடைய பிள்ளையார் அருளியது அவருடைய நீதியைப் புலப்படுத்துவ தொன்றுகும். இனி. சமணருடன்வாது செய்யப் போவதற்கு ஆலவாயண்ணலிடஞ் சென்று அவர் திரு வுள்ளத்தை அறிந்தன ரென்பதற்கு

*"காட்டுமாவதுரித்துரி போர்த்துடல்*
*காட்டமூன்றுடையாயுரை செய்வருன்*
*வேட்டு வேள்வி செய்யா அமண்கையரை*
*ஓட்டிவாது செய்த்திருவுள்ளமே."* என்ற முதற்பாட்டினை யுடைய பதிகமும்

"வேதவேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதமில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திருவுள்ளமே
பாதி மாதுடனாய பரமனே
ஞாலம் நின்புகழேமிக வேண்டுந்தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே."

என்ற முதற்பாட்டையுடைய பதிகமும் போதிய சான்ருதல் காண்க. பின்பாண்டியன் வெப்புநோய் தீரப்பாடியருளிய "மந்திரமாவது" என்னும் முதலையுடையபதிகத்து இறுதியிலுள்ள

ஆற்றலடல் விடையேறு மாலவா
யான்றிருநீற்றைப்
போற்றிப புகலி நிலாவும் பூசுரன்
ஞானசம்பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற
தீர்ப்பிணியாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர்
நல்லவர் தாமே"

என்பது அவன் வெப்புநோய் நீங்குமாறு அப்பதிகம் பாடப்பெற்றதென்பதற்குத்தக்க சான்ருதல் காண்க. சமணர்களுடன் வாது செய்ய விடையுடையானிடம் விடைகொண்டமைக்குக்

"கூடலாலவாய்க் கோனை விடைகொண்டு
வாடல்மேனி யமணரை வாட்டிட"

என்பது சான்ருதல் காண்க. நெருப்பிலிட்ட பிள்ளையார் ஏடு அழியாமைக்கு,

"தளிரிளவளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிளவளரொளி வனமுலை யிணையவை குலவலின்
நளிரிளவளரொளி மருவு நள்ளாறர் தம்நாமமே
மிளிரிளவளரெரி யிடிலிவை பழுதிலமெய்ம்மை"

என்னுந் திருநள்ளாற்றுப் பதிகத்தின் முதற்பாட்டும் இது போன்றே வரும் அப்பதிகப்பாட்டு முழுவதும் சான்றுபகருகின்றன. நம்பியாண்டார்நம்பிகள் பிள்ளையார் திருத்தொகையின்கண்

" எரிவாயிடும் பதிகம், ஆழியுலகத்தழியா மற்காட்டினான் "

எனக் கூறுவதுங்காண்க. இனி, வையையாற்றின் கண் ஏடு எதிரேறியதற்கு,

" அற்றன்றியத்தண் மதுரைத்தொகையாக்கினானும்
தெற்றென்று தெய்வந்தெளியார் கரைக் கோலதெண்ணீர்ப்
பற்றின்றிப்பாங் கெதிர்விரவும் பண்புநோக்கிற்
பெற்றென்றுயர்த்த பெருமான் பெருமானுமன்றே "

என்பதும், " ஏடு சென்றணைதரு மேடகம் "

என்பதும்,

" பருமதின் மதுரைமன்னவை யெதிரே
பதிகமதெழுதிலையவை யெதிரே
வருநதியிடை மிசை வருகரனே "

என்பதும் போதிய சான்றன்றோ? நம்பியாண்டார்நம்பிகள் ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையின் கண். " நிலவிய, வைகையாற்றேடிட்டு வானீர் எதிரோட்டுஞ் செய்கையால் மிக்க செயலுடையான் " என்று கூறியது இதற்குச்சான்றுதல் காண்க.

இனி, சமணர்களை கழுவில் ஏற்றியமை பெரியபுராணத்திற் கூறப்படுகின்றது. அதற்கு முன்னரே நம்பியாண்டார் நம்பி தாம்இயற்றிய ஆறுநூல்களிலும், (இந்நூல்கள் முன்னரேகாட்டப் பெற்றன) இச்செய்தியைப் பலஇடங்களிற் கூறியிருக்கின்றனர். பெரியபுராணத்தை நன்குபடித்தாற்குச் சம்பந்தர் சமணரைக் கழுவில் ஏற்றவில்லை யென்பது நன்குதெரியும். அதனைச் செய்தவர் அரசர். ஒழுக்கத்தினின்றும், வழக்கினின்றும், வழிஇறுரை ஒறுத்தல் அரசர் கடமையாகும். அக்கடமையையே நெடுமாறர் என்ற பாண்டியரும் செய்தனர். மக்கள் தத்தம் கடமையைச் செய்யுங்கால் எப்பெரியாரும் அதனைவிலக்கார். விலக்கின் உலகியல் நடவாதென்பது திண்ணம். ஆதலால் பாண்டிமன்னர் தமதுகடமையைச் செய்யுங்கால் திருஞானசம்பந்தப்பெரியார் அதனைவிலக்காதிருந்தனர் என்க. இவ்வுண்மையை,

" மன்னவன் மாறன் கண்டு மந்திரியாரை நோக்கித்
துன்னிய வாதிலொட்டித் தோற்றவிச்சமணர் தாங்கண்
முன்னமே பிள்ளையார் பாலநுசித முற்றச் செய்தார்
கொன்றனைக் கழுவிலேற்றிமுறை செய்க வென்று கூற "

*"புகலியில் வந்த ஞானபுங்கவர் அதனைக்கேட்டும்*
*இகலிலர் எனினும் சைவர்இருந்து வாழ்மடத்திற்றீங்கு*
*தகவிலாச்சமணர் செய்ததன்மையாற் சாலுமென்றே*
*மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடாதிருந்த வெல்லை"*

என்ற இவ்விரண்டு செய்யுட்களும் விளக்குதல் காண்க. இவ்விரண்டு பாட்டுக்களாலும் பாண்டி மன்னர் அமைச்சரை நோக்கி, "இச்சமணர்கள் வாதில் தோற்றமையாலும், திருஞானசம்பந்தர் அடியார்களோடு அயர்ந்து உறங்கப்பெற்ற திருமடத்தின்கண் தீயைவைத்தமையாலும், அரசநீதிப்படி இவர்களைக் கழுவில் ஏற்றி முறை செய்வாயாக" என்று கூறினுர் என்றும் ஆளுடைய பிள்ளையார் அச்செய்தியினைக்கேட்டும் தமக்கு அச்சமணர்களிடத்தில் எத்தகைய பகையும் இல்லாதிருந்தும் பல அடியார்கள் படுத்துறங்கிய திருமடத்தின் கண் தீ வைத்த குற்றத்திற்காக மன்னர் தன்கடமையைச் செய்கின்ருரென்றும்,

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனெடுநேர்" என்பது அரச சட்டமாகலின் அதனைத் தாம் விலக்குதல் முறையன்று என்றுகருதி அச் செயலைத்தாம் விலக்காது வாளாவிருந்தனர் என்றும், அறிகின்ரேம். அன்றியும் திருஞானசம்பந்தரிடத்துச் சமணர்கள்மீது பகை சிறிதேனுமிருக்குமாயின் அவர்கள் வைத்த தீயினை வெப்பு நோயாக்கி அதன் வேகத்தையும் குறைத்து, "பையவே சென்று பாண்டியற்காகவே" என்று பணிக்கவல்ல அவர் அச்சமணர்கள்மீதே அதனை ஏவி அவர்களை அழித்திருப்பார்என்க. பெரியோர்கள் பலர்க்கும் மக்களிடத்திற்காணப்படும் தீங்குகள் ஒழிய வேண்டுமென்ற கருத்து உண்டாதலேயன்றி அம்மக்கள் ஒழிய வேண்டும் என்றகருத்து உண்டாதல் இயல்பன்று என்க. பிள்ளையாரும் இக்கருத்துடையவர் என்பது,

*"வாழ்க அந்தனர் வானவர் ஆனினம்*
*வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக*
*ஆழ்க தீயவெல்லாம் அரன் நாமமே*
*சூழ்க வையகமும் துயர் தீர்கவே"*

என அவர் அருளிச்செய்த பாடலின்கண், "ஆழ்கதீய ரெல்லாம்", 'என்னுது ஆழ்க தீயவெல்லாம்" என்று கூறியதிலி ருந்து நன்கு புலனுதல் காண்க.

## 13. கொள்ளம் பூதூரில் ஓடம் விட்டது.

திருக்கொள்ளம்பூதூரில் பதிகத்தினுலேயே ஓடத்தைச் செலுத்தி அடுத்தகரையிற் கொண்டுபோய்ச் சேர்த்து ஆங்குள்ள ஆண்டவனை அடியார்களோடு பிள்ளையார் வணங்கினர் என்பது வரலாறு. இதனை அதுபோழ்து பாடிய,

"கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்
கட்டமாடிய கம்பனையுள்கச்
செல்லவுந்துக சிந்தையார்தொழ
கல்குமாறருள் கம்பனே"

என்னும் முதற்பாட்டினையுடைய பதிகம் குறிப்பால் உணர்த்துதல் அன்றி வெளிப்படையான அகச்சான்று இன்று. ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையின்கண், "மருவினிய, கொள்ளம் பூதூர்க்குழகன் நாவாய் அதுகொடுப்ப உள்ளமே கோலாக ஊன்றினுன்" என்னும் நம்பியாண்டார் நம்பி திரு வாக்கு இதற்குச் சான்றுதருகின்றது. இனி திருத்தெளிச்சேரிக் குப்போம் வழியில் உள்ள போதிமங்கை யென்னும் ஊரின்கண் வழிமறித்துத்துன்புறுத்திய புத்தநந்திதலையில் இடிவிழச்செய்த செய்தி வரலாற்றிற்கேட்கப்பெறுகின்றது. இதற்கு அகச்சான் றில்லை. நம்பியாண்டார் நம்பிகள், "நேர்வந்த, புத்தன் தலை யைப் புவிமேற்புரள்வித்த வித்தகப்பாடல் விளம்பினுன்" என பிள்ளையார் திருத்தொகையில் கூறியவாறு காண்க. திருவோத் தூரில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கியதற்கு அப்பதிகத் திறுதியில் 'குரும்பை ஆண்பனை ஈன்குலை' எனவரும் அடிசான் ருதல் காண்க. ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலையில், "மாண்புதிகழ் எம்பெருமான் மன்னுதிருவோத்தூரில் ஆண்பனை கள் பெண்பனைகளாக்கியும்" என நம்பியாண்டார் நம்பிகள் கூறுவது இந்நிகழ்ச்சிக்குத்தக்கதோர் ஆதரவாகும்.

## 14 என்பைப் பெண்ணாக்கியது

திருமயிலாப்பூரில் பூம்பாவையின் என்பைப் பெண்ணாகிய தொருசெயற்கரிய செயலே வரலாற்றிற்காண்கின்றோம். அதற்கு வெளிப்படையான அகச்சான்றில்லையேனும் அதுபோழ்து பாடிய, "மட்டிட்டபுன்னை" யென்று தொடங்கும் பதிகத்தின் இறுதி தோறும், "போதியோ பூம்பாவாய்" எனவரும்தொடர் இச்செய்தியைக் குறிப்பால் உணர்த்துதல் காண்க. நம்பியாண்டார் நம்பிகள், "வெய்யவிடம், மேவியிறந்தவயில் வேற்கண்மடமகளை வாவென்றழைப்பித்திம் மண்ணுலகில் வாழ்வித்த சீர் நின்ற செம்மைச் செயலுடையான்" எனப்பிள்ளையார் திருத்தொகையிற் கூறியிருப்பது இதற்குப்போதிய ஆதரவாகும்.

## 15. திருமணங் காணவந்தாரை சிவனடிசேர்த்தல்

இறுதியிற்பிள்ளையார் தமது திருமணம் காணவந்தஅனைவரையும் ஆண்டவன் அடியிற்சேர்த்துத் தாமும் தம்மனைவியோடு புக்கனர் என்பது வரலாறு. இதற்கும் வெளிப்படையான அகச்சான்றில்லை எனினும் அதுபோழ்து பாடிய திருப்பதிகம் குறிப்பால் உணர்த்துகின்றது. பிள்ளையார் திருவந்தாதியில்,

> "காரங்கணை பொழிற் காழிக்கவுணியர் தீபகல்லூர்ச்
> சீரங்கணை நற்பெருமணந்தன்னிற் சிவபுரத்து
> வாரங்கணை கொங்கை மாதொடும் புக்குறும் போதவா
> ராரங் கொழிந்தனர் பெற்றதல்லாலவ்வரும் பதமே"

என நம்பியாண்டார் நம்பிகள் கூறியது இவ்வுண்மைக்குப் போதிய சான்றாகும்.

## 16 திருஞானசம்பந்தர் காலம்

கி. பி. 625–650 வரை இருந்தவர் திருநாவுக்கரசர் காலத்தில் காட்டப்படும் மகேந்திரவர்மனென்னும் குணதான் புதல்வனாகிய நரசிம்மவர்மனென்பவன். இவன் காலத்திற்குள் வாதாவி என்பதைத்தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த சளுக்கியமன்னனாகிய இரண்டாவது புலிகேசி என்பானோடு பெரும்போர்

நிகழ்ந்தது. இப்போரில் நரசிம்மவர்மன் வெற்றிகொண்டான். வதாவி என்னும் அந்நகரத்தை அழித்து அங்குத்தன் வெற்றி மரத்தை நாட்டி, அதன்மேல் தன்வீரச்செயல்களைக் குறித்து ஒருகல்வெட்டு வெட்டுவித்தான். அதுஇதுபோழ்து அழிந்துவிட்ட தென்றும் அதன்மேல் நரசிங்கன் பட்டபெயராய 'மகாமல்ல (ன்) என்பதும்' க்ஷிதிபுஜாம் அக்ரேஸ்வா; பல்லவ' (அரசரில் முதல்வனுனபல்லவன்) என்பதும், 'ஸ்நம்பம்ஜய' என்பதும், '(நரசி)ம்ஹவிஷ்ணு' என்பதுமாகிய இவற்றை இப்பொழுதும் காணலாம். இதுநடந்தது கி. பி. 642. அப் போரின்கண் மேற் படி நரசிம்மவர்மனுக்குப் படைத்தலைவராக இருந்து வெற்றி பெற்று மேற்படி நகரத்தை அழித்தவர் சிறுத்தொண்டரென் றும் பரஞ்சோதி என்பவர். இதனை,

*"மன்னவர்க்குத்தண்டு போய் வடபுலத்து வாதாவித்*
*தொன்னகரந் துகளாகத்துணை நெடுங்கை வரையுகைத்துப்*
*பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்*
*இன்னன வெண்ணில கவர்ந்தே இகலரசன்முன் கொணர்ந்தார்"*

என்னும் பெரியபுராணச் செய்யுளால் அறிக. எனவே அச்சிறுத்தொண்டநாயனர் திருஞானசம்பந்தர் காலத்தவரென் பது, "பைங்கோட்டுமலர்" எனத்தொடங்கும் பதிகத்தில், "சிறுத்தொண்டன் பணி செய்ய" எனவும், "வெந்தநீறணி மார்பன் சிறுத்தொண்டனவன் வேண்ட" எனவும் நிகழ்காலத் தாற் கூறும் அவர் தேவாரத்தாலும், அதனை ஒட்டிக்கூறும் பெரியபுராணம் முதலிய வற்றுனும் அறியலாம். எனவே ஆளு டைய பிள்ளையாரின் காலம் கி. பி. ஏழாம் நூற்றுண்டின் இடைப்பகுதி யென்ப.

## 17. இவர் காலத்திருந்த நாயன்மார்கள்

திருநாவுக்கரசர், நெடுமாறரென்னும் பாண்டியர், மங்கை யர்க்கரசியார், குலச்சிறையார், திருநீலகண்டயாழ்ப்பாணர், சிறுத்தொண்டர், முருகர், திருநீலநக்கர், குங்குலியக்கலயர், அப்பூதியடிகளென்பார்.

## 18. இவர் தேவாரத்துக் காணப்படும் நாயன்மார்கள்.

சண்டீசர், நமிநந்தி, திருநீலகண்டயாழ்ப்பாணர், புகழ்த்துணையார், முருகர், திருநீலநக்கர், சிறுத்தொண்டர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், கண்ணப்பர் முதலியோர். இவருள் சண்டீசரை, 'வந்தமணலால்' என்று தொடங்கும் பாவாலும்; இதுபோன்ற பலபாட்டுகளாலும், நமிநந்தியடிகளை, 'தாவியவனுடனிருந்து' என்று தொடங்கும் திருப்பாவினுலும், திருநீலகண்டயாழ்ப்பாணரை 'நாணமுடை வேதியனும்' என்ற முதலையுடைய அருட்பாவினுலும், புகழ்த்துணையாரை 'நிலந்தணீரோடனல்' என்று தொடங்கும் பாவினுலும், முருகரை 'தொண்டர்தன்' 'ஈசனேறமர்' என்றமுதற் குறிப்பையுடைய அருட்பாக்களாலும், திருநீலநக்கரை, "பொடிதனைப்பூசுமார்பில்" 'மறையினுர் மல்கு' என்று தொடங்கும் பாக்களாலும், சிறுத்தொண்டரைப் 'பைங்கோட்' என்று தொடங்கும் பதிகத்தானும், மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும், 'மங்கையர்க்கரசி' என்று தொடங்கும் பதிகத்தானும், கண்ணப்பரை, 'வேயனைய தோளுமை' என்று தொடங்கும் பாட்டினும் புகழ்ந்திருக்கின்றனர்.

*கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனற்கண் மீனக்*
*கொடியனை வேவ நோக்கிக் குறையிரந்தனையாள் கற்பிற்*
*பிடியன நடையாள் வேண்டப் பின்னுயிரளித்துக் காத்த*
*முடியணி மாடக்காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.*

"பரஞ்சோதி முனிவர்"



# 3. திருநாவுக்கரசர் வரலாறு.

## 1. பிறப்பு

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகி
லொருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்"

நீர்வளமும் நிலவளமும் மிக்க சோழநாட்டிற்கும் சான்ரேர் நிறைந்த தொண்டை நாட்டிற்கும் இடையிலுள்ள நடு நாடு திருமுனைப்பாடி யென்னும் பெயர் பெற்றுத்திகழ்கின்றது. அஃது ஒழுக்கத்தால் விழுப்பமடைந்த குடிகள் நிறைந்து பல வளமும் செறிந்துள்ளது. வாழைக்குலைகள் வளம்மிகுந்து நீண்டிருப்பதனுல் கரியின் கைபோலக்கவின, செந்நெற்கதிர்கள் வானை யளாவி வளர்ந்து வளைந்து இருப்பது பரியின் முகம் போலப் பார்ப்பவர்க்குத்தோன்ற, பெரிய வண்டிகள் தேர் போலத் திகழ, உழவர்களது ஒலி படைவீரர்களின் ஆரவாரம் போன்று அழகு செய்ய ஆங்குள்ள கழனிகள் நால்வகைச்சேனைகளும் நிறைந்த பாசறையைப் போன்று விளங்குகின்றன. அந்நாடு செந்நெல் வளத்தாலும், முக்கனிகளின் நிறைவாலும், கரும்பு. கமுகு, தெங்கு முதலியன செறிந்த பொழில் வனப்பாலும், பெண்ணை யாற்றின் பெருக்காலும், குயில்களினெலியாலும், மயில்களின் ஆட்டத்தாலும், வானையளாவியமாளிகைகளாலும், அவற்றில் உலாவும் நலம்மிகுந்தநங்கையர் கூட்டத்தாலும், அழகுபெற்று விளங்குகின்றது. அங்குள்ள கடல்போன்ற வாவிகளில் முகில் போன்ற எருமைகள் புகுந்து நறிய பூக்களை மேய்ந்து தமது மடிகளை முட்டுகின்ற வரால் மீன்களைக் கன்றுகள் எனக்கருதிச் சொரிந்த பாலால் அவ்வேரிகள் பாற்கடல் போன்று அலைவீசா நிற்கும். ஆங்குத் திங்கள் மண்டலத்தையளாவி செழுமைமிக்குக் காணப்படும் சோலைகளின் தோற்றம் நிலமகளானவள் வண்டுகளாகிய நீலவளையல்களை அணிந்தனவும், சிவந்ததளிராகிய விரல்களையுடையனவும், முகையாகிய நகங்களையுடையனவும் ஆகிய சோலைகளாகியகைகளால் திங்களாகிய கண்ணுடியைத்தனது அழகைக்காணுதற்கு அணைத்ததுபோலத் தோன்ருநிற்கும். சைவ

சமயகுரவர் நால்வரில் இருவராகிய திருநாவுக்கரசுநாயனுரும் சுந்தரமூர்த்தி நாயனுரும் தோன்றியநாடு அதுவேயாயின், அதன் பெருமை எம்மனேரால் எடுத்து இயம்பப்படுவதொன்ருே? வளம் சிறந்த அந்நாட்டின் கண்ணுள்ள பல ஊர்களில்,

*"சைவநெறி தலமேழும் பாலிக்குந்தகைமையினுற்*
*றெய்வநெறிச் சிவம்பெருக்குந் திருவாமூர் திருவாமூர்"*

அத்தகைய ஊரின்கண் "இருவேறுலகத்தியற்கை திருவேறு, தெள்ளியராதலும் வேறெ" னத்தெரித்த பொய்யில் புலவன் பொருளுரை அதனைமெய்யில் உரையெனவிளக்க, கல்விச் செல்வமும் பொருட்செல்வமும் நிரம்பி, "இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி, வேளாண்மை செய்தற் பொருட்டு என் னும் கருத்துடையராய் வேளாண்தொழிலை மேற்கொண்டு அம் மரபின்கண் தலைசிறந்த புகழனுர் என்னும் பெரியார் வாழ்வாராயி னர். அவரது மனைத்தக்க வாழ்க்கைத்துணையாகி நின்ருர், அவ ரைப்போலும் மாது இனியார் என்று அனைவரும் எண்ணுமாறு மாதினியார் என்னும் பெயர் பூண்டார். இவ்விருவரும் "அன்பும் அருளும் தாங்கி, இன்சொலின் விருந்து புறந்தந்து, அருந்தவப் பேணி, ஐவகை வேள்வியுமாற்றி, இவ்வகை நல்லறம் நிரப்பி, பல் புகழ்நிறீஇ, பிறர்மனை நயவார் அறமனை வாழ்க்கைக்கு வரையா நாளின் மகப்பேறு குறித்துப் பெருநலந் துய்க்கும்" காலத்தில் "மாதினியார் மணிவயிற்றில், நிகழுமலர்ச்செங்கமல நிறையிதழி னகவயினிற், றிகழவருந் திருவனைய திலகவதியார் பிறந்தார்" அப்பெருமாட்டியார் பிறந்து சில ஆண்டுகள் சென்றதபின்ன்,

*"அலகில் கலைத்துறை தழைப்ப வருந்தவத்தோர் நெறிவாழ*
*உலகில் வருமிருணீக்கி யொளிவிளங்கு கதிர்போற்பின்*
*மலருமருணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார்"*

அவரைப் பெற்ருேர்கள் பொன் போலப்போற்றி வளர்த்துச் செய்ய வேண்டிய நற்செய்கைகள் பலவற்றையும்செய்து முடித்து ஐந்தாவதாண்டிற் கலைபயில்வதற்குத் தொடங்குவித்தார். மரு ணீக்கியார், தம்மைப்பெற்றதனுல் இருள்நீக்கிய இருமுதுகுர வர்க்கும் பெருமகிழ்வு உண்டாகுமாறு கலைகள் பலவற்றையும்

முறையாகக்கற்று வல்லவராயினர். செம்மைசான்ற திலகவதியார் பன்னிரண்டு அகவையையடைந்த பொழுது அப்புகழனார்மரபிற்கு ஒத்த மரபினையுடையவரும் இறைவனிடத்தில் வைத்த இடையருப் பேரன்பால்எழில் வாய்ந்தவரும் அரசரிடத்தில் படைத்தலைவருமாய் உள்ளவராகிய கலிப்பகையார் என்பவர் தமக்குத்திலகவதியாரை மணம்பேசச் சிலபெரியோர்களைப் புகழனாரிடம் போக்கினர். அவர் கள் அச்செய்தியைப் புகழனாருக்கு இசைத்து அவர் இசைவினைக் கலிப்பகையாருக்குத் தெரிவித்தார்கள். அவர் தமது திருமணம் நடப்பதற்கு முன்னரே அரசனது ஆணையினாலே சேனை களோடும் சென்று அவ்வரசன் பகைஞராகிய வடநாட்டு மன்னர் கள் இருக்கும் இடத்தைச்சார்ந்து அவர்களோடு நெடுங்காலம் வரை போர் புரியலாயினர். அங்ஙனம் நிகழுங்காலத்தில் இங்கே புகழனார் என்பவர் பிணிவாய்ப்பட்டு மண்ணுலகை நீக்கி விண்ணு லகம் சென்றனர். ஆயகாலை அவர்மனைவியாராகிய மாதினியார் தமது கற்பின் திறத்தாலே அரும்பெரும் மக்களையும் பொருட்படுத் தாது தலைவனுடன் உடன்கட்டை யேறினள். அவர்கள் பிள்ளைக ளாகிய திலகவதியாரும், மருணீக்கியாரும் கிளைஞர்களோடு மிகவும் கவலையுற்று அவருள் அறிவால் நிறைந்த பெரியோர்க ளால் ஒருவாறு தேறி இருமுதுகுரவர்க்கும் ஈமக்கடன்களை முடித் தார்கள்.

இங்கு இவ்வாறு நிகழ அங்குக் கலிப்பகையார் போர்க் களத்திலே தமது பூதஉடம்பை விட்டுப் புகழுடம்பை பெற்றுக் கொண்டார். அச்செய்தி திலகவதியார் செவிக்குஎட்ட அவர் "என்னுடைய அன்னையும் அத்தனும் என்னை அவருக்கு மணம் செய்து கொடுக்க இசைந்திருந்தமையால் இவ்வுயிர் அவருக்கே உரியது. ஆதலால் இவ்வுயிரை அவர உயிரோடும் இசைவிப் பேன்" என்று இறக்கத்துணிந்தார். அதுகண்ட மருணீக்கியார் மனங்கவன்று அவ்வம்மையாரின் இரண்டு திருவடிகளிலும் வீழ்ந்து அழுதுபுரண்டு, "அடியேன் நமது தாயும் தந்தையும் இறந்தபின்னும் உம்மையே அவர்களாக எண்ணி வழிபடலாம் என்றல்லவோ என் உயிரைவைத்துக் கொண்டிருக்கின்றேன். அடியேனைத்தனியே கைவிட்டு இறப்பீராயின் ஏழையேன் உமக்கு முன்னமே இறந்துவிடுவேன்" என்றார். அதுகேட்டதமக்கை

யார் "தம்பியார் உயிரோடு இவ்வுலகின் இருக்கவேண்டும்" என்னும் பெருவிருப்பத்தால் தமது கருத்தைத்தடுத்து உயிரையும் எல்லா உயிரிடத்தும் அருளையும் தாங்கி வேறொருவரையும் மணக்க விரும்பாது வீட்டிலே தவஞ்செய்து கொண்டிருந்தார்.

## 2. சமண சமயம் புகுதல்.

இளவலார் உடல்நிலையாமையையும், செல்வநிலையாமை யையும், இளமைநிலையாமையையும் நினைந்து அறம்செய்ய விரும்பி அன்புடனே அறத்தாற்றில் ஈட்டப்பட்ட பொருள்களை அழித்து அறச்சாலைகளையும் நீர்ச்சாலைகளையும் அமைத்தருளினர். வானையளாவிய சோலைகள் பலவற்றைவைத்தனர். பலகுளங்கள் இவரால் வெட்டப்பட்டன. விருந்தினரை ஓம்பினர். புலவர்களுக் குப் பொன்மாரி பொழிந்தனர். உலக வாழ்வின் நிலைபேறில்லா மையை உணர்ந்து இல்வாழ்க்கையிலே புகுதாமல் எல்லாவற்றை யும் துறந்தருளினர். ஆண்டவன் அருள் தலைக்கூடாமையால் சமயங்கள் பலவற்றுள்ளும் தலைசிறந்த சமயம்இது என்று அறியு மறிவு அவருக்குத் தலைப்படவில்லை. அவர் இயல்பாகவே உயிர் களிடத்தில் பேரிரக்கம் வைத்தவராதலின், பாடலிபுத்திரம் என்னும் நகரத்திற்குச் சென்று சமணர்களுடைய பள்ளியை யடைந்து உயிர்கள் மாட்டு வைக்கும் இரக்கத்தையே தலைசிறந்த தாக எடுத்துக் கூறுவது தங்கள் சமயமெனக்கூறி அதில் மறைந்து அல்லன செய்யும்சமணர்களது வஞ்சகச்சொல்லிற்சிக்கி அவர்கள் மேற்கொண்ட ஆருகதசமயமே வீடுபேற்றையடைதற்கு ஏற்ற நெறியென்று துணிந்து அதன்கட்புகுந்தனர். புக்க அவர் அச்சமண நூல்கள் அனைத்தையும் கற்று அவைகளிலே சிறந்த புலமைவாய்ந்தவராயினர். அதனைக்கண்ட சமணர்கள் அக மகிழ்ந்து அவருக்குத் தருமசேனர் என்று பெயரிட்டு அவரைத் தங்கள் சமயக்குரவராகக் கொண்டு வழிபட்டார்கள். அவர் தமது கல்வி வன்மையினாலே பௌத்தர்களை வாதிலே வென்றுசமணசமய குரவர்களுக்குள்ளே தலைவராகி விளங்கினர்:

## 3. சைவ சமயம் மீளுதல்.

திருவாமூரிலே இருந்த திலகவதியார் ஆண்டவனிடத்து வைத்த அன்புமிகுந்து பதிபுண்ணியங்கள் பலவற்றையும் செய்ய

எண்ணி, கெடிலம் என்னும் ஆற்றுக்கு வடகரையில் இருக்கின்ற திருவதிகை வீரட்டானம் என்னும் திருபதிக்குப்போய்ச் சிவபெருமானைப்பணிந்து சிவ சின்னங்களைத்தரித்து நாள்தோறும் ஞாயிறு தோன்றுதற்கு முன்னே திருக்கோயிலின் உள்ளும்புறமும் திருவலகிடுதலும், கோமயத்தினல் மெழுகுதலும் திருநந்தவனங்களுக்குச் சென்று சிறந்தமலர்களைக் கொய்து திருமாலைகள் தொடுத்து சிவபெருமானுக்கு அணியக் கொடுத்தலும் முதலாகிய இறையறங்கள் எண்ணிலவற்றைச் செய்து வருவாராயினர். அவ்வாறு ஒழுகிவரும் நாளிலே தமது தம்பியாராகிய மருணீக்கியார் சமணர்களது வஞ்சகச்செயால் அச்சமயத்தின் கட்புகுந்தமையை நினைந்து துன்பக்கடலிலாழ்ந்து அதிகை வீரட்டத்து அம்மானை வணங்கி; "வேண்டுவார் வேண்டுவனஈயும் விமலரே; தேவரீர் அடியேனை ஆட்கொள்பவர் என்பது உண்மையாயின், தவமென்று சொல்லிப்பாயை யிடுக்கித் தலைமயிரைப் பிடுங்கி எறிந்து விட்டு நின்று சொண்டே உண்கின்ற சமணர்களின் வஞ்சக நெறியாகிய படுகுழியிலே விழுந்த எம்பியை அதினின்றும்தூக்கி உய்வித்தருளல் வேண்டும்" என்று பலமுறையும் வேண்டினர். சிவபெருமான் திலகவதியார் கனவின் கண்ணே தோன்றி, "தவச்செல்வியே! நீ உன் உள்ளக்கவலையை ஒழிப்பாயாக. உன் அருமைத் தம்பி துறவியாகி நம்மைச்சாரும் பொருட்டு முற்பிறப்பிலே தவம் செய்திருக்கின்றான். அந்தத்தவத்திலே சிறிது வழுவுற்றதினலே பிறமதத்திலே பிரவேசித்தான். இனி அவனைச் சூலைநோயினல் துன்புறுத்தி ஆட்கொள்வோம்" என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர். ஆண்டவன் அம்மையாருக்கு அருளிச் செய்தபடியே அவனது திருவருளினலே தருமசேனரின் வயிற்றின்கண் கொடியசூலை நோயுண்டாகிக் குடலைக்குடையத் தொடங்கிற்று. அதனல் அவர் அவலமடைந்துஅமண் பாழியறையில் வீழ்ந்தார். தமக்குகைவந்த சமணசமய மந்திரவன்மையினல் தடுக்கவும், அந்நோய் தடைப்படாமல் மேலும் மேலும் அதிகரித்தது. அதனல் அரவின்விடம் தலைக்கொண்டார்போல மயங்கி உணர்விழந்தார். அதுகண்ட அமணர் பலர் ஓடிவந்து ஒன்றுகூடி, "இந்தச்சூலைநோய் போலக்கொடிய நோய் முன் ஒருபோதும் கண்டறியோம். இதற்கு யாது சொய்வோம்" என்று துன்புற்று கரகத்தில் இருக்கின்றநீரைமந்திரித்துக் குடிப்பித்தார்

கள். அதனாலே அஃது எட்டுணையுந் தணியாமைகண்டு மயிற்பீலி கொண்டு காலளவும் தடவினார்கள். அதனாலும் தணியாமல் அந் நோய் முன்னிலும் மிகுக்க அத்தருமசேனர், அதனைப் பொறுக்க லாற்றாதவராகி வருந்தினார். அமணர்கள் அதுகண்டு, “ஐயோ! இதற்கு நாம் யாதுசெய்வோம்! இந்நோயைத் தீர்ப்பதற்கு வன் மையுடையோம் அல்லோம்” என்று சொல்லிக்கொண்டு மனக் கலக்கத்துடன் அவரைக்கைவிட்டுப் போயினார்கள். பின்னர் தருமசேனர் தமது தமக்கையாகிய திலகவதியாரை நினைந்து அவரேதமக்கு உதவி செய்யவல்லவர் எனத்துணிந்து தம்முடைய செய்தியை அவருக்குத் தெரிவிக்கும் பொருட்டுத்தமது பாகுகனை அவரிடத்திற்கு அனுப்பினார். அவன் திருவதிகையிற் சென்று அம்மையாரை ஒரு திருநந்தவனத்திற்கு அண்மையிலே கண்டு வணங்கி, “நான் உம்முடைய தம்பியார் ஏவலினால் இவ் விடத்திற்கு வந்தேன்” என்று சொல்ல அப்பெண்மணியார், “தம்பியாருக்கு யாதாயினும் தீங்கு உண்டோ?” என்றார். அதற்கு அவன், “ஆம் அவர் கொடிய சூலைநோயினால் மிகவும் துன்புறுகின்றார். சமணர்கள் அனைவரும் அப்பிணியைத்தீர்த்தற் குப் போதிய வன்மையின்மையால் அவரைக் கைவிட்டுவிட்டார் கள். அவர் அதுகண்டு என்னை நோக்கி அச்செய்தியை உடன் பிறந்தாராகிய உமக்குத் தெரிவித்துத்தாம் உய்யும் நெறியைக் கேட்டுக்கொண்டு இரவிலேயே தம்மிடத்துக்கு வரும் பொருட்டு என்னை அனுப்பினார்.” என்றான். அம்மையார், “தீவினையாளரா கிய அச்சமணரின் பள்ளிக்கு யான்வாரேன் இதனைஎம்பிக்கு இயம் புவாயாக” என்றார். அதுகேட்டு அவன் மீண்டு தருமசேனரிடம் சென்று அதனைத் தெரிவிக்க, அவர், “இனி இதற்கு என் செய்வேன்” என்று துன்புற்றார்.

ஆயகாலை இறைவன் திருவருள் வந்து எய்துதலால் மருணீக்கியார், “இத்தீயசமயமாகிய சமணநெறியிற் புகுந்ததால் என்னைத்துன்புறுத்தும் இப்பிணிநீங்குமாறு உண்மைச்சமயமாகிய சைவநெறி நின்றொழுகும் திலகவதியாருடைய திருவடிகளை அடைவேன்” என்று எண்ணினார். அக்கருத்து அவரைப்பிடித்து எழுப்ப எழுந்து சமணர்களுடைய இடத்தைக்கடந்து உடுத்த பாயையும் உறியில் உற்றகரகத்தையும் மயிற்பீலியையும் நீக்கி

உடைஉடுத்தி, தமக்குக்கஃஐகஞகக் கைதந்து வருகின்றவர்களைப் பிடித்துக்கொண்டு ஒருவரும் காணுதவாறு நள்ளிரவிலே சமண சமயம்புக்கதால் தமக்குக் கிடைத்தவைகளில் சூலைநோய் ஒன்று மாத்திரம் உடன் தொடர திருவதிகையிற்சென்று திலகவதியாருடைய திருமடத்தையடைந்து அவருடைய திருவடிகளைப்பணிந்து "நமது மரபினர் அனைவரும் செய்த தவப்பயனெல்லாம் திரண்டு ஒரு வடிவெடுத்தாற்போலும் அம்மையே! அடியேன் கொடியசூலை நோயைப் பொறுக்கலாற்றுமையால் உம்மையே பற்றுக்கோடாக எண்ணியடைந்தேன். இனி ஏழையேன் பிழைத்துக்கரையேறும் வழியை நீரே அருளிச்செய்ய வேண்டும்" என்று வேண்டி அவர் திருவடியிலே வீ ழ் ந் து அயர்ந்தார். தமக்கையார் தம்பியாரை நோக்கி. தமக்குக் கனவின்கண் ஏழைபங்காளன் வந்து தோன்றி அருளிச்செய்தபடியே மு டி த் த தை நி னை ந் து உளங்கசிந்து உருகிக் கடவுளை வணங்கிக் கொண்டு, " அறியாமையினுலே பரசமயப் படுகுழியில் விழுந்து நுவலற்கரியதுன்பத்தை நுகரும் தம்பியாரே! எழுந்திருப்பீராக" என்று கூறியருளினுர். தம்பியார் தம்மை நலிவுசெய்யும் நோயுடனே நடுக்கமுற்று எழுந்து கைகூப்பி வணங்கினுர். அம்மையார். "இஃது அம்மையப்பன் திருவருளே. தமது பொன்னடிகளை வணங்கி அடைந்த பொய்யில்லா மெய்யன்பர்களுக்கு இன்னருள்புரியும் அவ்விறைவனையே பணிந்து அவருக்கே திருத்தொண்டு செய்வீராக" என உபதேசித் தருளினுர்.. உடனே மருணீக்கியார் அவ்வறிவுமொழியை ஏற்றுக் கொண்டு இறைஞ்சி நிற்க, திலகவதியார் திருவருளை நினைந்து திருவெண்ணீற்றை எடுத்துத் திருவைந்தெழுத்தை ஓதி அவருக் களித்தனர். அவரும் அதனை அளவற்ற அன்போடு வாங்கிவணங் கித்தமது திருமேனிமுழுவதும் தரித்துக் கொண்டார்.

அம்மையார் திருப்பள்ளி யெழுச்சியிலே திருவலகும் திருமெழுக்கும் தோண்டியும் எடுத்துக்கொண்டு திருக்கோயிலுக்குத் தம்பியாரை அழைத்துக்கொண்டு சென்ருர். மருணீக்கியார் வீரட்டானத்து விமலனை வலம்வந்து திருமுன் வீழ்ந்து வணங்கிஎழுந்து நின்று அ வ னு டை ய திருவருளினுலே தமிழ்ச்செய்யுள் பாடும் வன்மையுண்டாகப்பெற்று தமதுசூலை நோய் தொலைதற் பொருட்டும் பிற்காலத்திலே அன்போடு ஓதுகின்ற அனைவருடையதுன்பத்

தையும் மலைதற்பொருட்டும் சிவபெருமான்மேல் "கூற்ருயின வாறு விலக்ககிலீர்" என்னும் திருப்பதிகத்தைப்பாடி யருளினுர். உடனே சூலைநோய் ஆலைவாய்க் க ரு ம் பு போ ல் அவலமுற்று அகன்றது. அப்பொழுது மருணீக்கியார் தமக்கு உறுதிபயக்கும் உயிரையும் தந்து வீட்டு நெறியையும் தந்த விமலனுடைய பேரரு ளாகிய கடலில் அழுந்தி உடல் முழுதும் மயிர் சிலிர்ப்ப இரண்டு கண்களினின்றும் ஆநந்தநீர் சொரிய நிலத்தில் விழுந்து புரண்டு "பரசமயப்படுகுழியிலே விழுந்து எழுகின்ற நெறியை யறியாது மாழ்கிய பாவியேன் எம்பெருமானுடைய திருவடியை யடைதலா கிய இந்தப்பேரின்ப வாழ்வைப் பெறும்படி செய்த சூலைநோய்க்கு ஏழையேன் செய்யும் கைம்மாறு யாதுளது?" என்ருர். இப்படி நிகழும்காலை அவ்வாண்டவன் திருவருளினுல் "நீயற்புதமாகிய தேனினும் இனிய செ ந் த மி ழ் ப் பதிகத்தைப் பாடினமையால் உனக்கு நாவுக்கரசு என்னும்பெயரே ஏழுலகங்களிலும் விளங்குவ தாக" என்று அனைவரும் வியக்குமாறு ஓர் அசரீரிவாக்கு வானின் கண் தோன்றிற்று. அ தை க் கே ட்ட திருநாவுக்கரசுநாயனுர், "இறைவன் இத்தனை காலமாகத் தம்மை இழித்துக்கூறிய ஏழை யேனுக்கு இந்தப்பெருவாழ்வை அருளிச் செய்தாரே" என்றுகளி கூர்ந்து அத்தன்மையனுகிய இராவணனுக்கு அருளிச்செய்த அரு ளிப்பாட்டின் மெய்த்தன்மையை யுணர்ந்து துதிப்பதையே மேற் கொண்டு ப ணி ந் த ன ர். "திருநாவுக்கரசர் சமணசமயநெறி பொய்ந்நெறியென்று யாவருக்கும் புலப்படுமாறு சைவசமயத் திற்கு மீண்டு ஆண்டவன் அருள் பெற்றமையால்உலகம் உய்தி பெற்றது உய்திபெற்றது" என்று சொல்லி அதிகைப்பதியிலுள்ள மக்கள் அனைவரும் அகமகிழ்ந்தார்கள். நாயனுர் உளம், உரை, உடல், என்னும் மூன்று கரணங்களினுலும் திருத்தொண்டு செய்ய வேண்டும் என்னும் ஆசை செவ்வனே எழுந்து மிகுதலால் சிவ சின்னங்களைத்தரித்துக் கொண்டு சிந்தித்தல் நீங்காத உணர்வும் தட்டுத்தடையின்றி எழுகின்ற துதிப்பாக்களும் உழவாரப் பணி விடையும் உடையாராயினுர். அம்மையார் தமது வேண்டுகோளின் படி ஆண்டவன் தமது தம்பியாரை ஆட்கொண்ட இனிய அருட் டிறத்தை நினைந்து நினைந்து கனிந்துகனிந்து மகிழ்ந்து மகிழ்ந்து வணங்குவாராயினுர்.

## 4. சமணர்கள் துன்புறுத்தல்

இச்செய்தியைப் பாடலிபுத்திரத்தில் இருக்கின்றசமணர்கள் கேள்வியுற்றுப் பொருமை மீதூர்ந்து, "மாறுகொண்ட பலசமயங் களையும் வாதில் வென்று நமது சமயத்தை நிலைநிறுத்திய தரும சேனர் தமக்கு வந்த சூலைநோய் இங்கே ஒருவராலும் தீராமையால் உய்யும் வழியினை நாடி அதிகையிற் சென்று முன்போலச் சைவ சமயத்திற்புக்கு அந்நோய் நீங்கப்பெற்றனர். இனிநமது சமயம் அழிந்தது, அழிந்தது" என்று துன்புற்று தலையும் பீலியும் தாழ ஓரிடத்திலே வந்து ஒருங்கு கூ டி ஞ ர் க ள். கூடிய அவர்கள், "தருமசேனருக்கு வந்தநோய் நம் ஒருவராலும் நீங்காமல் சைவ சமயத்துள் புகுந்ததால் நீங்கி விட்ட உண்மையை நமது அரசன் அறிவானுகில் நம்மேற்சினந்து தானும் சைவனுகி நமது விருத்தி யையும் நீக்குவான். இனி இ த ற் கு என்செய்வோம்" என்று சொல்லித்தங்களுள்ளே சிந்தித்து வஞ்சனையாகிய ஒருவழியைத் தெரிந்து கொண்டு பல்லவமன்னன் நகரத்திற் சென்று அரண் மனையினுள்ளே புகுந்து அம்மன்னனைப்பார்த்து, "மன்னர் பெரு மானே! எமக்குத்தலை வராயிருந்த த ரு ம சே ன ர் தமது உடன் பிறந்தாராகிய திலகவதியார் சைவசமயத்திலே நிற்கின்றபடி யால் தாமும் அவர்போல ஆதலை எண்ணித் தமக்குச்சூலைநோய் வந்ததாகச்சொல்லி அது நம்மாலே தீர்ந்திலது என்று அவரிடத் தில் சென்று மு ன் போ ல வே சைவசமயத்துட்புகுந்து நமது கடவுளை ஏளனம் செய்தனர்" என்று சொன்ஞர்கள். உடனே மன்னன் பெருஞ் சீற்றங்கொண்டு "இதற்கு யாது செய்யலாம்" என்று வினவினுன். அதுகேட்ட அமணர்கள், "நமது சிறந்த சமயப்பெருமையைக் கெடுத்து உமது ஆணையையும் கடந்த அத் தருமசேனரை அழைப்பித்து நீர்அவர் செய்த தீமைக்குத்தக ஒறுத் தல் வேண்டும்" என உரைத்தார்கள். அப்பொழுது அ ர ச ன் அமைச்சர்களை நோக்கி, "இம்முனிவர்களால் கூறப்பட்ட அத் தீயோனைப் பிடித்துக்கொண்டு வாருங்கள்" என ஆணை தந்தான்.

அமைச்சர்கள் உடனே படைகளோடு சென்று அதிகைப் பதியையடைந்து நாவுக்கரசினைக் கண்டு, "எங்கள் இறைவன் இன்று உம்மை அழைத்துக் கொண்டுவருமாறு ஏவினுன். வாரும்

என்ருர்கள். அது கேட்ட சொல்வேந்தர், "நாமார்க்கும் குடியல்லோம்" என்னும் மறுமாற்றத் திருத்தாண்டகத்தால் "நாம் நீங்கள் அழைத்தவாறே வரக்கடவேம் அல் லே ம்" என்ருர். அது கேட்ட அமைச்சர்கள் அவரைப் பெரிதும் வேண்டியழைக்க அருள் நிறைந்த அவர், "அடியேனுக்கு வ ரு ம் இன்னல்களுக்கெல்லாம் இறைவன் இருக்கின்ருன்" என் று செல்லுதற்கு இசைந்தனர். அவர்கள் அழைத்துக்கொண்டு போய் அ ர ச ன் எதிர் விடுத்தனர். மன்னன்தன் அண்மையில் இருந்த சமணர்களை நோக்கி, "இனி இவனையாது செய்யலாம்?" என்று வினவ அத் தீவினையாளர் "நீற்றறையில் இடவேண்டும்" என்று நெஞ்சஞ் சாது கூறினர். அரசன் அண்மையில் இருந்த ஏவலாளர்களை நோக்கி, "இவனை இவர்கள் சொல்லியபடியே செய்யுங்கள்" என்று ஏவஅவர்கள் அப்பெரியாரைவெப்பத்தையுடைய நீற்றறையினுள்ளே விட்டுக் கதவைப் பூட்டினுர்கள். நாயனுர் இறைவன் திருவடிநீழலைத்தலைக் கொண்டு "எம்பெருமான் அடியார்களுக்கு இவ்வுலகத்தின் கண்ணேவரக் கடவதொருஇன்னலும் உண்டோ" என்று அப்பெருமானைச் சி ந் தி த் து அந்நீற்றறையினுள்ளே இருந்தருளினர். அ ஃ து அவ்வன்பருக்கு, "மாசில்வீணையும் மாலைமதியமும், வீசுதென்றலும் வீங்கிளவேனிலும், மூ சு வ ண் டறை பொய்கையும் போன்றது".

ஏழுநாட்கள் சென்றபின் பல்லவமன்னன் ச ம ண ர் க ளை யழைத்து, "நீற்றறையைத் திறந்து பாருங்கள்" என்று பகர, அவர்கள் அவ்வாறேசெய்ய, நாயனுர் யாதொரு இன்னலுமின்றிக் களிப்புற்றிருத்தலைக் கண்டு வியந்து மன்னனிடத்திற்சென்று, "அவன் முன்னரே நமது சமயத்தில் இருந்து கற்றுக்கொண்ட மந்திரவன்மையினுலே வெந்து ஒழியாமல் பிழைத்துக் கொண்டனன். இனி அவனுக்கு நஞ்சு ஊ ட் டு வ தே தகும்" என்றனர். அரசன், "அப்படியே செய்யுங்கள்" என்று அறைய அவர்கள் அந்நாயனுருக்கு நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்பித்தார்கள். அவர் அவர்களுடைய வஞ்சனையையறிந்து, "ஆ ல கா ல விஷத்தை அமுதாகஉண்டருளிய ஆண்டவனது அடியார்களுக்கு நஞ்சும் அமுதாம்" என்று அதனை உ ண் டு களித்திருந்தனர். அதைக்கண்டு அமணர்கள் "இவனுக்கு நஞ்சும் அமுதாயிற்று.

இவ்விடத்திலே இவன் பிழைப்பானுகில் நமக்கெல்லாம் நாசம் உண்டாதல் திண்ணம்'' என்றஞ்சி அரசனிடம் சென்று முன் போலவேகூறி "அவன் இறவாதிருப்பான்ஆகில் எங்கள் உயிரும் உமது ஆட்சியும் நீங்குவது உறுதி'' என்ருர்கள்.

அரசன் அதைக்கேட்டு, "இனியவனைக் கொல்லுதற்கு உரிய நெறியாது?'' என்று வினவ. அவர்கள் "உமது யானையை அவனுக்கு எதிரே விட்டழிப்பதே தக்க நெறியாகும்'' என்ருர்கள். அரசனும் அங்ஙனமே செய்யும் பொருட்டு ஆணைதர பொல்லாத அச்சமணர்கள் அவருக்கு எதிரே யானையைக் கொண்டு வந்து விட்டார்கள். நாயனுர் சிறிதும் அச்சமின்றி இறைவன் திருவடிகளை யெண்ணி அந்தயானையை நோக்கி, "சுண்ணவெண்சந்தனச் சாந்தும்'' எனத்திருப்பதிகம் எடுத்து ஒவ்வொருபாட்டின் இறுதி தோறும் "கெடிலப் புனலுமுடையாரொருவர் தமர் நா—மஞ்சுவதியாதொன்றுமில்லை யஞ்சவருவதுமில்லை என்று பாடியருளினுர் அந்த யானையானது அவரை வலஞ்செய்து அவர் எதிராக நிலத்திலே தாழ்ந்து வணங்கி எழுந்து அப்புறம் செல்ல அதன் மேல் இருந்த பாகர்கள் அதனைத்தோட்டியினுலேக் குத்தித்திருப்பி அவரைக்கொல்ல வேண்டும் என்னும் குறிப்பைக்காட்டினுர்கள். அது அங்ஙனம் செய்யாமல் தனது துதிக்கையினுல் அவர்களை எடுத்து வீசிப்படுத்து வெவ்வேறிடங்களிலும் ஓடிஓடிச் சமணர்களைத்தேடித் தேடி அவர்களைச் சாடிச் சாடித்தள்ளி மிதித்துக் கிழித்து எறிந்து கொன்று அந்நகரத்தில் உள்ளார் யாவரும் கலங்கும்படி அரசனுக்கு ஆற்ருெணு ஆகுலத்தை விளைவித்தது.

அந்த யானைக்குத் தப்பிய அமணர்கள் அனைவரும் மானம் அழிந்து மயங்கி மதிகெட்டு மன்னனைச்சார்ந்து, "தருமசேனன் நமது சமயநூல்களிலே கற்றுத்தெரிந்து கொண்ட மந்திரவன்மையினுல் நாங்கள் விட்ட யானையைக்கொண்டே எங்கள் வலிமையை அழித்து ஒழித்தான்'' என்று சொல்லிப்புலம்பினுர்கள். அரசன் அடங்காச்சினமுடையவனுய் "இனி யவனையாது செய்யலாம்'' என்று வினவ அவர்கள், "அவனைக் கல்லோடு சேர்த்துக் கயிற்றினுலேப் பிணித்துக் கடலிலேதள்ளுதலே சீரியசெயலாகும்'' என்று செப்பினுர்கள். அரசன் கொலைஞரை நோக்கி, "தரும

சேனைக்காவலொடு கொண்டுபோய் ஒருகல்லோடு கயிற்றினாலே பிணித்துக் படகில் ஏற்றிக்கொண்டு சென்று கடலிற் தள்ளிவிடுங்கள் " என்று ஏவினான். அவர்கள் அதைக்கேட்டு அமணர்களும் உடன் செல்ல அஞ்சுதல்சிறிதும் இல்லாத ஆளுடைய அரசுகளைக் கொண்டு போய் அரசன் ஆணையின்படியே கடலிலே தள்ளிவிட்டுத்திரும்பினார்கள்.

அவ்வாறு தள்ளிவிடப்பட்ட நாவுக்கரசராம் நற்றவவேந்தர் " அடியேனுக்கு யாதுநிகழினும் நிகழ்க. ஏழையேன் எம்பிரானைத் துதிப்பேன் " என்று நினைந்து " சொற்றுணை வேதியன் " என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப்பாட, கல்லானதுநாயனார் மேற்பக்கத்தில் இருக்குமாறு அக்கடலின்கண் தெப்பமாகத் திகழ்ந்தது. கட்டியகயிறே அறுந்து போயிற்று. நீர்க்கடவுள் கல்லே சிவிகையாகத்தாங்கிக் கொண்டுபோய் அப்பெரியாரைத் திருப்பாதிரிப்புலியூர் என்னும் திருப்பதிக்கருகில் சேர்த்தான். நாயனார் அத்திருப்பதியினின்றும் " அரகர " வென்னும் ஒலியுடனே தம்மை எதிர்கொண்ட அடியார்களுடனே ஆலயத்துட்புக்கு தோன்றாத்துணை நாதனை வணங்கி " ஈன்றாளுமாய் " என்னும் திருப்பதிகம் பாடிக்கொண்டு அங்குச்சின்னாள் வரை தங்கியருளினார்.

பின் திருவதிகைத் தேவதேவனை தரிசிக்க வேண்டும் என்னும் பேரன்பினால் அவ்விடத்தினின்றும் புறப்பட்டுத் திருமாணிகுழி, திருத்தினைநகர் என்னும் பதிகளை வணங்கிக்கொண்டு திருகெடில நதியைக் கடந்து சென்றார். அவர் அமணர்கள் செய்த இடர்கள் அனைத்தையும் வென்றுவருகின்றனர் என்பதைக் கேள்வியுற்ற திருவதிகை வாசிகள் அனைவரும் அவ்வூரை உயர்வு ஒப்பு அற வொப்பனை செய்து மங்கல இயங்கள் எங்கும் முழங்க அவர்களை எதிர்கொண்டு வணங்கினார்கள்.

*" தூயவெண்ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்*
*நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையு நைந்துருகிப்*
*பாய்வது போலன்பு நீர் பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன்*
*மேய செவ்வாயுமுடைய "*

அவர் அத்திருவீதியினுள்ளே புக அப்பெரியாரை

"கண்டார்கள் கைதலை மேற்குவித் திந்தக் கருணைகண்டான்
மிண்டாய செய்கை யமண்கையர் தீங்கு விளக்கச்செற்ற
மூண்டாயின வண்ண மெவ்வண்ண மென்றுரைப்பார்கள் பின்னுந்
தொண்டாண்டு கொண்ட பிரானைத் தொழுது துதித்தனரே"

இவ்வாறு தம்மை எதிர்கொண்ட அடியார்களோடும் தாண்டக வேந்தர் திருக்கோயிலுட் புகுந்து இறைவனைப்பணிந்து "வெறி விரவு கூவிளம்" என்னும் ஏழைத் திருதாண்டகத்தை எடுத்து "ஏழையேனுன் பண்டிகழ்ந்தவாறே" எனத் திருப் பாட்டினிறுதிதோறும் செப்பியருளினர்.

## 5. திருவடி சூட்டப் பெறுதல்

ஆமூர் அரசு அதிகை வீரட்டானத்து அம்மான் மேற்பின் னும்பல திருப்பதிகங்கள் பாடித்திருப்பணி செய்து கொண்டிருக் கும் நாளிலே சமணர்களின் சூழ்ச்சியுட்பட்டு அவர்கள் தீத்தொழி லுக்கு இசைந்திருந்த பல்லவமன்னன் அவ்வதிகையிலே வந்து ஆளுடைய அரசுகளை வணங்கிச் சைவசமயத்தை மேற்கொண்ட னன். அவன், பின் பாடலிபுத்திரத்திலிருந்த சமணர்களின் பாழி களையும் பள்ளிகளையும் இடித்து அவைகளின் கற்களைக்கொண்டு திருவதிகைப்பதியிலே குன்றவில்லிக்குக்குணபரவீச்சரம் என்னும் கோயிலைக் கட்டிமுடித்தான்.

அந்நாளிலே நாயனுர் இறைவன் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்குந் திருப்பதிகள்பலவற்றையுஞ் சென்றுவணங் கத்திருவுளங்கொண்டு அவணின்றும் நீங்கித் திருவெண்ணெய் நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய திருப்பதி களைப்பணிந்து திருப்பதிகம் பாடிக்கொண்டு பெண்ணுகடத்திற் சென்று திருத்தூங்கானை மாடமென்னுந் திருக்கோயிலுட் புகுந்து சுடர்க்கொழுந்தினைப் பணிந்து, "சுடர்பொற்குன்றே! தோளா முத்தே! ஏழையேன் இழிவு மிக்க சமணசமயத் தொடர்புற்று வருந்திய இவ்வுடலுடன் உயிர்வாழ்தற்கு இசையேன்; அடியேன் இசையுமாறு தேவரீர் இலச்சினையாகிய சூலத்தையும் இடபத்தை

யும் அடியேன் மேற்பொறித்தருளல் வேண்டும் என்னுங்கருத்தால் "பொன்னார் திருவடிக்கொன்றுண்டு விண்ணப்பம்" என்னுந்திருப் பதிகத்தைப் பாடியருளினார். உடனே சிவபெருமான் திருவருளால் ஒரு சிவபூதம் மற்றொருவருக்குந் தெரியாதவாறு வந்து அந்நாயனார் திருத்தோளிலே சூலக்குறியையும் விடைக்குறியையும் பொறித்தது. ஞானஅரசு தமது திருத்தோளின்கட் பொறிக்கப் பட்ட அவ்விலச்சினையைக் கண்டு களிகூர்ந்து திருவருளை நினைந்து நினைந்து கனிந்து கனிந்து மகிழ்ந்து மகிழ்ந்து கண்ணருவிசொரிய நிலத்தில் வீழ்ந்து பணிந்து எழுந்தனர். அவர் அப் பதியின் கண் அமர்ந்திருக்குங்காலை, திருவரத்துறைக்கும் திரு முதுகுன்றத்திற்குஞ் சென்று சிவபெருமானைப் பணிந்து திருப் பதிகம் பாடினார். பின்னர், கிழக்கே நிவாக்கரையின் வழி யாக நடந்து சென்று தில்லையம்பதியை அடைந்து பொன்னம் பலத்திலே எந்நாளும் இன்பநட்டம் பயிலும் கூத்தப்பெருமானைக் கும்பிட்டு நிலமுற வீழ்ந்து வணங்கி எழுந்து மீண்டும் வீழ்ந்து வணங்குகின்றனர்.

"கையுந் தலைமிசை புனையஞ்சலியன கண்ணும் பொழிமழை
யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுட னுருகும்
பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரும் மின்றாழ்
சடையொடு நின்றாடும்
ஐயன் திருடட மெதிர்கும் பிடுமவ ரார்வம் பெருகுத
லளவின்றால்"

இங்ஙனம் என்புருக எழுந்த அன்பின் வாய்ப்பட்ட அப் பெருமான் நெருப்பிற்பட்ட வெண்ணெய் போல மனங்கசிந்துருக, கூத்தன் குரைகழல் முன் நின்று, "என்று வந்தாய்" என்னுந் திருக்குறிப்புடன் நட்டமாடும் நம்பன் நயனத்தினின்றும் பொழி கின்ற திருவருளைவாரி வாரிமடுத்து, அம்மகிழ்ச்சிப் பெருக்கால் "கருநட்டகண்டனை" என்னுந்திரு விருத்தமும் "பத்தனாய்ப்பாட மாட்டேன்" என்னுந்திரு நேரிசையும் பாடியருளினார். பின் திருக் கோயில் முற்றத்திலும் திருவீதிகளிலும் உழவாரப்பணி செய்து கொண்டும் காலந்தோறுங் கருநட்டகண்டனைப் பணிந்து கொண்

டும் சின்னுள் அங்குத் தங்கியருளினுர். அப்பொழுது "அன்னம் பாலிக்குந்தில்லைச் சிற்றம்பலம்" என்னுந் திருகுறுந்தொகைபாடி யருளினுர். பின் திருவேட்களஞ்சென்று பாசுபதப்பரம் பொருளைப் பணிந்து பதிகம்பாடி, திருக்கழிப்பாலை சென்று பணிந்து திருப்பதிகம் பாடிக்கொண்டு சின்னுள் அங்குத்தங்கினர். பின்னர் அம்பலவனை அரைக்கடிகையும் பிரிந்திருக்க ஆற்ருதவ ராகி அவ்விடத்தினின்றும் நீங்கி வரும் வழியிலே, "பனைக்கை மும்மதவேழ முரித்தவன்" என்று தொடங்கி "அம்பலக் கூத்த னைத்—தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனே" எனமுடிக்குந் திருக்குறுந்தொகைப் பாடிக்கொண்டே சிதம்பரத்தை அடைந்து "அரியானை" என்னும் பெரிய திருத்தாண்டகம்பாடிக் கொண்டு திருக்கோயிலுட் புகுந்து "நினைத்தொறும் காண்டொறும் பேசுந் தொறுமெப்போழ்தும், அனைத் தெலும்புண்ணெக ஆனந்தத்தேன் சொரியுங், குனிப்புடை யானைக்கண்குளிரக் கண்டு வணங்கி, செஞ்சடைக்கற்றை முற்றத் திளநிலாவெறிக்கும்" என்னுந் திரு நேரிசை பாடியருளினுர்.

நாயனுர் அங்கே பாடற்ருெண்டும் உழவாரத் தொண்டும் செய்து கொண்டிருக்கும் காலத்தில் ஒருநாள் சீர்காழியின் கண்ணே சிவபிரானது திருவருளினுலேஉமையம்மையாள் ஞானப் பாலை ஊட்ட உண்டு மறைப்பொருள்களைத் தமிழிலே தேவார மாகப்பாடியருளுகின்ற ஆளுடைய பிள்ளையாரின் பெருமையை அடியார்கள் சொல்லக்கேட்டு அவரைப் பணிதல் வேண்டும் என்னும்அவாமிகுதியினுல் பொன்னம்பலவனைவணங்கிவிடைபெற் றுக்கொண்டு புறத்தில் வந்துதிருவீதியிலே உடல்வலஞ் செய்து அத்திருப்பதியின் எல்லையைக் கடந்து திருநாரையூரைப் பணிந்து பதிகம்பாடிச் சீர்காழிக்கு அருகிற்போந்தனர். திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் காழிக்கு வருதலைக் கோள்வியுற்று அளவிறந்த அன்போடு அடியார்கள் மருங்கே சூழ்ந்துவாரா நிற்கச்சென்று அவரை எதிர்கொண்டனர். தாண்டகவேந்தர் திருஞானசம்பந் தப்பெருமானுருடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கா நிற்க, அவர் தமது திருக்கரங்களினுல் இவரது திருக்கரங்களைப் பிடித்து எடுத்து, தாமும் வணங்கி, "அப்பரே!" என்ருர். அதற்கு அரசு, "அடியேன்" என்ருர். அவ்விருவரும் ஒருவரையொருவர் காணப்

பெற்றதினுல் களிப்புமிகுந்து திருக்கோயிலுட்சென்று சிவபிரானை வலம் வந்து கீழேவிழுந்து வணங்கி எழுந்தார்கள். காழிக்கன்று ஆமூர் அரசினை நோக்கி, "அப்பரே! உங்கள் தம்பிரானுரை நீர் பாடும்" என்று சொல்ல, இவர் திருப்பதிகம்பாடிப் பிள்ளையார் திருமடத்திற்சென்று அவரோடு அளவளாவிப் பல நாள் ஆங்கு இருந்தனர்.

ஒருநாள் நாயனுர் சோழநாட்டிலுள்ளதிருப்பதிகள் அனைத்தையும் சென்று வணங்கவேண்டும் என்று நமது திருவுள்ளத்தே தோன்றிய ஆவலைத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுருக்குத் தெரிவித்து அவரோடும் திருக்கோலக்காவிற்குச் சென்று சிவபெருமானைப் பணிந்து ஞானக்கன்றினைக் காழிக்கு அனுப்பிவிட்டு, தாம் திருக்கருப்பறியலூர், திருப்புங்கூர். திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி முதலியபதிகளை வணங்கிக் கொண்டு காவிரியாற்றின் இருகரை வழியாகவும் சென்று திருச்செம்பொன்பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, திருஎதிர்கொள்பாடி, திருக்கோடிகா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேசுவரம், திருப்பழையாறை என்கின்ற பதிகளைப் பணிந்து பதிகம்பாடித் திருச்சத்தி முற்றத்தையடைந்தார். அங்கு ஆண்டவனைக் கண்டு வணங்கி, "கோவாய் முடுகி அடுதிறற்கூற்றம் குமைப்பதன்முன் பூவாரடிச்சுவடென்மேல் பொறித்துவை" என்னும் திருப்பதிகம் பாடவும்.சிவபெருமான், நல்லூருக்கு "வா வா"என்று நவின்றருளினுர். சொல்லரசர் திருநல்லூரிலே சென்றுகடவுளை வணங்கி எழுந்தார். அங்ஙனம் எழுங்காலை உமையொருபாகன்," உன்னுடைய நினைப்பதனைமுடிக்கின்ருேம்" என்று சொல்லித்தமது திருவடிகளை அவர் முடியின்மேல் சூட்டியருளினுர். நாயனுர் "நினைந்துருகும் அடியாரை" என்னும் திருத்தாண்டக மெடுத்துத் திருப்பாட்டின் முடிவுதோறும், "திருவடியென்றலைமேல் வைத்தார் நல்லூர் எம் பெருமானுர் நல்லவாறே" என்று பாடியருளினுர். இன்னும் பல பதிகங்கள்பாடிக் கொண்டு சின்னுள் அங்குத் தங்கினர். இருக்குநாளிலே திருக்கருகாவூர். திருவாரூர், திருப்பாலைத்துறை முதலிய பதிகட்குச் சென்று பரமனை வணங்கிக் கொண்டு திருநல்லூருக்குத் திரும்பிவிடுவார்.

# 6. அப்பூதியடிகளின் அன்பின் திறம்

திருவையாற்றுக்குக் கீழ்பால் உள்ள திங்களூரின் கண்ணே மறையவர் குலத்து மாண்புறஉதித்த அப்பூதியடிகள் என்னும் பெயர் வாய்ந்த ஒருவர் உளரானூர். அவர் திருநாவுக்கரசரின் செந்நெறித் தொண்டையும், சிவபிரான் அவருக்கு அருளிச்செய்த அருளிப்பாட்டையும் அடியார்கள் பலராற்கேள்வியுற்று அவ்வாளுடைய அரசுகளினிடத்து அளவிறந்த அன்புவைப்பாராயினூர். அப்பெருமானைத்தாம் நேரில் காணுதவராய் இருந்தும் அவ்வன்பின் மிகுதியினுல், "மனைப்பாலுள்ள அளவைகள் நிறைகோல் மக்கள் ஆவொடுமேதி மற்றும், உளவெலாம் அரசின் நாமம் சாற்றும் அவ்வொழுகலாற்றினை உடையாராய் இருப்பதோடு அமையாது, 'அவர் நாமத்தால், படிதிகழ் மடங்கள் தண்ணீர் பந்தல்கள் முதலா வுள்ளமுடிவிலா அறங்கள் செய்து முறையினுல் வாழ்" வாராயினுர். அங்ஙனம் வாழுநாளில் திருநாவுக்கரசு திருநல்லூரினின்றும் நீங்கித் திருப்பழனத்திற்கு வந்து சிவபெருமானை வணங்கிக்கொண்டு பிறபதிகளையும் வணங்கவேண்டுமென்னும் பெருவிருப்பாற்புறப்பட்டுத்திங்களூரின் மருங்குசெல்வாராயினுர். செல்லுங்காலை ஓர் அழகிய தண்ணீர்ப்பந்தரைக்கண்டு உள்ளே சென்று நீரருந்தி அவ்வறநீர்ச்சாலையின் அமைப்பையும் பிறவற்றையும் நோக்கிச் சிந்தைவியந்து வருவார் அப்பந்தரின் கண், "திருநாவுக்கரசரென சந்தமுற வரைந்ததனை எம்மருங்குந் தான் கண்டார்" கண்டஅவர். "இப்பந்தர் இப்பெயரிட்டு இங்கமைத்தார் யார்?" எனவினவினுர். அப்பந்தரில் உள்ளவர்கள், "ஆண்டவரசெனும் பெயரால், செப்பருஞ்சீர் அப்பூதியடிகளார் செய்தமைத்தார், தப்பின்றி எங்குமுளசாலை குளம்கா" என்று விடையிறுத்தனர். அதனைக்கேட்ட அரசு. "இவ்வறம்புரிந்தவர் எக்கருத்தைக் கொண்டு இவ்வாறு எழுதியிருத்தல் கூடும்." எனஐயுற்றவராய் ஆங்குள்ளவர்களை மீண்டும் நோக்கி, "அவ்வப்பூதியடிகள் எந்தவூரினர்" எனவினவியருள, அவர்கள், "ஐயன்மீர்! அப்பூதியடிகள் மறையவகுலதிலகர். இதோதோன்கின்ற திங்களூர் என்னும் ஊரின் கண் உள்ளவர். இப்பொழுதுதான் இவ்விடத்தினின்றும் தமதில்லந்திற்கேகினர். அவ்வீடும் திங்களூரின் முன்னிடத்திலேயே உள்ளமையான் சேய்த்து அன்று

நணித்து " எனச்செப்பினர். உடனே வாகீசர் திங்களூர் சென்று அப்பூதியடிகள் மனையின் கடைத்தலையில் நிற்க, சிலர் சென்று அப்பூதியடிகட்கு, சிவனடியார் ஒருவர் வந்திருக்கின்றார் " எனச் செப்புதலும், அப்பூதியடிகள் விரைந்தோடி வந்து நாயனார் திரு வடிகளில் வீழ்ந்து வணங்கி, " முடிவில் தவம் செய்தேன் கொல் முன்பொழியும் கருணைபுரி, வடிவுடையீர் என்மனையில் வந்தரு ளிற்று என வினவியருளினார். அதற்கரசு, " யான் திருப்பழ னத்தில் சிவபெருமானை வணங்கித் திருவையாறு செல்லுங்காலை வழிக்கரையில் நீர் வைத்துள்ள தண்ணீர்ப்பந்தரைக்கண்டு அது போலவே இன்னும் பல அற்புதங்கள் புரிதலையும் கேட்டு உம்மைக் கண்டுபோக விரும்பி ஈண்டு வந்தேன். சிவனடியாருக்கு நீர் வைத்திருக்கும் நீர்ப்பந்தரில் உம்முடைய பெயரை எழுதாதுவேறு யாரோ ஒருவரது பெயரை யெழுதிய காரணம் என்ன?" என வினவியருளினார். அச்செய்தியைக்கேட்ட அப்பூதியடிகள் மனங் கொதித்து, " ஐயா! நீர் நன்றருளிச்செய்திலீர். நாணில் அமண் பதகருடன் ஒன்றிய மன்னவன் சூழ்ச்சி திருத்தொண்டினுறைப் பாலே வென்றவர்தம் திருப்பேரோ வேறொருபேர் " எனவெகுண்டு,

" நம்மையுடையவர் கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென என்போல்வாரும் தெளியச்
செம்மைபுரி திருநாவுக்கரசர் திருப்பெயரெழுத
வெம்மை மொழியான் கேட்க விளம்பினீர் " எனவிளம்பி

" பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறும் அவர் பெருமை
அங்கணரும் புவனத்தின் அறியாதார் யாருளரே
மங்கலமாம் திருவேடத்துடனின்றிவ்வகை மொழிந்தீர்
எங்குறைவீர் நீர்தாம் யார் இயம்புமென இயம்பினார் "

எனக் கூறிய அப்பூதியடிகளின் அன்பின் திறத்தை அறிந்த அரசு மிகவும் வியந்து, தாம்தாம் அத்திருநாவுக்கரசு, எனத்தெரி விக்கக்கருதி, " ஐயா! பிறதுறையில் நின்றேற, அருளுபெருஞ் சூலையினால் ஆட்கொள்ள அடைந்துய்ந்த, தெருளுமுணர்வில்லாத சிறுமையேன் யான் " என்று அருளிச் செய்தனர். உடனே அப்

பூதியடிகள் அற்றவர்கள் அருநிதியம் பெற்ருற்போல் அக மகிழ்ந்து கீழேவீழ்ந்து வணங்கி அப்பெரியாரின் திருவடியை இறுகப்பற்றிக் கொண்டனர் நாயனுர் தாமும் வணங்கி அவரை அன்போடு எடுத்து ஆதரவுபுரிய, அப்பூதியார், "மூண்ட பெருமகிழ்ச்சியிஞல் முன்செய்வதறியாதே, ஈண்டமனையகத் தெய்தி இல்லவர்க்கும் மக்களுக்கும் ஆண்ட அரசெழுந்தருளும் ஓகையுரைத்து ஆர்வமுறப் பூண்ட பெருஞ்சுற்றமெல்லாம் கொடு மீளப்புறப்பட்டார்" அவ்வாறு புறப்பட்டு வந்த அவர் அனைவரை யும் பெரியார் திருவடிகளில் வணங்குவித்து அவரது திருவடிகளை விளக்கி அந்நீரைத்தமது முடியிலும் பிறர் முடியிலும் தெளித்து அங்ஙனமே உள்ளும் பூரித்துப் பெருமகிழ்வு கொண்டு பின்னர் அடிகளை நோக்கி, "எமது அருந்தவப்பயனே! தேவரீர் அடி யேனது இல்லத்தில் அமைந்து அமுது செய்தருளல் வேண்டும்" எனக்குறையிரந்து வேண்டினர். பெரியாரும் அதற்கிசைந்தரு ளினர். இம்மகிழ்ச்சிச் செய்தியை மனைவியாருக்குத் தெரிவித்து இருவரும் இறைவனுடைய இன்னருளை உன்னி உன்னி உவகை மிதூர்ந்து அடிகட்கு அமுது அமைப்பாராயினர். தூயநற்கறி களானபல வகைச்சுவையால் ஆக்கி ஆயபோனகமும் அமைத்துக் கொண்டு தமது பிள்ளையாகிய மூத்த திருநாவுக்கரசை நோக்கி, "அரும்பெறற்புதல்வ! நீ நமது வாழைத்தோட்டத்திற்கு ஒல்லெ னச்சென்று இன்று விரியக்கூடிய பெரிய வாழைக்குருத்து ஒன் றினை அரிந்து கொண்டு வருவாயாக" எனஏவினர். அவ்வருந்தவக் குழந்தை அகமிகமகிழ்ந்து, "நல்லதாய் தந்தையேவ நானிது செயப்பெற்றேன்" என்று கருதிவிரைந்து சென்று தோட்டத்துட் புகுந்து குருநாளக் குருத்தொன்று அரிய அதன் கண்ணிருந்து நல்லபாம்பு ஒன்று சினந்து சீறி அப்பிள்ளையின் கையிற்கடித்து அதிற்சுற்றிக்கொண்டது. அங்ஙனம் சுற்றிக்கொண்டு கண்களி னின்று தீப்பொறிபறக்கத் தன்னைநோக்கும் அப்பாம்பினை உதறிக் கீழேதள்ளி மனம்பதைபதைப்புடன், "இப்பாம்பின் நஞ்சானது என் தலைக்கேறி இங்கு வீழ்ந்துஇறப்பதற்கு முன்னரே இக்குருத் தினைக் கொண்டுபோய்க் கொடுப்பேன். பெறுதற்கரிய நமது பெரியார் அமுதுசெய்தருளுதற்கு இடையூருக என்னை அரவம் தீண்டிய செய்தியை யாருக்கும் அறையேன்" என்று திண்ணியு

கருத்தினேடு செழுமனை சென்றுபுக்கு, பரிகலக்குருத்தைத் தாயார் பால் வைத்துப்படிமேல் வீழ்ந்தான். அங்ஙனம் தளர்ந்து வீழ்ந்த மகனைக்கண்ட தாயாரும் தந்தையாரும் உளம்பதைப்புற்று குருதி வடிகின்ற அவன்கையையும் பிறகுறிகளையும் கண்டு, இவன் விடத்தினுல் வீந்திருக்கவேண்டும்'' எனக்கருதி, துளங்குதல் இல்லாமல் தொண்டர் அமுது செய்வதற்குச் சூழ்வாராகி பெறுதற்கரிய அப்புதல்வனை பாயினுட் பெய்து மூடி புறமனைமுன் றிற்பாங்கு ஓர் புடையினில் மறைத்து வைத்து அடிகளிடம் போந்து, "அமுது செய்தருள வரவேண்டும்'' என்று வேண்ட, அடிகளாரும் எழுந்து அவர்கள் இட்ட ஆசனத்தில் அமர்ந்து தாம் திருநீறணிந்து கொண்டு அப்பூதியடிகட்கும் அவரது வாழ்க்கைத் துணைவியாருக்கும் வெண்ணீறு நல்கி மக்களுக்கும் அளிக்குங்காலை மெய்பேசுதலையே விரதமாகக் கொண்ட அப்பூதியடிகளை நோக்கி, "அன்பரே! மூத்ததிருநாவுக்கரசு எங்கே. திருநீறளிப்பதற்கு? அவற்கு அளித்தன்றோ மற்றப் பிள்ளைகட்கு அளித்தல் வேண்டும்'' என வினவினுர். அதற்கு அப்பூதியடிகள், "அடிகேள்! அவன் இப்பொழுது ஈங்கு உதவான்'' என்று கூறினர். இச்சொல்லினைக் கேட்ட உடனே நாயனுரது செவ்விய திருவுள்ளத்தின் கண் ஓர் தடுமாற்றம் உண்டாக, ஈதென்ன வியப்பு? இச்சொல்லைப் பொறுக்கலாற்ருது எனதுஉள்ளம் கலங்குவதற்குக்காரணம் என்னை? ஏதோஇங்கு நடந்திருத்தல் வேண்டும் அதற்கு நாம் ஒருகழுவாய் தேடுவோம்'' எனஎண்ணினவராய் அப்பூதியடிகளை நோக்கி, "ஐயா! நீர் உண்மையைச் சுருக்கிக் கூருமல் விரித்துக் கூறும்'' எனவிளம்பினர். அதனைக்கேட்ட அப்பூதியார் நடந்த செய்திகள் அனைத்தையும் கூற நாவுக்கரசர் இதனைக்கேட்டு, "நன்று நீர் புரிந்த வண்ணம் யாவரித்தன்மை செய்தார்'' என்று வியந்து இறந்த அக்குழந்தையை எடுத்துக் கொண்டு வரும்படிக்கூறி, திருப்பழனத்துச் சிவபிரான் திருமுன் கொண்டுபோய்ப் போடுமாறு செய்து அப்பெருமானை நோக்கி, "ஒன்று கொலாம் அவர் சிந்தை'' என்னும் திருப்பதிகத்தைப் பாடி, பணிவிடத்தைப் பாற்றுவித்தருளினர். உடனே இறந்த குழந்தை உறங்கி எழுவானைப்போன்று உயிர்பெற்றெழுந்து திருநாவுக்கரசின் திருவடிகளில் வீழ்ந்து வணங்க அவரும் அப்பிள்ளைக்குத் திருநீறு நல்கி ஆக்கமொழி கூறினர். ஆயகாலை

*" பிறிவுறும் ஆவிபெற்ற பிள்ளையைக்காண்பார் தொண்டின்
நெறியினைப் போற்றிவாழ்ந்தார் நின்றவப்பயந்தார் தங்கள்
அறிவரும் பெருமையன்பர் அமுது செய்தருளுதற்குச்
சிறிதிடையூறு செய்தான் இவனென்று சிந்தை நொந்தார் "*

அவர்கள் வாட்டத்தையறிந்த தாண்டகவேந்தர் விரைந்து சென்று உணவுண்ணும் இடத்தில் அமர்ந்து அப்பூதியடிகளையும் அவர்மக்களையும் தன் இருமருங்கும் இருந்து உண்ணவேண்டும் எனப்பணித்தனர். அவர்களும் அவ்வாறேஅமர அனைவரும்உண்டு களித்தனர். திருநாவுக்கரசர் சின்னாள் அங்குத்தங்கியிருந்து பின்னர்த் திருப்பழனத்திற்கு அப்பூதியடிகளுடன் சென்று ஆண்டவனைவணங்கி, " சொன்மாலை பயில்கின்ற" என்னும் திருப்பதிகம் தொடங்கி அப்பதிகத்தின் இறுதித்திருப் பாட்டில், "அஞ்சிப் போய்க்கலிமெலிய அழலோம்பும் அப்பூதி; குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் " என அப்பூதியடிகளைச் சிறப்பித்தருளினர். பின்னர் அப்பூதியாரிடத்தில் அரிதின் விடைபெற்றுக் கொண்டு பிறபதிகளை வணங்கும் பெருவிருப்பால் சென்றனர். அப்பூதியடிகளும் பார்க்கும் பொருளெல்லாம் திருநாவுக்கரசின் திருவடிகளாகவே பார்த்து இறுதியில் இறைவன் திருவடி நிழலையடைந்தனர்.

## 7. திருவீழிமிழலையிற் படிக்காசு பெறுதலும் மறைக்காட்டுக் கதவுதிறத்தலும்

திருநாவுக்கரசுநாயனர் திருநல்லூருக்குச் சென்று தமது திருமுடிமேல் திருவடிமலரைச் சூட்டிய செயலை நினைந்து கசிந்து கசிந்து அப்பெருமானை வணங்கிச் சிலநாள் அங்குத்தங்கியிருந்து பின் திருவாரூருக்குச் செல்ல நினைந்து திருநல்லூரை நீங்கி, பழையாறை, திருவலஞ்சுழி, கும்பகோணம், திருநாலூர், திருச்சேறை, திருக்குடவாயில், திருநறையூர், திருவாஞ்சியூர், திருப்பெருவேளூர், திருவிளமர் முதலிய திருப்பதிகளைப்பணிந்து பதிகம்பாடிக் கொண்டு திருவாரூறை அடைந்து வன்மீகநாதனை வணங்கிப் பதிகங்கள் பாடிக்கொண்டிருந்தார். ஒரு திருப்பதிகத்தில் நமிநந்தியடிகள் நீரினல் விளக்கேற்றினமையைச் சிறப்பித்துப்பாடினர். அத்திருப்பதியிலுள்ள அரனெறி என்னும் ஆலயத்தையும் பணிந்து பதிகம்பாடியருளினர். அங்குதங்கியிருக்கும்

நாட்களிலே திருவலிவலம், கீழ்வேளூர், கன்ருப்பூர் என்னும் திருப்பதிகள் சென்று சிவபெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு திருவாரூருக்குத் திரும்பிவிட்டார். திருவாதிரை நாளிலே வீதிவிடங்கப் பெருமானுடைய திருவிழாவை அடியார்கள் பலருடன் கண்டு களித்து ஆங்கிருந்தனர். ஒருநாள் திருப்புகலூருக்குப் போகக்கருதித் திருவாரூரினின்றும் நீங்கிப் பலபதிகளையும் பணிந்து கொண்டு திருப்புகலூருக்கருகில் சென்றனர். அவ்வூருக்கு வந்து ஆண்டவனை வணங்கி முருகநாயனருடைய திருமடத்தில் எழுந்தருளியிருக்கும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், “ திருநாவுக்கரசுநாயனர் திருவாரூரினின்றும் திருப்புகலூரை நோக்கி எழுந்தருளிவருகின்ருர் ” என்று கேள்வியுற்று அடியார் குழாத்தோடும் சென்று அவரை எதிர்கொண்டு வணங்க அந்நாயனரும் வணங்கினர். ஞானக்கன்று ஞானஅரசினை நோக்கி, “ அப்பரே நீர் வரும் நாளிலே திருவாரூரிலே நடந்த சிறப்பைக் கூறும் ” என்ருர். அப்பெருமான் திருவாதிரைச் சிறப்பைக் “ முத்துவிதான மணிபொற்கவரி ” என்னும் திருப்பதிகத்தினுலே சொல்லியருளினர். ஆளுடைய பிள்ளையார் அதைக் கேட்டு, “ நான் திருவாரூருக்குச் சென்று செம்பொற்சோதியை வணங்கி இவ்விடம் திரும்புவேன் ” என்று சொல்லித் திருவாரூருக்கெழுந்தருள ஆளுடைய அரசு திருப்புகலூருக்கு வந்து இறைவனைப்பணிந்து திருப்பதிகம் பாடிக்கொண்டிருந்தனர். அங்கிருக்கும் நாளிலே திருச்செங்காட்டாங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் என்னும் பதிகளுக்குச் சென்று பரமனைப் பணிந்து கொண்டு வருவார். சின்னுட் சென்றபின் வெங்குரு வேந்தர் திருவாரூரினின்றும் நீங்கி, திருப்புகலூருக்கு எழுந்தருளி வந்தார் ஆமூர் அரசரும் அவரை எதிர்கொண்டழைத்து வந்து முருகநாயனருடைய திருமடத்தில் அவரோடும் அமர்ந்திருக்கும் நாளிலே சிறுத்தொண்ட நாயனரும், திருநீலநக்க நாயனரும் ஆங்குவந்து அவர்களோடு உடனுறையும் பேற்றினைப் பெற்று மகிழ்ந்தனர்.

சில நாட்சென்றபின் ஆண்டஅரசும் சிவக்கன்றும் திருப்புகலூரினின்றும் நீங்கி, திருநீலநக்கநாயனர், சிறுத்தொண்டநாயனர், முருகநாயனர் முதலியோர்களுக்கு விடைகொடுத்தனுப்பி

விட்டு திருவெம்பர் என்னும் திருப்பதியையடைந்து பரமனைப் பணிந்து திருக்கடவூர் சென்று வீரட்டானேஸ்வரரை வணங்கிக் குங்கிலியக்கலயநாயனுரால் அவருடைய திருமடத்திலே திருவமுது செய்விக்கப்பட்டுத் திருக்கடவூர் மயானம், திருவாக்கூர் முதலிய பதிகளைப் பணிந்து கொண்டு திருவீழிமிழலையையடைந்து சிவபெருமானைக் கண்குளிரக் கண்டு வணங்கிக்கொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார்கள். சின்னுட்களுக்குப் பின் மழையின்மையினுலும், காவிரிப் பெருக்கின்மையினுலும் வற்கடம் உண்டாக, அதனுல் உயிர்கள் அனைத்தும் இன்னலுற்றன. அக்காலத்தில் சிவபெருமான் அன்பர் இருவரது கனவிலும் தோன்றி, " காலமாறுபாட்டினுல் நீங்கள் கவலையடையீர்களாயினும் உங்களை வழிபடுகின்ற அடியார்கள் அவலத்தைப் போக்கும் பொருட்டு நாம் உங்களுக்கு படிக்காசு அளிக்கின்ருேம் " என்று திருவாய் மலர்ந்து திருக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் தினந்தோறும் படிக்காசு வைத்தருளினுர். அத்தொண்டர் இருவர்களும் தாங்கள் பெற்றபடிக்காசுகளால் பண்டங்கள் வாங்குவித்து அமுதுசமைப்பித்து, " அடியார்கள் அனைவரும் வந்து அமுதசெய்யக்கடவர்கள் " என்று இரண்டு காலங்களிலும் பறைசாற்றிச் சொல்லால் முழக்கிச் சோறிட்டுத் துயர்கூர் வறுமைத் தொலைத்திட்டார். பிள்ளையார் தாம் சிவபெருமானுக்குத் திருக்குமாரராகையாலும் பாடற்ருெண்டு மாத்திரம் செய்கையாலும் தாம் பெற்ற படிக்காசை வட்டம் கொடுத்து மாற்ற வேண்டியவராயினுர். அரசுகளோ தாம் அக்கடவுளுக்கு அடியாராதலாலும் பாடற்ருெண்டோடும் கைத்தொண்டும் செய்தலாலும் தாம்பெற்ற படிக்காசை வட்டம் கொடாது மாற்றுவாராயினர். இருவருடைய திருமடங்களிலும் அடியார்கள் அனைவரும் காலந்தோறும் உண்டு உளமகிழ்ந்திருக்கும் காலத்திலே எங்கும் மழைபெய்து விளைபொருள்கள் மிகுந்தமையால் பஞ்சம் நீங்கிற்று.

அரசும் கன்றும் அத்திருவீழிமிழலையினின்றும் நீங்கித் திருவாஞ்சியம் முதலிய பதிகளைப் பணிந்து கொண்டு திருமறைக்காட்டினை யடைந்து திருக்கோவினுட்புகுந்து வலஞ்செய்து மறைகள் வழிபட்டுத் திருக்காப்புச் செய்த அந்நாள் முதல் இந்நாள்வரைக்கும் அடைக்கப்பட்டே இருக்கின்ற திருக்கதவிற்கு

முன்வந்து மறைகளாலே திருக்காப்புச் செய்யப்பட்ட அத்திருக் கதவை அடியார்கள் திறக்காமையால் வேறோர் பக்கத்திலே ஒரு வாயிலமைத்து அவ்வழியே சென்று மறைக்காட்டு மணாளனை வணங்கிப் போகின்றார்கள் என்பதைக் கேட்டறிந்தார்கள். உடனே புரமெரித்தார் திருமகனார் அரசினைநோக்கி, "அப்பரே நாம் எங்ஙனமாயினும் இவ்விறைவனை இவ்வடைக்கப்பட்டவழி திறந்து சென்று வணங்கல் வேண்டும் ஆதலால் இத்திருக்கதவு திறக்குமாறு நீரே திருப்பதிகம் பாடும்" என்றார். ஆளுடைய அரசரும் "பண்ணினேர் மொழியாள்" என்னும் திருப்பதிகத்தைக் கதவு திறக்கும் பொருட்டுப் பாட அது திறக்கப்படாமல் காலம் தாழ்த்தது. அதுகண்டு "இறக்கமொன்றிலீர்" என்றுதிருக்கடைக் காப்பிலே பாடிவணங்கினார். உடனே சிவபெருமான் திருவருளி னாலே திருக்கதவு திறக்கப்பட்டது. ஆயகாலை அன்பர்கள் இரு வரும் கீழேவீழ்ந்து வணங்கினார்கள். அடியார்கள் அனைவரும் மகிழ்ச்சிப் பெருக்கால் ஆரவாரித்தனர். பெருந்தொண்டரிரு வரும் பேரின்ப வெள்ளத்தில் அமிழ்ந்தி எழுந்து உள்ளே புகுந்து உமைமணாளனைப்பணிந்து திருப்பதிகங்கள் பாடிஅரிதில் வெளியே வந்தார்கள். அப்பொழுது அரசு கன்றினை நோக்கி, "இறைவன் திருவருளினாலே இந்தத்திருக்கதவு என்றும் திறக்கவும் அடைக் கவும் இருக்கும் பொருட்டுத் தேவரீர் இது அடைக்குமாறு திருப் பதிகம் பாடியருளும்" என்றார். பிள்ளையார் அதற்கிசைந்து திருப்பதிகம்பாட முதற்பாட்டுப் பாடிய அளவிலே திருக்கதவு அடைக்கப்பட்டது. அதுகண்டு நாயன்மார் இருவரும் திருவருளை நினைந்து வியந்து களிப்புற்று வணங்கினார்கள். பிள்ளையார் தாம் எடுத்த திருப்பதிகத்தை முடித்தருளினார். அன்று முதல் அக்கதவு திறத்தலும் அடைத்தலுமாகிய வழக்கம் நிகழ்ந்துவருவதாயிற்று. அங்கே நிகழ்ந்த செயற்கரிய செயலைக்கண்ட அடியார்கள் அனை வரும் அளவிறந்த ஆச்சரியமுடையவராய் உடல் முழுவதும் மயிர் பொடிப்ப உள்ளம் கனிய, கண்ணீர் சொரிய நாயன்மார் இருவர் களின் திருவடிகளில் வீழ்ந்துவீழ்ந்து வணங்கினார்கள்.

அப்பெரியார் இருவரும் திருமடத்தையடைந்ததும் சொல் லரசர் தாம் திருப்பதிகம் முழுதும் பாடிய பின்னர்த் திருக்கதவு திறந்த அருமையையும், பிள்ளையார் முதற்பாட்டைப் பாடின

உடனே கதவு அடைத்த எளிமையையும் நினைந்து, " ஆண்டவன் திருவுள்ளம் இதுவென்று அறியமாட்டாமல் அயர்ந்தேன் " என்று கவன்று மிகவும் அஞ்சித் திருமடத்தில் ஒரு மருங்கு சென்று மறைக்காட்டு மணாளனது திருவடிகளைச் சிந்தித்துக் கொண்டு சிறிது உறங்கினர். அப்பொழுது சிவபெருமான் அவரிடத்திற்சென்று, " நாம் வாய்மூரில் இருப்போம். நீ அவ்விடத்திற்குத் தொடர்ந்து வா " என்றருளிச் செய்தார். அப்பெருமான் உடனே எழுந்து, " எங்கே யென்னை யிருந்திடந்தேடிக் கொண், டங்கே வந்தடையாள மருளினர், தெங்கே தோன்றுந் திருவாய் மூர்ச்செல்வனு, ரங்கே வாவென்று போனரதென் கொலோ " என்னும் திருப்பதிகம் பாடிக்கொண்டு திருமறைக்காட்டினின்றும் புறப்பட்டு விரைந்து செல்ல இறைவன் அவருக்கு முன்னாகத்தாம் காட்டியருளிய திருக்கோலத்தோடும் நடந்தருளினர். அப்பெருமானுக்குப் பின்னே அப்பர் பெருமான் நெடும் பொழுது சென்றும் அவரை நெருங்கப் பெற்றிலர். ஆண்டவன் அவருக்கு அண்மையில் காட்சி கொடுப்பவர்போல ஒரு திருக்கோயிலை எதிரே காட்டி அதனுட்புகுந்தருள, தாண்டகவேந்தரும் அவண் விரைந்து தொடர்ந்தனர். பிள்ளையார் " அப்பர் எங்குற்றார் " எனவினவி நிகழ்ந்த செய்தியையறிந்து கொண்டு ஆங்குவந்து சேர்ந்தனர். அரசர் சிவபிரான் மறைந்தமையைக் குறித்துத் துன்புற்று, " அடியார்களிற் றலைசிறந்த சிவகுமாரராகிய திருஞானசம்பந்தப்பெருமானாரே திறக்கவேண்டும் என்பதை நினையாமல் திறந்து குற்றம் செய்த ஏழையேனுக்கு மறையலாம். ஒரு திருப்பதிகத்தின் முதற் பாட்டினாலேயே திருக்கதவையடைப்பித்த பிள்ளையார் இங்கே வந்திருக்கின்றார். அவருக்கு எவ்வாறு மறையலாம் " என்றார். உடனே உமையொருபாகன் தமது அருமைப் புதல்வருக்குக் காட்சி கொடுத்தருளினர். பிள்ளையார்கண்டு வணங்கித்துதித்து அப்பரும் காணும்படி காட்ட அவரும் தரிசித்துப் " பாடி அடியார் பரவக் கண்டேன்" என்னுந்திருப்பதிகம்பாடினர். அத்திருப்பதிகத்தை இறைவன் ஏற்றுக்கொண்டு எழுந்தருளசீரியோரிருவரும் திருவாய் மூரை யடைந்து இறைவனை வணங்கிச்சின்னாள் அங்கிருந்து பின்னர் மறைக்காட்டிற்கு வந்து அங்கே சிவபிரானைப் பணிந்து கொண்டு இருந்தார்கள்.

இருக்கும் நாளில் பிள்ளையார் மதுரையில் இருக்கின்ற மாறனுடைய மனைவியாராகிய மங்கயர்க்கரசியாரும் மந்திரியாராகிய குலச்சிறையாரும் அனுப்பிய ஒற்றர்களாலே அந்நாட்டின் கண்ணே சமணசமயம் மேலோங்கிச் சைவசமயத்தைக் கீழ்ப்படுத்தியசெய்தியைக் கேள்வியுற்று அச்சமணர்களை வென்று சைவத்தை நிலை நிறுத்தும் பொருட்டு அவ்விடத்திற்குச் செல்ல எழுந்தனர். அப்பொழுது திருநாவுக்கரசர் சமணர்களின் தீத்தொழில்களையும் அவர்கள் தம்மைப் படுத்திய துன்பங்களையும் நினைந்து பிள்ளையார் மதுரைக்குப் போகாதிருக்கும்படி தடுக்க அவர் அதற்கு வேண்டுவன கூறி பாண்டிய நாட்டிற்கு எழுந்தருளினார்.

## 8. வட நாட்டுச் செலவு

திருநாவுக்கரசர் திருமறைக்காட்டிலே சிலநாள் தங்கியிருந்து பின் அதனை நீங்கித் திருநாகைக்காரோணம் முதலிய பதிகளை வணங்கிக் கொண்டு தமக்குப் படிக்காசு அருளிய வீழிமிழலை விமலனை வணங்க எழுந்த பெருவிருப்பால் ஆங்குச் சென்று அவனை வணங்கிச் சின்னாள் தங்கியிருந்து பின் திருவாவடுதுறையிற் சென்று பரமனைப் பணிந்து "மாயிருஞாலமெல்லாம்" என்னும் திருப்பதிகத்தை யெடுத்து ஆங்கு திருஞானசம்பந்தருக்கு ஒரு திருப்பதிகத்தின் பொருட்டு ஆயிரம் செம்பொன் கொடுத்தருளிய திறத்தினை யெண்ணிக் "கழுமல ஊரர்க்கம் பொன், ஆயிரம் கொடுப்பார்போலும் ஆவடுதுறை துறையனாரே" என்று பாடியருளினார். பின் பழையாறைக்குச் சென்று அங்கே வடதளி யென்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கின்ற சிவபெருமானைச்சமணர்கள் மறைத்திருத்தலைக் கேள்வியுற்று அதற்கு அருகிலுள்ள ஓரிடத்திற்றங்கி திருவமுது செய்யாமல் கடவுளைத் தியானித்து, "பெருமானே! அடியேன் தேவரீருடைய திருவுருவைக்கண்டு வணங்கினாலன்றி இவ்விடத்தினின்றும் போகேன். அந்தத்திருவுருவை மறைத்த சமணர்களுடைய தீச்செயலைக் கெடுத்தருளும்" என்று சொல்லிக்கொண்டிருந்தார். சிவபெருமான் அரசன்கனவின் கண்தோன்றி, "நாம்சமணர்களால் மறைப்புண்டிருக்கின்றோம். நாவுக்கரசும் நம்மை வெளிப்படக்கண்டு வணங்கல் வேண்டும் என்று சிந்தித்துக் கொண்டிருக்கின்றான்.

நீ அந்தச்சமணர்களை யழித்து நமக்குத் திருக்கோயில் செய்ய வேண்டும்'' என்று அருளிச்செய்து தாம் இருக்கின்ற·இடத்தின் அடையாளங்களைத் தெரிவித்து மறைந்தருளினர். மன்னன் விழித்தெழுந்து இறும்பூது எய்தினவனாய் அமைச்சர்களோடும் விரைவிலே திருக்கோயிலிற் சென்று ஆண்டவன் அருளிச்செய்த அடையாளத்தின் வழிகண்டு சமணர்கள் செய்த வஞ்சனையை உணர்ந்து சொல்லரசரை வணங்கி அந்தச்சமணர்களை யானை களாலே மிதித்துக்கொன்று சிவபெருமானுக்கு விமானம் செய்து அநேக நிபந்தங்களை யமைத்தான். தாண்டகவேந்தர் ஆண்டவ ரைக்காண உள்ளே புகுந்து கண்டு வணங்கி ''தலையெலாம்பறிக் குஞ்சமண் கையரு, ணிலையினன் மறைத்தான் மறைக்கொண் ணுமே, யலையினர் பொழிலாறை வடதளி, நிலையினனடியே நினைந் துய்மினே'' என்னுந் திருப்பதிகம் பாடி, சின்னாள் அங்குத்தங்கி னர். பின் அவ்விடத்தினின்றும் நீங்கித்திருவானைக்கா, திரு வெறும்பியூர், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, திருப்பராய்த் துறை யென்னும் பதிகளைப் பணிந்து கொண்டு திருப்பைஞ் ஞலியை நோக்கிச் சென்றார். செல்லும் நெறியிலே பசியினாலும்நீர் வேட்கையினாலும் மிகவும் வருந்தி வாடினர். வாடியும் மனம் அலையாமற் செல்லா நிற்க, சிவபெருமான் அவருடைய துன்பத் தைப்போக்கும் பொருட்டு வழியிலே ஒரு சோலையையும் பொய்கை யையும் உண்டாக்கி மறையவர் வடிவம் கொண்டு பொதிசோறு வைத்துக் கொண்டிருந்தார். வாகீசர் தமக்கருகில் வந்த உடனே அம்மறையவர் அவரை நோக்கி, ''நீர் வழிநடந்து மிகவும் இளைத் துப்போய் விட்டீர். என்னிடத்தில் பொதிசோறு இருக்கின்றது. அதனையுண்டு இந்தக்குளத்திலே நீரருந்தி உமது இளைப்பினை நீக்கிக்கொண்டு பின் செல்வீராக'' என்று சொல்லிப் பொதி சோற்றைக் கொடுத்தருளினர். நாயனர் ''இதுவும் இறைவ னுடைய இன்னருட் செயலே போலும்'' என்று கருதி அதனை வாங்கி உண்டு நீரருந்தி இளைப்புநீங்கியிருந்தனர். வேதியர் அவரைநோக்கி, ''நீர் எங்கே போகின்றீர்'' என்று கேட்க நாயனர், ''நான் திருப்பைஞ்ஞலிக்குப் போகின்றேன்'' என்று சொல்லிப்போயினர். அப்பார்ப்பனர் ''நானும் அங்கேதான் போகின்றேன்'' என்று பகர்ந்து அவருடனே கூடிச்சென்று

திருப்பைஞ்ஞலியை யணுகிய உடனே மறைந்தருளினுர். நாயனுர் அதுகண்டு திருவருளை வியந்து கண்ணீர் பொழிந்து அழுது வீழ்ந்து வணங்கி எழுந்து திருக்கோயிலுட் சென்று பைஞ்ஞிலி நாதனைப் பணிந்து திருப்பதிகம் பாடி, உழவாரத்தொண்டு செய்து கொண்டிருந்தார். சின்னுட் சென்றபின் அவ்விடத்தினின்றும் நீங்கி திருவண்ணுமலைக்குச் சென்று உண்ணுமுலைமணுளனை வணங்கிக் கொண்டு தொண்டைநாட்டை யடைந்து திருவோத் தூரைப்பணிந்து ஏத்திக் காஞ்சிபுரத்திற் சென்று திருவேகம்பம், திருக்கச்சிமயானம், திருமேற்றளி, திருமாற்பேறு என்னும் திருப் பதிகளை வணங்கிக்கொண்டு சில நாள் அங்கிருந்தனர். பின் அங்குநின்றும் புறப்பட்டுத் திருக்கழுக்குன்று, திருமயிலாப்பூர், திருவொற்றியூர், திருப்பாசூர், திருவாலங்காடு, திருக்காரிகரை யென்னும் பதிகளைப்பணிந்து கொண்டு தென்கைலாயமாகிய திருக்காளத்தி மலையையடைந்தார். அங்கே உள்ள பொன்முகலி யிலே நீராடி மலையின் மேலேறிக்காளத்தி நாதனைக்கண்டு வணங் கித் திருப்பதிகம்பாடி அவருடைய வலப்பக்கத்திலே நிற்கின்ற கண்ணப்பருடைய திருவடிகளைப் பணிந்து சின்னுள் அப்பதி யிலே வசித்தருளினுர்.

பின் உத்தரகைலாயத்திலே சிவபெருமான் வீற்றிருக் கின்ற திருக்கோலத்தைக் காணவிரும்பித் திருக்காளத்தி மலை யினின்றும் நீங்கி வடதிசையில் இருக்கின்ற திருப்பருபதத்தை யடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடி அங்கிருந்து சென்று காசியை வணங்கிக்கொண்டு அதற்கு அப்பால் இருக்கின்ற கற் கள் நிறைந்த காட்டின் வழியில் இலைகிழங்கு பழங்கள் இவற்றை யுண்ணுதலையும் ஒழித்து வடகைலாசத்தை வணங்க வேண்டும் என்னும் பேராசையால் இராப்பகல் விடாது நடந்தனர். அதனுல் அவருடைய திருவடிகள் பரடுவரைக்கும் தேய்ந்து விட்டன. அங்ஙனம் தேய்ந்தும் அவா மேலீட்டினுல் தமது இரண்டு கை களையும் ஆதரவாகக்கொண்டுத் தாவித்தாவிச் சென்றனர். அந் தக் கைகளும் மணிக்கட்டு அசைந்து கரைந்து சிதைந்தன. பின்னும் அவ்வவாவானது சிறிதும் குன்றுதலின்றி மேலிடுவதால் கொடிய நெருப்பினையொத்த வெம்மைமிகுந்த பருக்கைகற்கள் நிறைந்த வழியின்கண் மார்பினுல் நகர்ந்து நகர்ந்து செல்வாராயி

னர். மார்பும் தசைகள் எல்லாம் நைந்து நைந்து சிந்த என்புகளும் முரிந்தன. பின் புரண்டு புரண்டு போவாராயினர். அதனால் அருமைத் திருமேனி முழுவதும் அரைய நாயனார் திருக்கைலாய மலையினிடத்துப் பதிந்த அன்பின் உறுதிப்பாட்டினால் மெல்ல மெல்ல நகர்தற்கு முயன்றும் கூடாமையால் யாதொரு செயலுக்கும் வலியற்றவராய் வழியிலே கிடந்தருளினர். அப்பொழுது ஆண்டவன் அப்பெருமானை மீண்டும் தமிழ்நாட்டுக்கு அனுப்பி அந்நாட்டில் உள்ளோர் உய்யும் பொருட்டுத் தமிழ்மறையாகிய தேவாரத்தைப் பாடுவித்தற்கும் அந்நாயனார் கருத்தையும் முட்டின்றி முடித்தற்கும் திருவுளம் கொண்டு அவ்விடத்தில் ஒரு பொய்கையை யுண்டாக்கி ஒரு முனிவர் வடிவம் கொண்டு அப்பெரியாருக்கு முன்வந்து நின்று, "ஐயா! நீர் அங்கங்களெல்லாம் அழிந்துபோகமிகுந்த துன்பத்தோடும் இந்தக்கொடிய காட்டின்கண் எதன் பொருட்டு வந்தீர்" என்று கேட்டனர். அப்பெருமான் மரவுரி ஆடையையும் பூநூலையும் சடைமுடியையும் திருநீற்றையுமுடைய அந்த முனிவரைக் கண்டபோதே பேசுதற்குச் சிறிது வன்மையுண்டாக அவரைநோக்கி, "முனிவரே! நமது கடவுளாகிய சிவபெருமான் வடகைலாயத்திலே உமாதேவியோடு வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைக்கண்டு வணங்கும் பொருட்டு விரும்பி வந்தேன்" என்றார். அதற்கு அம்முனிவர், தேவர்களாலும் அடையமுடியாத திருக்கைலாயமலை மக்களால் அடையப்படுதற்கு எளிதோ? நீர் இந்தக் கொடுங்காட்டிலே வந்து என்செய்தீர். இனித்திரும்பிவிடுதலே சிறப்பாகும்" என்றனர். உடனே நாயனார் "திருக்கைலாய மலையில் இருக்கின்ற சிவபெருமானுடைய திருக்கோலத்தைக் கண்டு வணங்கினாலன்றி என்றேனும் ஒருநாளில் அழிந்துவிடக்கூடிய இவ்வுடலைப் பொருளாகக்கருதி யான்திரும்பேன்" என்று மறுத்தனர். ஆண்டவன் அவருடைய உறுதியைக்கண்டு மறைந்தருளிவானின்கண் அசரீரியாகி நின்று, "நாவுக்கரசனே! எழுந்திரு" என்றார். உடனே அப்பெருமான் அழிந்த உறுப்புக்களெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுச் சிறந்த திருவுருவோடும் எழுந்து நின்று,

"அண்ணலேயெனை யாண்டுகொண்டருளிய வமுதே
விண்ணிலே மறைந்தருள் புரிவேதநாயகனே
கண்ணினூற்றிருக் கையிலையிலிருந்த நின்கோலம்
நண்ணி நான் றொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்"

அங்ஙனம் பணிந்தகாலை ஆண்டவன், "அன்பனே நீ இத் தடாகத்திலே மூழ்கித் திருவையாற்றையடைந்து நமது கைலாயத் திருக்கோலத்தை அங்குக்கண்டு வணங்குவாயாக" எனப்பணித் தருளினர்.

தாண்டகவேந்தர் அப்பணிமேற் கொண்டு திருவைந் தெழுத்தை ஓதி அத்தடாகத்திலே மூழ்கி, திருவையாற்றிலிருக் கின்ற ஒரு வாவியின் கண்தோன்றிக்கரையிலேறி வழியிலே அத் திருப்பதியிலுள்ள நிலையியற் பொருளும் இயங்கியற் பொருளுமா கிய அனைத்தும் தங்கள் தங்கள் துணையோடும் விளங்குதலைக் கண்டு அவைகளைச் சிவமும் சக்தியுமாகப் பார்த்துப் பணிந்து கொண்டு திருக்கோவிலுக்கு முன்னே சென்றனர். அவ்வாலயம் திருக்கைலாய மலையாக அதினிடத்தே மறைகளும் ஆகமங்களும் இருபக்கத்திலும் வாழ்த்தவும் தும்புரு, நாரதர் என்னும் இரண்டு இசைவாணர்களும் யாழ்வாசிக்கவும், நான்முகன், திருமால் இருவரும், ஆடையை ஒதுக்கி வாயைக் கையினலே பொத்திக் கொண்டு ஒதுங்கி நின்று தத்தம் குறைகளைக் கூறுநிற்கவும் சிவகணங்கள் வாயில் தோறும் நின்று காக்கவும் தேவர்கள், சித் தர்கள் முதலிய கணத்தவர்கள் துதிக்கவும், திருநந்திதேவர் கையிலே பிரம்பைப்பிடித்துக் கொண்டு பணிசெய்யவும் கருணைக் கடலாகிய சிவபெருமான் ஓர் சிறந்த ஆசனத்தின் மேல் அள விறந்த கோடி ஞாயிற்றின் ஒளியோடு உமாதேவியாருடன் வீற் றிருந்தருளினர். அப்படியிருத்தலை நாயனர் கண்டமாத்திரத்தில் வீழ்ந்து வணங்கி உரைதடுமாற மயிர்சிலிர்ப்ப ஆநந்த அருவி சொரிய, கரையற்ற அருட்பெருங்கடலிலே அன்புநதியானது ஈர்த் துச்செல்ல அதில் மிதந்து கொண்டே சென்று தெவிட்டுதல் இல்லாத அளவிறந்த சிவானந்தம் என்னும் அமிர்தத்தைப்பருகித் திருமுன் ஆநந்தக் கூத்தாடித்தாம் வழியிற் கண்டகாட்சியை "மாதர்பிறைகண்ணியானை" என்னும் பதிகத்தாற்பாடி, பல திருத்தாண்டகங்களும் பாடியருளினர். திருக்கைலாய பதியாகிய

சிவபெருமான் தமது கோலத்தை இவ்வாறு அன்பருக்குக் காட்டியருளிப்பின் மறைத்துவிட அந்நாயனுர் அகம் வருந்திப் பின்னர் ஒருவாறு தேறித் திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு அத்திருப்பதியில் இருந்தனர்.

## 9. என்று மழியா இன்பம் அடைதல்

சின்னுட் சென்றபின் திருவையாற்றினின்றும் நீங்கித் திருநெய்த்தானம், திருமழபாடி, முதலிய பதிகளைப்பணிந்து கொண்டு திருப்பூந்துருத்தியடைந்து திரு நீல கண் டனை வ ண ங் கி த் திருப்பதிகங்கள் பாடி அ ங் கே வாளையளாவிய ஒரு திருமடம் கட்டுவித்து, பல்வகைத் தாண்டகம், தனித்திருத் தாண்டகம், அடைவுத் திருத்தாண்டகம், திருவங்கமாலை முதலிய திருப்பதிகங்களைப் பாடிக்கொண்டிருந்தார். இருக்கும் பொழுது பாண்டிநாட்டிற் சென்று சமணர்களை வாதில் வென்று சைவத்தை நிலைநிறுத்திப் பாண்டியனது கூனை நிமிர்த்தியருளிய பிள்ளையார் அந்நாட்டினின்றும் நீங்கி, சோழநாட்டையடைந்து திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் இருத்தலைக் கேள்வியுற்று அவரைக்காணுதல் வேண்டும் என்னும் அவா ஈர்ப்ப அப்பதிக்கருகிலே வந்தருளினுர். அதனையறிந்த வாகீசர் ம ன ம கி ழ் ந் து அவரை எதிர்கொண்டு வணங்கும்படி சென்று திருச்சின்னத்தின் ஒலியைக் கேட்டு அவரைக்காணுதற் பொருட்டு வந்து சூழ்ந்த அடியார்களுடைய நெருக்கத்தினுலே தம்மை ஒருவரும் இன்னுர் என்று அறியாதபடி உட்புகுந்து அவர் ஏறிவரும் முத்துச்சிவிகையைத் தாங்கி வருவாரோடு தாமும் ஒருவராய்த் தாங்கிவந்தார்.

"திருஞான முனிவரா சிருந்ததிருப் பூந்துருத்தி
கருகாக வெழுந்தருளி யெங்குற்ருரப்பரென
வுருகா நின்றும் மடியேனும் மடிகடாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றேனென்ருர்"

"பிள்ளையாரதி கேளாப்பெருகுவிரை வுடனிழிந்தே
யுள்ளமிகு பதைப் பெய்தியுடைய வரசினைவணங்க
வள்ளலார் வாகீசரவர் வணங்காமுன் வணங்கத்
தெள்ளுமான் மறிக்கரத்தார் தொண்ட ரெலாந் தொழுதார்த்தார்"

பிள்ளையார் வாகீசரோடும் திருப்பூந்துருத்தியிற் சென்று சிவபெருமானை வணங்கிக்கொண்டு இருந்தகாலை, தாம் பாண்டி நாட்டிற்சென்று சமணர்களை வாதில் வென்றதையும் பாண்டிய னுடைய கூனை நிமிர்த்ததையும் அந்நாடெங்கும் திருநீற்றை வளர்த்ததையும் வளவர்கோன் பாவையாரும் பாண்டிமாதேவி யாருமாகிய மங்கையர்க்கரசியார், மந்திரியாராகிய குலச்சிறை நாயனர் என்னும் இவ்விருவருடைய பெருமையையும் நாவிற் கரசிற்கு நவின்றருளினர். வாகீசர், தாம் தொண்டை நாட்டிற் குச் சென்று அங்குள்ள திருப்பதிகளை வணங்கியதைப் பிள்ளை யாருக்குப் புகன்றருளினர்.

பிள்ளையார் தொண்டை நாட்டிற்குச் செல்ல விரும்பித் திருப்பூந்துருத்தியின்றும் புறப்பட்டனர். வாக்கின்வேந்தர் பாண்டிய நாடுசெல்ல விரும்பிப்புறப்பட்டு அந்நாட்டையடைந்து திருப்பாத்தூரைத்தரிசித்துக் கொண்டு மதுரையிற் சென்று சோம சுந்தரக்கடவுளைத் தொழுது திருப்பதிகம் பாடி அரசரும் அரசியா ரும் அமைச்சரும் அளவற்ற அன்புடன் வணங்கித்துதிக்கச் சின்னுள் அங்குத்தங்கியிருத்தனர். பின் மதுரையின் நீங்கி திருப் பூவனம், இராமேச்சரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலா கிய பதிகளைப் பணிந்து கொண்டு சோழநாட்டிற்குத் திரும்பி வந்து திருப்புகலூரை யடைந்தார்.

அவ்வூரின்கண் நாள்தோறும் பரமனைப்பணிந்து கொண்டு திருவாயிலிலே கைத்தொண்டு செய்து கொண்டிருந்தனர். அந் நாட்களிலே நின்றதிருத்தாண்டகம், தனித்திருத்தாண்டகம், க்ஷேத்திரக்கோவை, குறைந்த திருநேரிசை, தனித்திருநேரிசை, நினைந்த திருநேரிசை ஆருயிர்த்திருவிருத்தம், தசைபுராணத் தடைவு, பாபநாசப்பதிகம், சரக்கறைத்திருவிருத்தம் முதலிய திருப்பதிகங்களைப் பாடினர். ஆண்டவன் அவரது உறுதியை அனைவருக்குங்காட்டுதற் பொருட்டுத்திருவுளம் கொண்டு அவர் திருமுன்றிலிலே கைத்தொண்டு செய்யும் பொழுது உழவாரம் நுழைந்த இடங்களெங்கும் பொன்னும் மணிகளும் ஒளிவீசிக் கிடக்கும்படிஅருள்செய்தார். ஓடும் செம்பொனும் ஒக்கவேநோக் கும் அப்பெரியார் அவைகளை அங்கேகிடக்கின்ற பருக்கைக்கற்க ளோடு சமமாக எண்ணி உழவாரத்தில் ஏந்திக் குளத்தில் விழு

மாறு எறிந்து விட்டார்.

பின்பு சிவபெருமான் திருவருளினுல் மேல் உலகத்தினின் றும் அரம்பையர்கள் இறங்கிவந்து நாயனுர் திருமுன் நின்று இசைபாடியும் கூத்தாடியும் அவர்மேல்மலர்களை எறிந்தும் அவரை அணைவோர்களைப் போல நெருங்கியும் கூந்தல் அவிழ இடை யொசிய ஓடியும் திரும்பியும் ஆடைஅசைய நின்றும் அவரை மயக்குதற்கு வேண்டிய முயற்சிக்களைச் செய்தனர். செய்தும் இறைவனுடைய திருவருள் வயப்பட்டு ஒழுகின்ற அப்பெரியார் தம்மனநிலை சிறிதும் மாறுபடாவண்ணம் தாம்செய்யும் திருப் பணியிலே உறுதி கொண்ட உள்ளத்தவராய் இருவினை முதலிய வைகளை முன்னிலைப்படுத்தி, “நான் திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும் சிவபிரானுக்கு அடிமையானேன். ஆதலால் உங்க ளால் நான் ஆட்டப்படமாட்டேன். நீங்கள் என்னை அலைத் தலிற் பயனில்லை. சென்றுவிடுவீர்களாக” என்னுங்கருத்தால் “பொய்ம் மாயப்பெருங்கடலில்” என்னும் திருத்தாண்டகத்தைப் பாடினுர். அவ்வரம்பையர்கள் தங்கள் எண்ணம் முற்றுப் பெரு மையால் அப்பெரியாரைப் பணிந்து போய்விட்டனர். இந்நிலை மையை அனைவரும் அறிந்து நாயனுரைத்துதிப்பாராயினர்.

திருநாவுக்கரசுகள் “புகலூரர் என்னை இனித்தன் சேவடிக் கீழ் இருத்துவார்” என்று எழுகின்ற மெய்யறிவினுல் பல திரு விருத்தங்களைப்பாடி ஒருசித்திரைத்திங்கள் சதய நாளில் “எண் ணுகேன் என்சொல்லி எண்ணுகேனே” என்று திருத்தாண்டக மெடுத்துத் திருப்பாட்டின் இறுதி தோறும் “உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே” என்று பாடியிறைவனுடைய திருவடி நீழலில் இரண்டறக் கலந்து இன்புற்றுர்.



# 4. திருநாவுக்கரசர் சரித்திர ஆராய்ச்சி

## 1. பெயர், ஊர், மரபு.

திருஞானசம்பந்தர் தாய்தந்தையர் பெயர் சேக்கிழார் பெரியபுராணத்திற் கூறப்பட்டதிற்கு முன் உள்ள நூல்களில் கிடைக்காதது போலவே திருநாவுக்கரசரின் தாய்தந்தையர் பெயரும் முன்னூல்களிற் காண்பதற்கில்லை. இவருக்குப்பிள்ளைத் திருநாமம் மருள்நீக்கியார் எனக் கூறப்படுகின்றது. இதற்கும் பெரியபுராணத்திற் கூறப்பட்ட **சான்றேயன்றி** வேறு ஆதரவு இல்லை. இவர் இயற்றிய திருத்தாண்டகத்தின்கண், 'மறப்படுமென்சிந்தை மருள் நீக்கியான்காண் ''என்னும் தொடர் ஒன்று காணப்படுகின்றது. இவர் பிறந்தருளியவூர் திருவாமூர் என்பது திருத்தொண்டர் திருவந்தாதியிற் 'ஆமுரில் நாவுக்கரசெனும் தூமணியே' எனவும் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலையில், 'சிலைமாடந்திகழ் புகழாமூர்உறை திருநாவுக்கரசென்போரே' எனவும் நம்பியாண்டார் நம்பிகள் கூறியதனல் வலியுறுத்தப்படுதல் காண்க. இவர் வேளாளர் மரபிற்றோன்றினர் என்பதற்கும் பெரியபுராணத்திற்கு முற்பட்ட சான்றுகள் இல்லை. ஆனல் இப்பெரியார் இயற்றியருளிய தேவாரத்தின் கண்,

> *''மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும் வித்தை வித்திப்*
> *பொய்ம்மையாங்களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*
> *தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்*
> *செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே''*

என்னும் ஒரு திருப்பாட்டுக் காணப்படுகின்றது. அன்றியும் 'எழுதுபாவை' யென்று தொடங்கும் திருக்குறுந்தொகைத் திருப்பாட்டின் கண், ''உழதசால்வழி யேயுழுவான்' என்னும் பழமொழியும் காணப்படுகின்றது. இப்பழமொழி உழவர்குழு வழக்காதலாலும், 'மெய்ம்மையாம் உழவை' என்னும் திருப்பாட்டு முழுவதிலும் உழவைப்பற்றியசெய்தி இருத்தலானும் இவர்சைவவேளாள மரபினர் என ஊகிப்பதற்கிடமுண்டு.

## 2. சமண்சமயம்புக்குச் சைவசமயம் சார்தல்.

தாண்டகவேந்தர் தாம்பிறந்த சைவசமயத்தினின்றும் சமணசமயம் புகுந்து மீண்டும் சூலைநோய் காரணமாகச்சைவசமயம் சார்ந்ததற்கு நிறைய அகச்சான்றுகள் உள. அவற்றுட் சில:

"கூற்றாயின வாறு விலக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியே
னேற்றா யடிக்கேயிரவும்பகலும் பிரியாது வணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென் வயிற்றினகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட
வாற்றேனடி யேனதிகைக்கெடில வீரட்டானத்துறை யம்மானே"

என்ற முதற்பாட்டையுடைய பதிகம் முழுதும்.

"அமணரோடே காதலித்தாய் கட்ட நோய்
பிணிதீர்த்தாய் கலந்தருளிப் போதலித்தாய்"

"திருந்தாவமணர்தந் தீநெறிப் பட்டுத்திகைத்து முத்தி
தருந்தாளிணைக்கே சரண்புகுந்தேன்"

"தக்கார்வ மெய்திச்சமண்டவிர்ந்துன் றன்
சரண்புகுந்தேன்"

"ஏமமேதுமிலாவமணே தலர் பாவகாரிகள் சொல்லலைப்பட்டு நான்
தேவதேவன் திருநெறியாகிய பூவணூர்புகு தப்பெற்ற நாளின்றே"

"எண்ணில் சமண்தீர்த் தென்னையாட் கொண்டார் போலும்"
"குண்டரொடு பிரித்தென்னை யாட்கொண்டார் போலும்"

என்பன.

"பல்லுரைச் சமணரோடே பல பல காலமெல்லாஞ்
சொல்லிய செலவு செய்தேன்"

"போற்றாதே யாற்றநாள் போக்கினேனே" எனவரூஉம் இவைபோன்றன பல அவர் பன்னாள் வரையுஞ் சமண் சமய மிருந்ததை நினைந்து வருந்துவதைக் குறிப்பன.

"முயல் விட்டுக்காக்கை பின் போனவாறே"
"கனியிருக்கக்காய் கவர்ந்தகள்வனேனே" என்பன போன்றவை அவருக்கு இயல்பாக உள்ளது சைவசமயமே என்பதைவலி

யுறுத்துவன.

இவருக்குச் சமண்சமயத்தில் இட்டபெயர் தருமசேனர் என்று கூறப்படுகின்றது. இதற்கு அகச்சான்று இன்று.

சூலை நோய்நீங்க, "கூற்ருயின" என்று தொடங்கும் பதிகம்பாடிய முடிவில் இறைவனுல் அருளப்பட்ட பெயர் "திருநாவுக்கரசர்" என்பதாகும். இதற்கும் அகச்சான்றுஇல்லை, ஆனுல் நாவுக்கரசர் என்னும் ஓர்பெயர் வருவதானுல் அது அந் நாவின் புலமையையும் வன்மையையும் உணர்ந்த பின்னன்றி முன்னர்வாராது நமது சொல்வேந்தரின் நாவன்மை அவர் ஆண்டவனை நோக்கி, "கூற்ருயினவாறு" என்றுபாடிய பின்நன்றி முன்னர்த் தெரியக்காரணமில்லை. பாடிய பின்னர்த்தான் இப்பெயர் ஆண்டவனுல் அசரீரியாக இடப்பட்டது என்பதை,

"மேவுற்றவிவ் வேலையினீடிய சீர்வீரட்டம மர்ந்தபிரானருளாற்
பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப்பதிகத் தொடை
பாடிய பான்மையினு
நாவுக்கர சென்றுலகேழினு நின்னன்னும நயப்புறமன்னுகவென்
றியாவர்க்கும் வியப்புற மஞ்சுறை வானிடையே யொருவாய்மை
யெழுந்ததுவே"

என்னும் பெரியபுராணச் செய்யுளால் அறியலாம்.

## 3. சமணர்கள் செய்த கொடுமையினின்றும் தப்புதல்

சமணமதத்தை மேற்கொண்ட மகேந்திரவர்மனென்னும் பல்லவ மன்னன் வாகீசப் பெருந்தகையாரை அழைத்துவரும் பொருட்டு அனுப்பிய அமைச்சருக்குத் திருநாவுக்கரசர்,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம் நரகத்தில்
இடர்ப்படோம் நடலையில்லோமேமாப்போம் பிணியறியோம்
பணிவோமல்லோ மின்பமேயெந் நாளுந்துன்பமில்லை தாமார்க்
குங்குடியல்லாத் தன்மையான சங்கரனற்சங்க வெண்குழையோர்
காதிற், கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்மலர்ச்
சேவடியிணையே குறுகினோமே"

எனச்செப்பியருளியதாகத் தெரிகிறது. இதற்கு மறுமாற்றத்திருத்தாண்டகம் எனப்பெயர் வழங்குவதும் அந்நிகழ்ச்சியை வலியுறுத்தும்,

பின்னர், அவ்வமைச்சர் வேண்டுகோட்கிணங்கி அடிகள் செல்லா நிற்க அமணர்கள் சூழ்ச்சியுட் பட்ட பல்லவமன்னன் அவ்வமணர்கள் சொல்லியவாறே, நாவுக்கரசரை நீற்றறையில் இட்டனன். அது போழ்து, 'மாசில்வீணையும்' என்றபதிகம் பாடியதாகப்பலர் கூறியும் எழுதியும் வருகின்றுர்கள். ஆங்குச் சேக்கிழார் கூறிய கூற்றை உய்த்து உணரின் அம்முடிவுக்குவரவியலாது. அவர் கூறுவன.

*'' ஆண்டவர சதனகத்துளணைந்த பொழுதம் பலத்துத்*
*தாண்டவமுன் புரிந்தருளுந்தாணிழலைத் தலைக்கொண்டே*
*யீண்டுவருத்தயருளதோ வீசனடியார்க் கென்று*
*மூண்டமனநேர் நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார் ''*

*'' வெய்ய நீற்றறையதுதான் வீங்கிளவேனிற் பருவந்*
*தைவருதண்டென்றலணை தண் கழுநீர்த்தடம் போன்று*
*மொய்யொளி வெண்ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதா*
*யையர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே ''*

*'' மாசின்மதி நீடுபுனன் மன்னிவளர் சென்னியனைப்*
*பேசவினி யானையுல காளுடைய பிஞ்ஞகனை*
*யீசனையெம் பெருமானை வெவ்வுயிருந் தருவானை*
*யாசையிலா ராவமுதை யடிவணங்கி யினியிருந்தார்*

என்பனவாம். இப்பாட்டுக்களைக் கூர்ந்து நோக்கின் அந்நீற்றறை தமக்கு இருந்தவாற்றை நினைந்து பின்னர்க் கூறியருளினுர் திருநாவுக்கரசர் எனக்கருதலாகுமேயன்றி அப்பொழுது பாடினுர் எனக்கொள்ளுதல் அமையாதென்க. என்னை? பின்னிகழ்ச்சிகளில், 'சுண்ணவெண் சந்தனச்சாந்து தொடுத்ததிருப்பதிகத்தை மண்ணுலகுய்ய வெடுத்து மகிழ்வுடனே பாடுகின்றுர்' எனவும், 'சொற்றுணை வேதியன் என்னும் தூய்மொழி நற்றமிழ்மாலையா நமச்சிவாயவென், றற்றமுன் காக்குமஞ்செழுத்தை யன்பொடு பற்றிய உணர்விஞற் பதிகம் பாடினுர்' எனவும்,

"ஈன்ருளுமாய் எனக்கெந்தையுமாகி எனவெடுத்துத், தோன்ருத் துணையாய் இருந்தனன் தன் அடியோங்கட்கென்று, வான்ருழ் புனற்கங்கை வாழ்சடையானை மற்றெவ்வுயிர்க்கும், சான்ருமொரு வனைத் தண்டமிழ் மாலைகள் சாற்றினரே' எனவும் சேக்கிழார் கூறியருளுதலால் என்க.

பின்னர், அம்மன்னன் அமணர்கள் சொற்படிதனது மதங் கொண்ட யானையை விடுத்து அடிகளுக்குத் தீங்கிழைத்தான் என்பதாகும். அதுபோழ்துபாடிய "சுண்ணவெண் சந்தனச்சாந் தும்" என்று தொடங்கும் பதிகத்தின் இறுதியில், 'அஞ்சுவதியா தொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை' என்னும் தொடரும் அப் பதிகத்தின் ஒன்பதாவது பாட்டில் வரும், 'வேழமுரித்த நிலையும்' என்னும் தொடரும் அந்நிகழ்ச்சியைக் குறிப்பால் உணர்த்துவ தோடு, 'தலைவனுகிய ஈசன்றமர்களைக் கொலைசெயானைதான் கொன்றடுகிற்குமே" என்னும் அடிகள் வாக்கும் அதனை நன்கு ணர்த்துதல் காண்க.

பின்னர், நஞ்சினைக் கலந்த பாற்சோற்றை அம்மன்னன் உண்பித்தான் என்பது ஆகும். இதற்கு, 'வஞ்சனைப்பாற் சோருக்கி வழக்கிலா வமணர்தந்த நஞ்சமுதாக்கு வித்தார். நனிபள்ளி அடிகளாரே' என்னும் நாவுக்கரசர் நற்றமிழ் மறையே நல்லதோர் சான்ருதல் காண்க. பின்னர்தான் சொல்வேந்தரைக் கல்லொடு பிணித்துக்கொண்டு போய்க்கடலின் கண்ணே தள்ளி ஞன் மன்னனென்பதாகும். அது போழ்து பாடியது, 'சொற்றுணை வேதியன் சோதிவானவன், பொற்றுணை திருந்தடி பொருந்தக்கை தொழ, கற்றுணை பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும், நற்றுணையா வது நமச்சிவாயவே" என்றமுதற்பாட்டினையுடைய நமச்சிவாயப் பதிகமாகும்என்பதனைச் சேக்கிழார் திருவாக்கால் அறியலாம்.

"அற்றன்று; அடிகள் திருவைந் தெழுத்தின் திருவருட் பெருமையைக் கூறுதற்கு இங்ஙனம் பாடினுரன்றி தம்மாட்டு நிகழ்ந்ததோர் செய்தியைப்பாடியதன்று இஃது. அவ்வுண்மை கற் றுணை பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும்' என்றதில் உள்ள உம் மையாகவே உணர்ந்து கொள்ளலாம் பிற" வெனின் அன்று அன்று' அடிகள் திருப்பாதிரிப் புலியூரிற் கரையேறிய வுடனே

பாடிய 'ஈன்ருளுமாய்' என்னும் பதிகத்தில் 'தோன்ருத் துணையாய் இருந்தனன்' என்றும், 'அலைகடல் மூடினுங் கண்டேன் புகல் நமக்கு' என்றும் வரும் திருவாக்கு அந்நிகழ்ச்சிக்குச் சான்று தருதல் காண்க. "அத்தொடர்களும் முன்கூறியவாறே யாண்டவன் அருட்பெருமையைத் தெரிப்பனவாகும்' எனக்கொள்ளலாகாதோவெனின். திருவையாற்றுத் திருவிருத்தத்தில் 'நெடுநீரில் நின்றேற நினைந்தருளி உருக்கியவா' எனவருந்தொடர் அவ்வையத்தினை ஒழித்தல் காண்க. இனி 'நெடுநீரென்பது கடலன்று ஏதேனும் நீர் நிறைந்த ஓர் சிறுபள்ளத்தின் கண் திருநாவுக்கரசர் வீழ்ந்திருக்கலாம். பின்னர் கைகால்களைச் சிறிது வீசித்தமது முயற்சியாற்கரை யேறியவர் அஃது ஆண்டவன் அருளால் விளைந்ததெனக் கருதியிவ்வாறு கூறியிருத்தலாகாதோ?' எனின் நன்று கடாயினுய். நின்வாய் மூடுமாறு ஈண்டு ஓர் சான்று தருகின்றேன் காண்பாயாக; அஃது, 'கல்லினோடெனைப் பூட்டிஅமண் கையர் ஒல்லைநீர் புகநூக்க வென்வாக்கினால் நெல்லு நீர்வயல் நீலக்குடியான் நல்ல நாம நவிற்றியுய்ந்தேனன்றே' என்பதாகும் இத்திருப்பாட்டு சமணர்கள் நாவுக்கரசரைக் கல்லொடு பூட்டிக் கடலிற் போட்டதையும் அதனையே புணையாகக்கொண்டு அடிகள் கரையேறியதையும் விளக்குதற்குப் போதிய சான்றன்றோ? இறைவனது நல்லநாமம் 'நமச்சிவாய' என்பதாதலாலும் அந்நமச்சிவாயப்பதிகத்தில் 'கற்றுணைபூட்டி' என்னும் குறிப்புப்போதருதலாலும் 'சொற்றுணை வேதியன்' என்னும் பதிகமே ஆண்டுப்பாடியிருத்தல்கூடும் எனத்துணிந்தனர் சேக்கிழார் பெருந்தகையார்.

"மின்னுரு மூவிலைச் சூலமென்மேற்பொறி' என்னும் தொடர் அடிகள் சூலக்குறியைத்தாம் வேண்டிநின்றமையும் அதனையும் இடபக்குறியையும் ஆண்டவன் அருளியதையும் குறிப்பதாகும்.

ஆண்டவன் அருட்கழலை இவர் திருமுடிமேல் திருநல்லூரில் வைத்தமைக்கு அவ்வூர்த்திருத்தாண்டகமாகிய,

*"நினைந்துருகுமடியாரை நையவைத்தார் நில்லாமே தீவினை கணீங்கவைத்தார்,*
*சினந்திருகு களிற்றுரிவைப் போர்வைவைத்தார் செழுமதியின் றளிர்வைத்தார் சிறந்துவானோர்*

இனந்துருவி மணிமகுடத் தேறத்துற்றவின மலர்கள்
போதவிழ்ந்து மதுவாய் பில்கி
கனைத்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார் நல்லூரெம்
பெருமானார் நல்லவாறே''

என்ற முதற்பாட்டினையுடைய பதிகமுழுவதும், 'தன்னுடைய திருவடியென்தலைமேல் வைத்ததீங்கரும்பை' என்று அடிகள் பிறண்டும் கூறும் திருவாக்கும் தக்கசான்றாகு மென்க.

அப்பூதியடிகளின் புதல்வனை எழுப்பியதற்கு அகச்சான்று யாதுமில்லை.

திருப்பழையாறை வடதளியிலுள்ள சிவபெருமானைச்சமணர்கள் மறைத்து வைத்திருந்தமையும் பின்அது நீங்கப்பெற்றுத் தாம் தரிசித்தமையும் அவ்வூர்ப் பதிகமாகிய, 'தலையெலாம் பறிக்கும் சமண் கையருள் நிலையினால் மறைத்தால் மறைக்கொண்ணுமோ? என்னும் தொடர்களால் விளக்கியருளினமை காண்க.

## 4 கைலாயக் காட்சியும் வீடுபேறும்

வாகீசப் பெருந்தகையார் திருக்கயிலாயக்காட்சியைத் திருவையாற்றிற் கண்டமை, 'மாதர் பிறைக்கண்ணியானை' என்று தொடங்குந் திருப்பதிகத்தின் குறிப்பால் அறியக்கிடக்கின்றதேயன்றி வேறு அகச்சான்று யாதுமில்லை.

இனி இவர் திருப்புகலூரில் உழவாரத்திருப்பணி செய்யுங்காலை பல சோதனைகள் செய்யப்பட்டமை, 'பொய்மாயப் பெருங்கடல்' என்று தொடங்கும் திருத்தாண்டகப் பதிகத்தானும் நம்பியாண்டார் நம்பிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவேகாதசமாலையிற் கூறிய,

'' திருநாவுக் கரசடியவர் நாடற்கதிங்கீ தெளிதேனைத்தினிய
சொன்மடவாருர்ப் பசிமுதல்
வருவானத்தரிவையர் நடமாடிச் சில சில வசியாகச்
சொலுபரவை திகளாகக் கருதிமெய்
யுருஞானத்திரண்மன முருகாநெக்கழுது கண்ணுழவாரப்
படைவகயிலுடையான் வைத்தன தமிழ்
குருவாகக்கொடு சிவனடி சூடத்திரிபவர் குறுகார்புக்கிடர்படு
சூடர்யோனிக் குழியிலே''

என்னும் திருப்பாட்டானும் அறியக்கிடக்கின்றது. இறுதியில் திருநாவுக்கரசர் இறைவன் திருவடியாகிய வீடு பேற்றினை யெய்திய செய்தி,

"எண்ணுகேனென் சொல்லியெண்ணுகேனோ வெம்பெருமான்
திருவடியே யெண்ணினல்லாற்,
கண்ணிலேன் மற்றோர்களை கணில்லேன் கழலடியேகை
தொழுது காணினல்லா
லொண்ணுளே யொன்பது வாசல்வைத்தா யொக்கவடைக்
கும் போதுணர மாட்டேன்
புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றேன் பூம்பு
கலூர் மேவிய புண்ணியனே"

என்ற திருப்புகலூர் திருத்தாண்டகப் பதிகமுதற்பாட்டினும், அங்ஙனமே அப்பதிகப்பாட்டின் இறுதிதோறும் வரும் 'உன்னடிக்கே போதுகின்றேன்' என்னும் தொடராலும் அறியப் படுவதொன்றாகும்.

## 5. திருநாவுக்கரசர் காலம்

இவர் ஆறுவது நூற்றாண்டின் பிற்பகுதியிற் றோன்றி ஏழாவது நூற்றாண்டின் முற்பகுதியில் இறைவன் திருவடி நிழலையடைந்தனர். என்பது ஆராய்ச்சியாளர் துணிபு கி. பி. 600 முதல் 629—30 வரை ஆட்சிபுரிந்த மகேந்திரவர்மனென்பவனே இவரை நீற்றறையில் இட்டது முதல் பல துன்பங்களையும் செய்தவன். அவன் மீண்டும் திருநாவுக்கரசர் திருவடியை அடைந்து வணங்கிச்சைவனானனெவும் பின் பாடலிபுரத்திலிருந்த சமணப் பள்ளிகளை இடித்துத் திருவதிகையிற் கோயில் எடுத்தானெனவும் அவன் சிறப்புப்பெயர்களுள் குணபரன் அல்லது குணதரன் என்பதும் ஒன்றாதலின், அத்திருக்கோயிலின் பெயரும் குணதரேஸ்வரம் எனப்பட்டதெனவும் பெரியபுராணங் கூறுகின்றது. இம்மகேந்திரன் சமணமதத்தில் இருந்து சைவசமயம் புக்க உண்மையை அவன் காலத்து ஏற்பட்ட திருச்சிராப்பள்ளி வடமொழிக் கல்வெட்டு ஒன்று வலியுறுத்துகிறது. அதன் பொருளாவது "லிங்கத்தை வழிபடுங்குணபரனென்னும் பெயரோடு கூடிய அரசன் இந்தலிங்கத்தினால் (பெற்ற) விபட்ச விருத்தியில்

இருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டகாலம் நிலைநிற்ப தாக" என்பது 'விபட்சவிருத்தி' சமணமதம்.

இனி இவரும் திருஞானசம்பந்தரும் ஒரேகாலத்தவர் ஆகலின் அவர் காலத்திலிருந்த நாயன்மார்களே இவர்காலத்தி லும் இருந்தனரெனக்கொள்க.

## 6. திருநாவுக்கரசரின் தேவாரத்திற் காணப்படும் நாயன்மார்கள்

அப்பூதியடிகள், சண்டீசர், கோச்செங்கட்சோழர், சாக்கி யர், கண்ணப்பர், கணம்புல்லர், திருஞானசம்பந்தர், அமர்நீதி யார், நமிநந்தியடிகள் என்பார். இவருள் அப்பூதியடிகளை, 'அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்புமப்பூதி, குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய்" என்பதனுலும், சண்டீசரைத் "தழைத் ததோர்" என்று தொடங்கும் திருப்பாவினுலும், பிறவற்ருலும், கோச்செங்கட்சோழரைச், 'சிலந்தியுமானைக்காவில்' என்று தொடங்குவதாலும் மற்றவையாலும், சாக்கியாரைக், 'கல்லினுல் எறிந்து" என்ற முதலையுடையதாலும் பிறவாலும், கண்ணப்ப ரைக்காப்பதோர் வில்லுமம்பும்' என்று தொடங்குவதானும் பிறவா லும் கணம்புல்லரை, 'அணங்கு உமைபாகமாக' என்ற தலைப்புடை யதானும் பிறவானும்அமர்நீதியாரை, 'நாட்கொண்டதாமரை' என்று தொடங்கும் அருட்பாவினுனும் நமிநந்தியாரை 'ஆராய்ந் தடித்தொண்டர்' என்று முதலையுடைய பாவினுலும் அடிகள் கூறி யருளுவது காண்க.

# 5 பொது ஆராய்ச்சி

## 1. இருபெருமக்களும் ஒரேகாலத்தவர்

திருநாவுக்கரசர் திருமறைக்காட்டிலுள்ள திருக்கோயில் திருக்கதவம் திறக்கவும் ஞானசம்பந்தர் அடைக்கவும் பாடிய ஞான்று, 'நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன் எனக் கவன்று துயிலுங்காலை இறைவன் நள்ளிரவில் அவர் முன் தோன்றி, 'திருவாய்மூருக்குவா' என்று அருளிச்செய்தனர். அங் ஙனமேஅரையர் எழுந்தருள ஆண்டவன் அண்மையிற் காட்சி

கொடுப்பான் போற்றேன்றிச் சேய்மையிற் செல்லச்செல்லத் தாமும் பின் தொடர்ந்தனர். அந்நிகழ்ச்சியையறிந்த திருஞான சம்பந்தரும் ஆங்குப்போந்தனர். அதுகாலை ஆண்டவன் மறைந் தருள உடனே திருநாவுக்கரசர், "திறக்கப்பாடிய வென்னினும் செந்தமிழ், உறைப்புப்பாடியடைப்பித்தாருண்ணின்றூர், மறைக்க வல்லரோ தம்மைத்திருவாய்மூர்ப், பிறைக்கொள் செஞ்சடையா ரிவர்பித்தரே" என்பாடியருளினர். இத்திருப்பாட்டொன்றே எம்பெருமக்களாகிய இவ்விருவரும் ஒரே காலத்தவர் என்றெண் ணுவதற்கு அகச்சான்ருக உள்ளது. "பாடியடைப்பித்தார் ஞானசம்பந்தர்தான் எனக்கொள்ளுமாறு யாங்ஙனம்?" எனின் "கதவந்திருக்காப்புக் கொளுங்கருத்தாலே' என அடைக்கப்பாடிய பதிகம் திருஞானசம்பந்தர் தேவாரத்துட் காணப்படுதலால் என்க. திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார்நம்பிகள் திரு நாவுக்கரசு நாயனர் வரலாற்றினை வகைப்படுத்திக் குறிக்குங் கால், 'மணியினை மாமறைக்காட்டு மருந்தினை வண்மொழியாற், றிணியன நீள்கதவம் திறப்பித்தன...... நாவிற்கரையர் பிரான்றன் அருந்தமிழே' எனக் கூறியிருப்பதும் இதற்கு உறு சான்ருதல் காண்க.

## 2. திருவீழிமிழலையிற் படிக்காசு பெற்றமை

இவ் விருபெருமக்களும் திருவீழிமிழலையில் எழுந்தருளி யிருக்குங்காலை வற்கடம் நேர்ந்ததாக; அதனுல் அடியார்க்கு நேர்ந்த பசித்துன்பத்தைப் போக்கியருளுதற்கு ஆண்டவன் அரு ளாற் படிக்காசு பெற்றனர் என்பது வரலாறு. இவ்வுண்மை 'பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு' என்னும் திருநாவுக்கரசின் தேவார அகச்சான்ருலும் இவ்விருவருக்கும் அடுத்த நூற்ருண் டிற் ருேன்றியருளியவரும் இவருடன் ஒருவராக வைத்து எண் ணப்படுபவருமாகிய வன்ருெண்டப் பெருந்தகையார்.

*"இருந்துநீர் தமிழோடிசை கேட்குமிச்சையாற்*
*காசுநித்த நல்கினீர் அருந்தண் வீழிகொண்டீர்"*

எனக்கூறுவதனுலும் எட்டு அல்லது ஒன்பதாவது நூற் ருண்டுக்குப் பின்னும் பதினேராவது நூற்ருண்டுக்கு முன்னும்

இருந்த சேந்தனுர் என்பார் திருவீழிமிழலைத்திருவி சைப்பாவில்,

"பாடலங்காரப் பரிசில் காசருளிப் பழுத்த செந்தமிழ் மலர்சூடி
நீடலங்காரத்தெம் பெருமக்க ளைஞ்சினு ணிறைந்து நின்றனே"

எனக் கூறுவதனுலும் வலியுறுத்தப் பெறுதல் காண்க. இன்னும் நம்பியாண்டார் நம்பிகள் பிள்ளையார் திருவந்தாதியில்,

"பேசுந்தகைய தன்றேயின்றுமன்றங் தமிழ்விரகன்
றேசமுழுது மழைமறந்தூண்கெடச் செந்தழற்கை
யீசன் திருவருளாலெழில் வீழிமிழலையின் வாய்க்
காசின் மழைபொழிந்தா னென்றிஞ் ஞாலங்கவின் பெறவே"

எனவும்,

"பாடிய செந்தமிழாற் பழங்காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திருஞானசம்பந்தனிறை புகழா
னேடிய பூந்திருநாவுக்கரசோ டெழின்மிழலைக்
கூடிய கூட்டத்தினுலுளதாய்த் திக்குவலயமே"

எனவும் கூறுவதும் இதற்குச் சான்றுதல் காண்க. இவற்றுள் இரண்டாவது செய்யுள் இவ்விருபெருமக்களும் ஒரே காலத்தவர் என்பதற்கும் சான்று பகர்கின்றது. இனி அங்ஙனம் கொடுத்தபடிக்காசில் திருஞானசம்பந்தர் பெற்றது வாசியுள்ள காசு என்பதற்கு அப்பெருமானுர், "வாசிதீரவே காசுநல்குவீர் மாசின்மிழலையீர் ஏசலில்லையே" எனப்பாடியருளியதே தக்கசான்ருகும்.

## 3. பிள்ளையார் திருவாவடுதுறையிற் பொன் பெற்றமை.

ஆளுடையபிள்ளையார் தந்தையார் வேள்விசெய்தற் பொருட்டுத் திருவாவடுதுறையின் கண் எழுந்தருளிய தேவ தேவனை நோக்கிப்பொன்பெற வேண்டுமென்ற குறிப்பால், 'இட ரினும் தளரினும்' என்று தொடங்கும் திருப்பதிகத்தை எடுத் துப்பாட அவனருளாலே ஆயிரம் பொன்கட்டிய முடிப்பொன்றினை ஓர்பூதங்கொணர்ந்து பிள்ளையாருக்குக் கொடுத்தது என்பது வரலாறு. இதற்கு அகச்சான்று இல்லையேனும் வேறுதக்க

சான்று ஒன்றுளது. அதாவது அடிகளோடு உடன் காலத்த வராகிய திருநாவுக்கரசர்பெருமான்

*' மாயிருஞாலமெல்லா மலரடி வணங்கும் போலும்*
*பாயிருங் கங்கையாளைப் படர்சடைவைப்பர் போலும்*
*காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க் கம்பொன்*
*ஆயிரங் கொடுப்பர் போலு மாவடுதுறையனாரே"*

என அருளியது. அன்றியும் அப்பிள்ளையார் திருவந்தாதியில் உள்ள,

*"சிந்தையைத் தேனைத் திருவாவடுதுறை யுட்டிகழு*
*மெந்தையைப் பாடலிசைத்துத் தொலையா நிதியமெய்தித்*
*தந்தையைத் தீத்தொழின் மூட்டியகோன் சாண்சார்விலரே*
*னிந்தையைப் பெற்றொழியா திரந்தோர நீட்டுவரே"*

எனும் நம்பியாண்டார் நம்பிகள் கூற்றும் இதற்குச் சான்றுதல் காண்க.

## 4. திருமறைக் காட்டு நிகழ்ச்சி

திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் திருமறைக்காடு சென்று ஆங்குள்ள திருக்கோவிலின்கண் மறைகள் வழிபட்டு அடைத்த திருக்கதவினை முறையேதிறக்கவும் அடைக்கவும் பாடினர் என்பது வரலாறு. இதற்குத் திருநாவுக்கரசர் அது போழ்து பாடிய,

*"பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ*
*மண்ணினார்வலம் செய்மறைக் காடரோ*
*கண்ணினாலுமைக் காணக் கதவினைத்*
*திண்ணமாகத் திறந்தருள் செய்மினே"*

என்னும் திருமறைக்காட்டுத் திருக்குறுந் தொகையின் முதற்பாட்டும் அதுபோலவே வரும் அப்பதிகத்து மற்றய திருப் பாட்டுக்களும் தக்க சான்றுதல் காண்க. இன்னும் அந்நாவுக் கரசர் 'திறக்கப்பாடிய என்னினும்' என வருளியதும் இதனை வலியுறுத்துவது, 'அற்றேல் இப்பதிகத்தில் திருக்கதவம்

திறக்க வேண்டுமென்று அடிகள் குறையிரந்து வேண்டுதல் காணப்படுகின்றதே யன்றி கதவுதிறந்தற்குச் சான்றுளதோ' எனின் நன்று கூறிஞய்! திருக்கதவம் திறந்திராவிடில் திரு ஞானசம்பந்தப்பெருமான் அக்கதவினை அடைக்கப்பாடும் அவசிய முண்டோ? இன்று. அவர் அடைக்கப்பாடிய ஒன்றே திருக் கதவும் திறந்ததற்குப் போதிய சான்ருகும். இனி, ஞானசம்பந் தப்பெருமான்,

*"சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்*
*மதுரம் பொழில் சூழ்மறைக்காட்டுறை மைந்தா*
*இது நன்கிறைவைத்தருள் செய்த எனக்குன்*
*கதவந்திருக்காப்புக் கொள்ளுங்கருத்தாலே"*

என்று தொடங்கிப்பாடியபதிகமே அவர் அடைக்கப்பாடிய தற்குத் தக்க சான்ருதல் காண்க. "ஆயினும், கதவந்திருக்காப் புக் கொளுங்கருத்தாலே' என்ற அடியால் அவர் அடைக்கப் பாடியது தோன்றுகின்றதே யன்றி அக்கதவு அடைபட்டது எனக்கொள்ளுமாறு யாங்ஙனம்'' எனின், நன்று நன்று! திரு நாவுக்கரசர், திறக்கப்பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்பப் பாடி ***அடைப்பித்தார்***' எனக்கூறியது பிள்ளையார் திருப்பாட்டால் திருக்கதவம் அடைபட்ட தென்பதற்கு உறு சான்ருகவில்லையோ?

பின்னர், திருநாவுக்கரசர் தாம்பதிகம்முழுதும் பாடியும் எளிதிலே திறக்காமல் அரிதிற்றிறக்க, ஞானசம்பந்தர் தொடங் கியபதிகத்தில் முதற்றிருப்பாட்டினைக் கூறிய அளவிலே எளிதில் அடைத்தமை கண்டு மனங்கவன்று அன்று இரவு உறங்கினர் என்பது வரலாறு. அக்கவற்சிக்குக் காரணம் யாதோவென்னின் கூறுதும். திருநாவுக்கரசர் இறைவனை ஆண்டானுகவும் தம்மை அடியாராகவும் கருதி அந்நெறியில் ஒழுகிவந்த பெரியார். ஆளு டைய பிள்ளையாரோ ஆண்டவனைத் தந்தையாகவும் தம்மைமைந் தனுகவும் கருதி அந்நெறியில் ஒழுகிவந்த பெரியார். இந்நெறி களில் அவர்கள் ஒழுகிவந்தனர் என்பது அவர்கள் இயற்றிய திரு முறைகளை நுனித்து நோக்குவார்க்கு நன்குபுலனுகும். ஓர் இல் லத்தில்கதவு அடைக்கப் பெற்றிருந்ததாயின் அவ்வீட்டின் தலை

வனதுபுதல்வன் எந்நேரமாயினும் வெளியில்நின்று அக்கதவினைத் தட்டி 'அம்மே! அப்பா? கதவினைத் திறப்பீர்களாக எனக்கூறு தற்கு உரிமையுண்டு. உலகவழக்கிலும்அதனைக்கண் கூடாகக் காண்கின்றோம். இனி, அடிமையாக உள்ள ஒருவன் அவ்வாறுகத வினைத்திறக்கும்படிக் கூறுதற்கு உரிமையும் இல்லை உலகவழக் கினும் இல்லை. இம்முறையினைக் கொண்டுதான் திருநாவுக்கரசர் நாம் ஆண்டவனுடைய திருவுளத்தைஅறியாது திறக்கப்பாடியது தவறு. அதனாலேதான் ஆண்டவன் அரிதிற்றிறக்குமாறு செய் தான்.'' என எண்ணிக் கவன்றனரேயன்றி அதனால் தனக்கொரு சிறுமை போந்ததென்று எண்ணிக்கவன்றாரில்லை, அங்ஙனம் கருதின் அவருக்கு ஒரு பொறாமைக்குணம் இருந்ததாகக் கற்பிக் கப்படும். எனவே அவ்வாறு கொள்ளுதல் அவரது தூயநெறிக் கிழுக்காகும் என்க.

இனி, 'நாவுக்கரசர் நவின்றருளிய திருப்பதிகத்திற்கு இறைவன் திருக்கதவினைச் சிறிது தாழ்த்துத்திறக்கச் செய்ததற்குக் காரணம் என்னஎனின், 'பண்ணினேரும் மொழியா ளென்றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான் தெண்ணீரணிந்தார் திருக்காப்பு நீக்கத்தாழ்க்க'' எனச் சேக்கிழார் அமைவு கூறுகின்றார். 'பயன்றுய்த்தல்' ஈண்டு இன்னதென நன்குவிளங்கவில்லை.

அன்று இரவு ஆண்டவன் அரையரைத் ''திருவாய்மூருக்கு வா'' என்று கூறியதற்கு,

''எங்கேயென்னை இருந்திடந் தேடிக்கொண்டு
அங்கேவந்தடையாள மருளினார்
தெங்கே தோன்றும் திருவாய் மூர்ச்செல்வனார்
அங்கே வாவென்று போனார் தென்கொலோ'' எனவும்,

''தஞ்சேகண்டேன் றரிக்கிலா தாரென்றேன்
அஞ்சேலுன்னை யழைக்கவந்தே னென்றார்
உஞ்சேனென்றகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சேவல்லரே வாய்மூர் அடிகளே'' எனவும் கூறிய அடி

களின் திருவாக்கே தக்க சான்றாதல் காண்க.

## 5. பிள்ளையார் அப்பரே! என்று அழைத் ததற்குக்காரணம்

திருஞானசம்பந்தர் தம்மை முதன் முதலாகத்திருநாவுக் கரசு காணவந்தகாலை தாமும் எதிர்கொண்டு செல்ல நாவுக்கரசர் வந்து வணங்கியமையும் ஞானசம்பந்தர் எதிர் வணக்கம் செய்து "அப்பரே!" என்று அழைத்தமையும் அவர் "அடியேன்! என்று கூறினமையும் ஆகிய இவற்றை,

*"தொழுதணைவுற்றாண்டவரசன் புருகத்தொண்டர் குழாத்*
*திடையே சென்று*
*பழுதில் பெருங்காதலுடன் அடிபணியப் பணிந்தவர்*
*தங்கரங்கள்பற்றி*
*யெழுதரிய மலர்க்கையாலெடுத்திறைஞ்சி விடையின் மேல்*
*வருவார் தம்மை*
*யழுதழைத்தாக கொண்டவர் தாமப்பரே யெனவவருமடியே*
*னென்றார்"*

என்னும் பாட்டால் குறிப்பிடுகின்றார் சேக்கிழார். திரு ஞானசம்பந்தர் இங்கு அப்பரே! யெனஅழைத்ததோடு அமையாது தாம் திருநாவுக்கரசரைச் சந்திக்குந்தோறும் அவ்வாறேயழைத் தார் எனவும் இன்னும் அவரைப்படர்க்கையில் வைத்துப்பேசும் போதும் அப்பர் என்றே கூறினர் எனவும் சேக்கிழார் தாம் இயற் றிய பெரியபுராணத்திற் கூறுகின்றார். அவ்வாறு கூறுவது எந்தெந்த இடங்களில் எனின் கூறுதும். பிள்ளையார் நாவுக்கர சரை முதன்முறை கண்டு அழைத்து வருங்காலை முன்னர்ச் சீகாழியின் கண்ணுள்ள திருக்கோயிலுட்புக்கு இறைவனை வணங்கி, '**அப்பரே**' உங்கள் தம்பிரானுரை நீர் பாடீர் எனவேண் டினர் என்பதைச் சேக்கிழார்,

*"பண்பயில் வண்டறைசோலை சூழுங்காழிப்பரமர் திருக்கோபுரத்*
*தைப் பணிந்துள்புக்கு*
*விண்பணிய வோங்கு பெருவிமானந்தன்னை வலங்கொண்டு*
*தொழுது விழுந்தெழுந்தவெல்லைச்*

*சண்பைவரு பிள்ளையாரப்பருங்கடம் பிரானுரை நீர் பாடீரென்னக்*
*கண்பயிலும் புனல்பொழிந்த வாசும்வாய்மைக்கலை*
*பயிலுமொழிபொழியக் கசிந்துபாடி"*

என்னும் செய்யுளாலே தெரிவிக்கின்ருர்.

பின்னர், ஆண்டவரசு திருவாரூரில் தியாகராசப் பெருமானைத் திருவாதிரை விழாக்காலத்து வ ண ங் கி, திருப்புகலூரை நோக்கி வருங்கால் ஆங்கு ஆண்டவனை வணங்கி எழுந்தருளியிருந்த பிள்ளையார் அரசர் எ ழு ந் த ரு ளி வருவதை உணர்ந்து எதிர் கொண்டு சென்றனராக; ஆங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியை,

*" திருநாவுக்கரசரெதிர் சென்றிறைஞ்சச் சிரபுரத்துத்தெய்வவாய்மைப்*
*பெருஞான சம்பந்தப்பிள்ளையா ரெதிர்வணங்கி யப்பரே நீர்*
*வருகாலிற்றிருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீ ரென்றுகூற*
*அருகாமத்தஞ் செழுத்தும்பயில் வாய்மை யவருமெதிரருளிச்*
*செய்வார் "*

என்னும் செய்யுளால் அறியலாம். இச்செய்யுள் திருநாவுக்கரசநாயனர் புராணத்தில் உள்ளது. இதேயிடத்தைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் புராணத்திற் கூறுங்காலை,

*" மெய்த்திருஞானசம்பந்தர் வாக்கின்வேந்தரை நோக்கிவிருப்பினாலே*
*அப்பரையிங்கணையப் பெறும் பேறுடையேம்யாம்"*

என அரையரை அப்பர் எனப்படர்க்கையில் வைத்துப்பிள்ளையார் கூறியதாக அறிகின்றோம்.

பின்னர்ப் பி ள் ளை யா ரும் அரசருமாகத் திருமறைக்காடு சென்று ஆங்குத் திருக்கதவம் திருக்காப்புக் கொண்டிருக்கும் செய்தியை அறிந்தவழி, பிள்ளையார் நாவுக்கரசரை நோ க் கி, உம்பர்பிரானை என் பு ரு க த், தேங்காதிருவோம் நேரிறைஞ்சத் திருமுன் கதவம் திருக்காப்பு நீங்கப்பாடும் அப்பரென நீடுந்திருநாவுக்கரசர் பாடினரென அறிகின்றோம். இந்நிகழ்ச்சியையே பிள்ளையார் புராணத்துட் கூறுங்கால் " **அப்பரே** வேதவனத்து ஐயர் தம்மை அபிமுகத்துத் திருவாயிற்றிறந்து புக்கே எப்பரிசும் யாமிறைஞ்ச வேண்டும்" எனப்பிள்ளையார் தாண்டகவேந்தரை வேண்டினர் என அறிகின்றோம்,

நாவுக்கரையர் இறைவன் ஆணையின்படி நள்ளிரவில் திருவாய்முருக்குச் செல்ல அதனை அறிந்து பிள்ளையாரும் சென்றனர் என்று கூறும்வழி,

*" அங்கவரேகச் சண்பையாண்ட கையாருமப்ப*
*ரெங்குற்றதென்று கேட்பவெய்தினர் திருவாய்மூரிற்*
*பொங்கிய காதலாலென்றுரைத்திடப் போனதன்மை*
*சங்கையுற்றென் கொலென்றதாமு மங்கணையப் போந்தார் "*

எனச்சேக்கிழார் செப்புகின்றார்.

பின்னர், பிள்ளையார் ஆலவாய்க்கு எழுந்தருளுங்காலை நாவுக்கரையரும் உடன் செல்ல எழுந்தருளினராக, அதுபோழ்து "புரமெரித்தார் திருமகனார் **அப்பர்** இந்தப்புனல் நாட்டில் எழுந்தருளியிருப்பீரென்று, கரகமலங்குவித்திறைஞ்சித் தவிர்ப்பவாக்கின்காவலரும் தொழுதரி தாங்கருத்தில் நேர்ந்தார்" என்னுமிடத்தும் பிள்ளையார் அ ப் ப ரெ ன விளித்தாரென்று அறிகின்றோம். இறுதியில் இவ்விருபெருமக்களும் சந்தித்தது திருப்பூந்துருத்தியென்னும் திருப்பதியின்கண். ஆங்கும்,

*" திருஞானமுனிவரா சிருந்ததிருப்பூந்துருத்திக*
*கருகாக வெழுந்தருளி யெங்குற்றாப்பரென*
*வருகானின்றும் மடியேனும்ம டிகடாங்கிவரும்*
*பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற்றேனென்றார் "*

(திருநாவுக்கரசு நாயனார் புராணம்: 396)

*" அப்பர்தாமெங்குற்றார் இப்பொழுதென்றருள் செய்யச்*
*செப்பரிய புகழ்த்திருநாவுக்கரசர் செப்புவா*
*ரொப்பரிய தவஞ்செய்தேனுதலினும் மடிக*
*ளிப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென்றார் "*

(திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம் 935)

எனப்பிள்ளையார் சொல்வேந்தரைப் படர்க்கையில் வைத்து 'அப்பர்' எனவே பேசினர் என அறிகின்றோம். எனவே திருநாவுக்கரசுநாயனார் புராணத்தில் ஐந்து இடங்களிலும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணத்தில் ஐந்து இடங்களிலும் பிள்ளை

யார் நாவுக்கரையரை 'அப்பர்' எனக்கூறினர் எனச்சேக்கிழார் குறிப்பிடுகின்ருர். இவ்வாறு அவர் குறிப்பதற்குக்காரணம் யாது? அவர் எந்நோக்கத்தோடு இவ்வாறு கூறியிருத்தல் வேண்டும் என ஆராய்ந்து அவ்வுண்மை காண்பது சாலச்சிறந்ததாகும். சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்திற் பல்காற்பயின்ருர்க்கு அவர் பலஇடங்களில் உய்த்துணரவைப்பு' என்னும் உத்தியைப் பயன்படுத்தியிருக்கின்ருர் என்பது நன்குபுலனுகும். (உய்த்துணர வைத்தலாவது பல விதிகளைக் கொண்டு ஒன்றனை ஆராய்ந்து முடிவுகட்டுதல் ஆகும்.) அவ்வுத்திகொண்டு கூறிய பிரி தொன்றை ஈண்டு எடுத்துக்காட்டுதல் பொருந்துவ தொன்ருகும்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மைக் காணவந்த திரு நீலகண்டயாழ்ப்பாணரை நோக்கி "ஐயர்நீர்! உளமகிழ இங் கணைந்த உறுதியுடையோம்" என்று அருளிகின்ருர். அவ்வொரு முறை அவரை 'ஐயர்' என்றழைத்ததோடு அல்லாமல் திருநாவுக் கரயரை இறுதிவரை "அப்பர்" என்றழைத்தது போலவே யாழ்ப் பாணரையும் இறுதிவரையில் "ஐயர்" என்றே அழைக்கின்ரு ரெனச் சேக்கிழார் குறிப்பிடுகின்ருர். பிள்ளையாரும் பெரும் பாணரும் திருவெருக்கத்தம்புலியூருக்குச் சென்றகாலை யாழ்ப்பா ணர் ஆளுடைய பிள்ளையாரை நோக்கி "அடிகேள்! யான் பிறந்த பதியிதுதான்" எனக்கூற, பிள்ளையார் பெருமகிழ்ச்சி யுடையா ராய் "ஐயர்நீர் அவதரித்திடவிப்பதி அளவில் மாதவமுன்பு, செய்தவாறெனச் சிறப்புரைத்தருளி" ஆங்குள்ள ஆண்டவன் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். பின்னர் அவ்விரு வரும் தருமபுரம் சென்றகாலை ஆங்குள்ள பாணரது கிளைஞர்கள் பெரும்பாணரது இசையினைக் கொண்டாட அதைப் பொறுக்கலாற் ருது யாழ்ப்பாணர் ஆளுடையபிள்ளையாரை வேண்ட, அவ்வேண்டு கோட்கிணங்கிய அவர் யாழ்முரிப்பண் பாடினராக; பாணர் "இந்த யாழன்றே என்னுடைய கிளைஞர் இங்ஙனம் நினைந்து பெருமிதமுறுதற்குக் காரணமாக இருந்தது" எனக்கருதி அதனை முரிக்க மேலே ஓங்குதலும், பிள்ளையார் அவரைத்தடுத்து "ஐயரே! உற்ற இசையளவினுல் நீர் ஆக்கிய இக்கருவியினைத்தாருமென வாங்கிக்கொண்டு" மீண்டும் "ஐயர்நீர்! யாழிதனை முரிக்குமது என்?" என வினவியருளியதாக பெரியபுராணச் செய்யுட்களால்

அறிகின்ரேம். எனவே பிள்ளையார் இழிந்த மரபினராகக்கருதப் படும் யாழ்ப்பாணரை நான்கு இடங்களில் "ஐயரே" என அழைத்ததாகச் சேக்கிழார் கூறுகிருர். இன்னும் அச்சேக்கிழார் பிறப்பாற் பரையராகிய திருநாளைப்போவாரை, ஆண்டவன் கனவின்கண் தோன்றி ஆணையிட்டவாறே அழைக்கவந்த தில்லைவாழந்தணர்கள் "ஐயரே! அம்பலவர் அருளால் இப்பொழுதணைந்தோம்" எனக்கூறியதாக குறிப்பிடுகின்ருர். திருஞானசம்பந்தரும் தில்லைவாழந்தணரும் பிறப்பால் உயர்ந்தவர்கள் என்பதும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் திருநாளைப் போவாரும் பிறப்பினுல் மிகவும் தாழ்ந்தவர்கள் என்பதும் அவ்வுயர்ந்தவர்கள் இத்தாழ்ந்தவர்களை "ஐயரே" என அழைத்தனர் என்பதும் நோக்க இஃது ஆராய்ச்சிக்கு உரியது ஒன்றன்ரே? இன்னும் இச்சேக்கிழார் ஆண்டவனை "ஐயர்" எனக்குறிப்பிடுகிருர் அன்றிப்பிறப்பால் உயர்ந்தவராகக் கருதப்படும் மறையவர்களை "ஐயர்" என்று யாண்டும் கூறினுரில்லை. பிறப்பால் இழிந்த கண்ணப்பரை "சார்விலைத் தொடக்கறுக்க ஏகும் ஐயர்" என்றும் "ஆணையாம் சிவத்தைச்சார அணைவர் போல ஐயர் நீணிலைமலையை ஏறி நேர்படச்செல்லும் போதில்" என்றும் இரண்டிடங்களில் தமது கூற்ருக வைத்து அச்சேக்கிழார் பெருமான் செப்புகின்ருர். இவற்றையெல்லாம் நுனித்து நோக்கும் காலை அவ்வாசிரியர் ஏதேனும் ஒர் சிறந்த கருத்தினைக் கொண்டன்றி இவ்வாறு கூறியிருத்தல் ஒல்லாது. அக்கருத்து யாதாயிருக்கலாமென ஆராய்வோம். "ஐயர்" என்னும் சொல் ஐ என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்தது. "ஐ வியப்பாகும்" என்பது தொல்காப்பியம். எனவே ஐயர் என்னும் சொல் வியக்கத்தகுந்த செயற்கரிய செயலை உடையவராகிய முனிவர்களுக்கும் ஒழுக்கம் நிறைந்த விழுப்பெரும் கேள்வியுடைய மெய்யன்பர்களுக்கும் உரியதாகும். எனவே ஒழுக்கத்திற்சிறந்தார் எக்குடியிற் பிறந்தாராயினும் அவரை "ஐயர்" எனக்கூறுவது பொருந்துவதொன்றன்றி ஓர் மரபினர்க்கே அதனை உரித்தாக்குதல் பொருந்தாது எனக்கருதியே சேக்கிழார் இங்ஙனம் கூறினுரென்று கொள்ளுதலே சிறந்தமுடிபாகும்.

இதுபோலவே அப்பர் என்ற சொல்லும் வந்திருப்பதனுல்

அதனை ஆராய்வோமாக; பிள்ளையார் அப்பர் என்று திருநாவுக் கரசரை அழைத்தது ஓர் பெயராக இருக்கவேண்டும் என்று சேக் கிழார் கருதியிருந்தால் அவர் அந்நாவுக்கரசரைப் பெரியபுராணத் துள் எங்கேனும் தமது கூற்றுகவாதல் பிள்ளையார் ஒழிந்த மற்றவர் கூற்றுகவாதல் அப்பர் என்று கூறியிருத்தல் கூடும். அங்ஙனம் யாண்டும் கூறிஞரில்லை. அவர் நூலமைப்பு முறை எங்ஙனம் இருக்கிறதென்ருல் ஒரு பெரியாருக்கு இட்ட பிள்ளைத் திருநாமத்தை அவருக்கு மற்றொருபெயர் வருகின்றவரை கூறிக் கொண்டேவந்து பிறிதொருபெயர் வந்தவுடனே அப்பெயரைத் தமது கூற்றுக வைத்துப் பாடுகின்ற முறையில் அமைந்திருக் கின்றது. எடுத்துக்காட்டாக, திருநாவுக்கரசர் புராணத்தில் மருணீக்கியார் என்ற பிள்ளைத்திருநாமத்தாலே கூறிக்கொண்டு வந்து அவர் சமண்சமயம் புக்குத் தருமசேனர் என்னும் பெயர் தரித்தபின்பு அப்பெயராலேயே கூறி, பின் அவர் சைவசமயம் புகுந்து தமது சூலைநோய் தீரப்பாடிய காலத்தில் ஆண்டவனுல் "நாவுக்கரசு" என்ற பெயர் கிடைத்ததாகக் கூறி அடுத்த செய் யுளில் தமது கூற்றுக "இத்தன்மை நிகழ்ந்துழி நாவின் மொழிக் கிரையாகிய அன்பரும்" எனவும் திருஞானசம்பந்தர் புராணத் தில் பிள்ளையார் சிவஞானத்தோடு கலந்த பாலையுண்டு தொடர்பு பட்டமையால் "சிவஞானசம்பந்தராயினர்" எனக் காரணம் கூறி அடுத்த செய்யுளில் தமது கூற்றுக "தவமுதல்வர் சம்பந்தர்" எனவும் கூறியிருத்தலைக் காணலாம். அவ்வருள்மொழித்தேவர் நூல் அங்ஙனும் இருத்தலினுலே அப்பர் என்பது ஒருபெயராக வழங்க வேண்டுமென்று கருதியிருப்பின் எங்கேனும் தமது கூற்றுக அப்பர் என்று கூறியிருப்பார் கல்வெட்டுக்களிலும் 'அப்பர்' 'மருணீக்கியார்' இவ்விரண்டு பெயர்களும் காணப்பட வில்லை. ஆனுல் இற்றை ஞான்றே "திருநாவுக்கரசர்" என்ருல் தெரிந்து கொள்ளாத சிலர் "அப்பர்" என்ருல் அறிந்துகொள்ளு கின்றனர். அப்பர் என்பது நாவுக்கரையருக்குப் பெயராயில்லா விடின் ஞானசம்பந்தர் பல இடங்களிலும் "அப்பர்" என்று அவரை அழைத்ததின் கருத்தென்னை, எனின் கூறுதும் முதன் முறை இருவரும் சந்தித்தகாலை, ஞானசம்பந்தரை "விடையின் மேல் வருவார்தம்மை அழுதழைத்துக் கொண்டவர்" எனக்குறிப் பிடுகின்ருர். இது திருநாவுக்கரசர் புராணத்துள்ளது. இனி

விடையின்மேல் வருவாரை எங்ஙனம் அழுதழைத்துக் கொண்டார் எனத் திருஞானசம்பந்தநாயனர் புராணத்திலுள்ள அப்பகுதியை நோக்குவோமேயானல் ஆங்கு, "செம்மேனி வெண்ணீற்ருர் திருத் தோணிச்சிகரம்பார்த்து அம்மே, அப்பா என்று அழைத்தருளினர்" எனக்காண்கின்ருேம். எனவே அப்பிள்ளையாரால் பார்க்கப்பட்ட வர் சிவந்த திருமேனியின்கண் திருநீறணிந்த இறைவர். அவரை அப்பா என அழைத்தனர். நமது நாவுக்கரசர் பிள்ளையாரை பார்க்கவந்தகாலை பிள்ளையார் எதிர்கொண்டு சென்று அவரது தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியையும் சிவவேடப்பொலி வழகையும் கண்டு முறைப்பெயராக "அப்பரே" என அழைத்த னர். இக்கருத்தைத் தெரித்தருளவே சேக்கிழார் "விடையின் மேன் வருவார் தம்மை அழுதழைத்துக் கொண்டவர்" எனப்பிள்ளை யாரை ஆண்டுக்கூறினர். இஃது ஒரு ஆதரவுமட்டுமன்று. இக் கருத்தைப் புலப்படுத்த இன்னும் பல ஆதரவுகளைத் தருகின்றனர் சேக்கிழார். அவற்றை முறையே காண்போமாக.

பிள்ளையாருக்கு பூணூல்விழா நடந்தஞான்று மறையவர் கள் பிள்ளையாரை நோக்கி "உமக்கு நான்குவேதங்களையும் ஓதும் உரிமையைத் தந்தோம்" என்றனர். உடனே ஆங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியை,

> "***சுருதியாயிரமோ தியங்கமான தொல்கலைகளெடுத்தியம் புந்தோன்ற லாரைப், பரிதியாயிரங்கோடி விரிந்தாலென்னப் பாஞ்சோதியருள் பெற்றபான்மை மேன்மை கரு தியா தரவோடும் வியப்புற்றேத்துங் கலைமறையோர் கவுணியனர் தம்மைக் கண்முன் வருதியானப் பொருளென் றிறைஞ்சித்தாமுன் வல்லமறை கேட்டையந்தீர்ந்து வாழ்ந்தார்***" என்னும் செய்யுளால் சேக்கிழார் குறிப்பிடு

கின்ருர். இத்திருப்பாட்டினுல் சீர்காழியில் உள்ள சிறந்த மறையவர்கள் எல்லாம் தாம் நெடுங்காலமாகத் தியானித்துக் கொண்டு வந்த ஓர் தியானப்பொருள் இப்பொழுது வடிவெடுத்துக் கண்முன்னே வந்தருளியது எனப் பிள்ளையாரை எண்ணி வணங்கி மகிழ்ந்தனர் என அறிகின்ருேம்.

இனி, பிள்ளையார் திருநாவுக்கரையரை எதிர் கொள்ளச்

சென்றகாலே திருநாவுக்கரையரின் தோற்றத்தைக் கீழ்வருமாறு சேக்கிழார் எழுதிக் காட்டுகின்றனர். அது,

" சிந்தையிடையறுவன்புந் திருமேனி தனிலசைவுங்
கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறு
மந்தமிலாத் திருவேடத்தரசுமெதிர் வந்தணைய " என்பது.

அத்தோற்றத்தைக் கண்ணுற்ற பிள்ளையார்

செய்தியை,

" கண்டகவுணியக்கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதற்
றொண்டர் திருவேடநேரே தோன்றிய தென்று தொழுதே
யண்டரும் போற்றவணைந்தங்கரசு மெதிர் வந்திறைஞ்ச
மண்டியவார் வம்பெருக மதுரமொழியருள் செய்தார் "

என்னும் பாட்டால் சேக்கிழார் தெரிவிக்கின்றனர். இச் செய்யுளால் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது திருவுள்ளத் தின்கண் நீண்ட காலமாக ஓர் சிவனடியார் வேடத்தைத்தியானித் துக்கொண்டே வந்தனர் என்பதும் அத்திருவேடமே ஆண்ட அரசின் திருவேடமாக இருந்தமை கண்டு பெரிதும் மகிழ்ந்து வணங்கினர் என்பதும் அறியக்கிடக்கின்றன. சீர்காழியில் உள்ள மறையவர்களால் கண்முன்வரு தியானப் பொருள்என்று இறைஞ் சப்பெற்ற மறையவர்குல திலகராகிய மாண்புமிக்க பள்ளையார் தமது கண்முன்னே வருகின்றதியானப் பொருள் என்று நாவுக்கர சரை இறைஞ்சினரென்றால் வியப்பினும் வியப்பன்றே!

மூன்றாண்டிலேயே இறைவன் திருவருளைப்பெற்றுச் சிவ குமாராக விளங்கும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் ஓர் திருவேடத் தைத் தியானிக்க வேண்டியது என்ன எனின், கூறுதும்.

அயரா அன்பின் அரன்கழலடைந்த சீவன் முக்தர்களும் ஒரோவழி தம்மை வாசனமலம் வந்து தாக்கிப் பிறவியிற் புகுத்தா வாறு சிவவேடத்தையும் திருக்கோயில்களையும் சிவனெனவே கண்டுதொழவேண்டும் என்பது அறிவுநூல் முடிபாகும். இதனை,

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇ
மாலறநேய மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரனெனத் தொழுமே;' என்னும் சிவஞான போதப்பன்னிரண்டாம் சூத்திரத்தால் உணர்க.

இன்னும் திருவள்ளுவரும் துறவறஇயலில் "மெய்யுணர்தல்" என்னும் அதிகாரத்திற்குபின் "அவாவறுத்தல்" என்ற அதிகாரத்தை வைத்தமுறையும் அவ்வதிகாரத் தலைப்பில் அஃதாவது முன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின் வேதனைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்கண்மேற் பழைய பயிற்சி வயத்தான் நினைவு செல்லுமன்றே? அந்நினைவும் அவிச்சையெனப் பிறவிக்கு வித்தாமாகலின் அதையிடைவிடாத மெய்ப்பொருள் உணர்வான் அறுத்தல்" எனப்பரிமேலழகர் எழுதியதும் ஈண்டுச்சிந்திக்கத்தக்கன. "நீதிநின்று நினைவார் வேடமாம் ஆதி" எனவும் "மருந்து வேண்டில்லிவை மந்திரங்கள்ளிவை புரிந்து கேட்கப்படும் புண்ணியங்கள்ளிவை, திருந்துதேவன் குடித்தேவதேவெய்திய அருந்தவத்தோர் தொழும் அடிகள்வேடங்களே" எனவும் வரும் ஆளுடைய பிள்ளையாரின் திருவாக்குகளும் சிவவேடத்தின் சிறப்பினைத் தெரிவித்தல் காண்க.

இனி, நமதுநாட்டின்கண் "ஆணையிடுதல்" என்றஓர்பழக்கம் தொன்று தொட்டுஇருந்து வருகின்றது. அதனை உலகவழக்கிலும் நூல் வழக்கிலும் பரக்கக்காண்கிறோம். அறிவு விளங்கப்பெறாத சிற்றூர்களில் உள்ள சிறுவர்களும்கூட ஒவ்வோர்சமயம் "எங்களப்பராணை, 'எங்கள் சாமியாணை நாங்கள் இதைச் செய்தே தீருவோம்" எனக் கூறக் கேட்கின்றோம். அவ்வாறு அவர்கள் தந்தைமீதும் இறைவன்மீதும் ஆணையீடுவானேன் என்பதை நுனித்து நோக்கின் தாங்கள் ஆணையிடுங்கால் தமது உயிரினும் சிறந்ததொரு பொருளின் மேற்றான் ஆணையிட்டுக்கூறுவர் என்ற முடிபிற்கு வருதல்கூடும். அங்ஙனம் வருமிடத்தும் சாத்தன் என்பவன் கொற்றன் என்பவனை நோக்கி "நான் இன்னகாரியம் செய்தே தீருவேன்" எனக்கூறும் வழி ஆணையிடநேரின் தனது

உயிரினும்சிறந்ததொரு பொருளாக எதனைக்கருதியிருக்கின்றானோ அதன்மேல் ஆணையிட்டுக் கூறுவன். அச்சாத்தானே கொற்றனை "நீஇஃது செய்தேதீரவேண்டும்" எனக்கூறும்வழி அவனதுஉயிரினும் சிறந்ததொரு பொருளாக அவன் எதனைக் கருதியிருக்கின்றனனோ அதன்மேல் ஆணையிட்டுக் கூறுவன். எனவே சாத்தான் ஒருவனே தன்னாற் செய்யப்படுதலும் கொற்றனால் செய்யப்படுதலும்ஆகிய நிகழ்ச்சி வேறுபாட்டால் ஆணையிடுதலிலும் வேறுபடுவான் என்ற உண்மையை நன்கு உணர்தல் வேண்டும். இதனை நூல்வழக்கில் வைத்துக் காட்டுவோமாக.

கைகேயியானவள் தன் புதல்வனாகிய பரதன் நடாளுதலும் இராமன் காடாளுதலுமாகிய எண்ணத்தை யுட்கொண்டவளாய், தன் நாயகனாகிய தசரதனிடம் அதனைக் கூறாது கவலையுற்று இருந்தனள். அவள் எண்ணத்தை யுணராது கவலையை மட்டும் உணர்ந்த தசரதன் கூறியதைக் கம்பர்தனது கவின்மொழிகளால் விளக்குகின்றனர். அது, "கள்ளவிழ் கோதைகருத்துணராத மன்னன், வெள்ள மிகுஞ்சுடர் மின்னினினென்ன நக்கான், உள்ள முவந்தது செய்வன் ஒன்றுலோபேன், வள்ளல் ***இராமன் உன் மைந்தன் ஆணையென்றான்*** " என்பது. ஈண்டுதசரதன் கைகேயினிடம் "நீ விரும்பியதைக் கூறுவாயாக. அதனைக்கொடுத்தற்கு நான் சிறிதும் உலோபத்தனம் செய்யேன். இராமன் மீதுஆணை" எனக் கூறுதற்குக் காரணம் என்னை? தசரதன் தனது உயிரினும் சிறந்தவனாக ஸ்ரீராமபிரானைக் கருதியதனால் அன்றோ? அக்கருத்தால் அன்றோ இராமன் பிரிந்த உடனே தசரதன் உயிரும் பிரிந்தது. அம்மன்னனுக்கு ஸ்ரீஇராமபிரானைத்தவிர வேறு உயிர் இல்லை என்பதனைக் கைகேயிதன் வரத்தைக் கேட்டவுடனே தசரதன் செயலைக்கூறும் பகுதியில் கம்பநாடார் "இந்த நெடுஞ் சொல் அவ்வேழை கூறுமுன்னே வெந்த கொடும் புண்ணில் வேல் நுழைந்ததொப்ப, சிந்தை மயங்கித் திகைத்து அயர்ந்து வீழ்ந்தான், மைந்தனல்லாது உயிர் வேறிலாத மன்னன்" என்னும் பொன் மொழிகளால் புகல்கின்றனர். இனி, கைகேயி தனது எண்ணத்தைத் தெரிவித்த அளவில் தசரதன் மூர்ச்சையாகிக் கீழே விழுந்து விட்டனன். சிறிது நேரம் சென்று உணர்வு பெற்று விழித்துப்பார்க்குங்காலை, கைகேயி தனது நிலையினின்றும் ஒரு

சிறிதும் தளராதிருத்தலைக்கண்டு, தசரதன் கூறிய செய்தியை,

"இங்கிலை நின்றவள் தன்னை எய்தநோக்கி
செய்கிலை வேலவன் நீதி சைத்ததுண்டோ
பொய்கிலை யோர்கள் புணர்த்த வஞ்சமுண்டோ
அங்கிலை சொல் எனதாணை உண்மையென்றான்" என்னும்

செய்யுளாற் கம்பர் கூறுகின்றனர். முன்னர் இராமன் மீது ஆணைவைத்துக் கூறிய தசரதன் பின்னர்த் தன்மீது ஆணைவைத்துக் கூறுவது இங்கு நோக்கத்தக்க தாகும்.

முன்னர் "நான் கொடுப்பேன்" என்றகாலை அதுதன்செய லாதலின் தன் உயிரினும் இனியவனாகிய இராமபிரான் மீது ஆணையிட்டுக் கூறினன். பின்னர்க் கைகேயியை "நீ சொல்வாயாக" என்றுவினவியகாலை அது அவள் செயலாதலின் அவளது உயிரினும்இனியவனாக அவளாற் கருதப்படுகின்ற தன்மீது ஆணையிட்டுக் கூறினன் என்க.

இனி, இராவணனால் அசோக வனத்திற் சிறைப்படுத்தப் பட்டிருந்த சீதாபிராட்டியானவள் தன்னைக் காணுதற்கு வந்த அநுமானிடத்தில் தன் நாயகனுக்குக் கூறுமாறு சொல்லிய செய்திகளுள் ஒன்று, "இன்னு மீண்டொரு திங்கள் இருப்பல் யான், நின்னை நோக்கி யுரைத்தது நீதியோய்! பின்னை ஆவிப் பிடிக்கின்றிலேன் அந்த **மன்னனாணை** இதனைமனக் கொள் நீ,' என்பதாகும். கற்புடைய மங்கையர் தமது உயிரினும் சாலச் சிறந்தவராகத் தமது நாயகர்களைக் கருதுவார்கள் ஆதலின் அக்குணத்தில் தலைசிறந்த பிராட்டியார் ஆவியைவிடுதலாகிய தன் செயலைக் கூறுங்காலை, தனது உயிரினும் இனியவனாகிய இராமபிரானைக் குறித்து "அந்தமன்னனாணை" என்றது மாட்சி யுடைய தொன்றன்றே! இனி, "முற்றுந்துறந்த துறவிகள் ஆணையிட நேரின் யார்மீது ஆணையிடுவார்கள்? எனின் அவர்கள் அகப்பற்றும் புறப்பற்றும் துறந்தவர்கள் ஆதலின் தமது உயிரினும் சிறந்தவர்களாகக் கருதப்படும் ஆசிரியன் மீதும் ஆண்டவன் மீதுமே ஆணையிடுவார்கள். இவ்வுண்மையை இராம லிங்க அடிகளின் திருவருட்பாவில் பரக்கக்காணலாம் அவற்றுள் ஒன்று.

"மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்தே
கண்விழித்து வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி இறைந்தவரை
யெழுப்புகின்ற உறுவனேனும்
கருவாணையுற இரங்காதுயிருடம்பைக்
கடிக்துண்ணும் கருத்தேனேலெம்
குருவாணை யெமது சிவக்கொழுந்தாணை
ஞானியெனக் கூறொணுதே" என்பதாகும்.

திரு நீலகண்ட நாயனுர் தமது மனைவியாரது ஊடலைத் தீர்க்கப் பல இன்மொழிகள் கூறி அவரது திருமேனியைத் தீண்டச்செல்லுங்காலை அவ்வம்மையார், "தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்" என்று அந்நாயனுர் தமது உயிரினும் சிறந்ததாகக் கொண்டு இடையருது போற்றி வந்த திருநீலகண்டத்தின் மீது தீண்டாமையாகிய செயலை அவர் மேற்கொள்ளுதற் பொருட்டு ஆணையிட்டதும் ஈண்டுச் சித்திக்கத் தக்கதாகும். இவ்வாற்ருல் எவ்வெக் காலங்களில் எவ்வெப்பொருள் மீது ஆணையிடுவது என்பதை யறிந்தோம்.

நமது திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமதுதந்தையாராக வேக்கருதி அப்பரே என்றழைத்து வந்தமையால், ஓரமயம் "நான் இக்காரியம் செய்தே திருவேன்" என்று அவரிடம் கூறுங்காலை அவர் மீதிலே ஆணையிடநேர்ந்தமை கண்டு களிப்புறுவோமாக.

பிள்ளையார் மதுரைக்குச் செல்லப் புறப்படுங்காலை, தாண்டகவேந்தர் தடுத்தனர் என்பதை

"ஆயபொழுது திருநாவுக்கரசு புகலி ஆண்டகைக்குக்
காயமாசு பெருக்கிஉழல் கலதியமணர் கடுவினை செய்
மாயசால மிகவல்லார் அவர்மற்றென்னை முன்செய்த
தீயதொழிலும் பலகேட்டேன் செல்லவிசையேன்யான் என்ருர்

என்னும் செய்யுளாற் சேக்கிழார் பெருமான் தெரித்தருளுகின்ருர். அதற்கு ஞானசம்பந்தப் பெருமான் கூறியது,

*"என்றுகூற எல்லையில்லா நீறு போற்றும் இருவரையும்*
*சென்றுகாணுங் கருத்துடையேன் அங்குத் தீங்குபுரியமணர்*
*நின்ற நிலைமை யழிவித்துச் சைவநெறி பாரித்தன்றி*
*ஒன்றுஞ் செய்யேன் ஆணை உமது என்றார் உடையபிள்ளையார்"*

என்பதாகும். ஈண்டு "மதுரைக்குப் போதலாகிய செயலை யான் ஒழியேன்" என்பதைக் கூறும்வழி தமதுதந்தையாராகக் கருதப்பட்ட நாவுக்கரையர் மீது 'ஆணை உமது' என்று பிள்ளையாரருளியது சாலவும் பொருந்துவதொன்றன்றே! படிப்போர்க்கு அறிவு பெருகுமாறு இவ்வாறு உய்த்துணரவைக்கும் ஆற்றல் வாய்ந்த சேக்கிழார் பெருந்தகைக்கு யாம் செய்யும் கைம்மாறு என்னே!

இனி, தாதயாரை அழைக்கும் முறைப்பெயர் பலஇருக்கவும் "அப்பரே" என்றழைத்ததின் காரணம் யாது என ஆராய்வோமாக "அப்பர் சோற்றுத் துறைசென்றடை வோமே" "விடையுடை யப்பன்" "அல்லல்தீர்க்கும் அப்பனூர்" "அங்கம் பூண் எனவுடைய அப்பனுக்கழகிய ஊர், "அரக்கனை அடர்த்தருளும் அப்பன்" எனவரும் ஆளுடைய பிள்ளையாரின் திருவாக்குகளால் அவர் ஆண்டவனை அப்பர் என்றே அழைத்தலில் விருப்புடையவர் என்பதை யுணரலாம். தனது உடற்றந்தையாராகிய சிவபாத இருதயரையும், அவர் அப்பர் எனவே அழைத்தருளினர் என்பதற்கு, தாம் தொண்டைநாட்டு யாத்திரைக்குப் புறப்படுங்காலை தந்தையாரும் உடன் வர எண்ண,

*"அப்பர் நீர் இனிஇங்கொழிர்தருமறை அங்கிவேட்டன்போடும்*
*தப்புலேர் சடையார் தமைப்பரவியே தொழுதிரும்"*

எனக்கூறியதே போதிய சான்றாகும். இன்னும், மதுரையில் தாம் எழுந்தருளியிருக்கும் காலை, தம்மைக்காண வந்த தாதையாரைப் பரிசனங்கள் கண்டு "அப்பர் எழுந்தருளினர்" என வணங்கி அவ்வோகையுரையைப் பிள்ளையாருக்குத் தெரிவித்தனர் என்று அறிகின்றோம். ஆதீனத்தில் தலைவராகயிருப்பவர் எவரையேனும் முறைப்பெயராக அழைத்தாராயின் ஆங்குள்ள அனைவரும் அவரை அவ்வாறே அழைப்பது தொன்று தொட்டு வரும்

வழக்கமாதலின் பிள்ளையார் தமது தந்தையாரை அப்பரே என அழைத்தமைகொண்டு அவர் அடியார்களும் அவ்வாறே கூறும் மரபுபற்றி "அப்பர் எழுந்தருளினுர்" என்று கூறி வணங்கினுர் எனச் சேக்கிழார் செப்புந்திறமை சிந்தித்து வியக்கற்பாலது. இவற்றுல் பிள்ளையாருக்கு உடற்றந்தைசிவபாத இருதயரென்பதும் உயிர்த்தந்தை உமையொருபாகனென்பதும் அவ்வுயிர்த்தந்தை யையுணரும் மெய்யுணர்வு நீங்காதிருப்பதற்கு அவர் இடையருது தியானித்து வழிபடுகின்ற தந்தை திருநாவுக்கரசர் என்பதும் பெறப்படுதல் காண்க.

இன்னும் இவ்வுண்மையை வலியுறுத்துதற்குச் சேக்கிழார் பெருந்தகையால் எடுத்தாளப்படும் சொற்றெடர்கள் சில ஈண்டுக் கண்டு இன்புறற்பாலன. அவை,

"பிள்ளையார், அப்பர் உங்கள் தம்பிரானுரை நீர் பாடீர்"

"பிள்ளையார்; எதிர் வணங்கி அப்பரே! நீர்"

"புரமெரித்தார் திருமகனுர், அப்பர் நீர்" என்பன. இவற்றுள் திருஞான சம்பந்தர் அப்பரே என அழைக்கும் பகுதிகளில் சேக்கிழார் தமதுகூற்றுக வைத்து அவரைப் "பிள்ளையார், மகனுர்" எனக்கூறுதல் காண்க. இன்னும்

"தெருட்கலை ஞானக்கன்றும் அரசும்"

"அன்பரீட்டங் களிசிறப்ப ஆண்ட அரசும் சிவக்கன்றும்"

"செந்நீர் வாய்மைத் திருநாவுக்கரசும் புகலிச் சிவக்கன்றும்" எனவரும் தொடர்களில் "அரசு, கன்று" என வைத்துச் சேக்கிழார் தமது கருத்தைப் புலப்படுத்துதல் சிந்தித்து மகிழ்தற்குரியது ஒன்றுகும். இன்னும் அவர் அவ்விருபெருமக்களும் சீர்காழித்திருக்கோயிலுக்குச் செல்லுங்காலை திருஞானசம்பந்தரையும் திருநாவுக்கரையரையும் முறையே "அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம் அன்பு செறிகடலும்" என உருவகப்படுத்துகின்றுர். அருள் என்பது அன்பினின்றும் தோன்றுதல் முறைபற்றி அருள், பிள்ளையும் அன்பு தந்தையும் ஆகும். அருள் அன்பினின்றும் தோன்றுவதென்பதை "அருள் என்னும் அன்பீன்

குழவி" என்னும் திருக்குறளால் அறிக. எனவே திருஞான சம்பந்தரை அருட்கடல் என்பதனுல் பிள்ளையாரகவும் திருநாவுக்கரையரை அன்புக்கடல் என்பதனுல் தந்தையாராகவும் உய்த்துணரவைத்தது சேக்கிழார் ஒருவர்க்கே உரிய திறனன்ரே!

இனி, "பிள்ளையார் அப்பர் என்றழைத்த கருத்தைத் திருநாவுக்கரசர் தெரிந்தனரோ" எனின் நன்கு தெரிந்துள்ளார் என்பதில் ஐயமில்லை. 'அதற்கு ஆதரவு யாதெ'னின், கூறுவம் சிறந்த இரண்டு நட்பினருள் ஒருவன் தீநெறிக்குச் செல்வானுனல் அதனைத்தடுக்கப் புகுந்த மற்ருெருவன் தான் நினைத்ததனைச் சொல்லப்புகு முன் அதனைச் செல்லுதற்குத் தனக்கு உரிமையுண்டு என்பது தோன்ற "ஏ நண்பா! என முதற்கண் விளிப்பான். அங்ஙனமே ஓர் தந்தையும் தனது புதல்வன் அல்வழிக்கண் செல்வானுகின் அவனை நல்வழிக்கண் நிறுத்தற்பொருட்டு "ஏமைந்தா!" எனவிளித்துச் சில கூறுவான். இவையெல்லாம் உலகியல் ஆகும். பிள்ளையார் ஆலவாய் செல்லத்துணிந்த பொழுது அதனைத்தடுக்கப் புகுந்த திருநாவுக்கரையர் செப்பியதை

*"அரசருளிச் செய்கின்ருர் பிள்ளாய்! அந்த அமண்*
*கையர் வஞ்சனைக் கோரவதியில்லை*
*உரை செய்வதுளதுறுகோள்தானும் தீயஎழுந்தருள*
*உடன்படுவ தொண்ணுது"* என்னும் செய்யுளால் சேக்கிழார் தெரிவிக்கின்ற நயத்தை எங்ஙனமறிந்து எவ்வாறு கூறுவேம்! இவ்விரண்டடிகளாலும் திருநாவுக்கரையர் பிள்ளையாரை நோக்கி "நீர் நெடுநாளாக என்னை அப்பரே என்றழைக்கின்றீர் அவ்வாறு அழைக்கும் கருத்தினை யானறிவேன். என்னைத் தந்தையென்னும் உரிமைபற்றியழைக்கின்றீராதலின் யானும் இதுபோழ்து நீர் செல்லத் துணிந்த அல்வழியை மைந்தன் என்னும் உரிமைபற்றி மறுக்குங் கடப்படுடையேன்" என்று கூறினமை புலனுதல் காண்க. இந்நுட்பத்தை நுனித்துணர்ந்த சிவஞான சுவாமிகள் தமது சோமேசர் முதுமொழி வெண்பாவில்

*"வாக்கரசர் பிள்ளாய் எனவலித்து மாற்றலுற்ருர்*
*தூக்கு பிள்ளையார்செலவைச் சோமேசா—நோக்கின்*
*நகுதற்பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்*
*மேற்சென்று இடித்தற் பொருட்டு"* எனச் செப்புவாராயினர்.

ஈண்டு சேக்கிழார் பெருமான் திருநாவுக்கரசர் கூற்ருகத் திருவாய் மலர்ந்தருளிய "பிள்ளாய்" என்னும் சொல்லேயே எடுத்துவைத்தமையும் "வலித்து "என்று கூறினமையும் எண்ணி யின் புறத்தக்கனவாகும்.

இனி, ஞானசம்பந்தப் பெருந்தகையார் திருநாவுக்கரசரை அத்துணை சிறப்பித்துக் கொண்டாடினர் என்பதற்குச் சேக்கிழா ருக்குக் கிடைத்த ஆதரவுகள் யாவை? எனின் அப்பிள்ளேப் பெருமானுர் இயற்றியருளிய தேவாரங்களேயாம். ஒருவர் இயற் றியநூலே நுனித்து நுனித்து ஆராய்வார்க்கு அவ்வாசிரியரின் உள்ளம் ஒழுக்கம் முதலியவைகள் செவ்விதிற் புலனுகும் என்பது ஒருதலே. அங்ஙனம் ஒருவர் இயற்றிய நூலேக்கொண்டு அவரது செயலே உணரும் மதுகை வாயாத ஒருவன் அவரை நேரிற்காணி னும் அவரோடு அளவளாவிப் பேசினும் அவரது தன்மையை யுணரும் வலிமை குன்றியவனேயாவன். ஆதலின் திருஞானசம் பந்தர் இயற்றியருளிய தேவாரங்களேயும் திருநாவுக்கரசர் இயற் றியருளிய தேவாரங்களேயும் எழுத்தெண்ணிப் படித்து இன்புற்ற நமது சேக்கிழார் பெருந்தகையாருக்கு அவரது குணங்களே எடுத்து நமக்குக் கண்ணுடிபோலக் காட்டும் செயல் அரியதொன் றன்று.

திருஞானசம்பந்தர்,

"வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலேத்
திங்களோடு திளேக்கும் திருப்புத்தூர்க்
கங்கை தங்குமுடியார் அவர்போலும்
எங்கள் உச்சியுறையும் இறையாரே" எனவும்,

"பங்கயங்கள் மலரும் பழனத்துச்
செங்கயல்கள் திளேக்கும் திரும்புன்கூர்க்
கங்கைதங்கு சடையார் அவர்போலும்
எங்கள் உச்சியுறையும் இறையாரே"

எனவும் கூறியருள்கின்ருர்.

இத்திருப்பாட்டுக்களால் இடையருது தமது திருமுடியின் கண் இருத்தற்கு உரியவன் ஆண்டவனே என அவர் எண்ணி யிருந்தனர் என்பது நன்கு புலனுகும். இனி, அவரே,

" தூயானைத் தூயவாயம் மறையோதிய,
வாயானை வல்லரக்கன் வலிமாட்டிய,
தீயானைத்தீதில் கச்சித்திருவேகம்பம்
மேயானை மேவுவார் என்றலை மேலாரே"

எனவும் கூறுகின்றார்.

மேற்குறித்த இரண்டு பாட்டுக்களில் தம்மோடு மற்ற அடியார்களையும் உளப்படுத்தி "எங்கள் உச்சிஉறையும் இறையாரே" என்ற அவர்இத்திருப்பாட்டில் "திருவேகம்பம், மேயானை மேவுவார் என்றலை மேலாரே" என அவ்வாண்டவன் அடியார்களைத் தம்மைப் போன்ற மற்ற அடியார்களுக்கும் உரிமையாக்காது " என்தலை மேலார்" எனத்தனக்கே உரிமையாக்கிக் கொண்டது அவர் ஆண்டவனது அடியாரிடத்து வைத்த அளவிறந்த அன்பைக் காட்டுகிறதன்றோ! இன்னும் அவர்

" தக்கனார் பெருவேள்வியைத் தகர்த்துகந்தவன் தாழ்சடை
முக்கணன் மறைபாடிய முறைமையான் முனிவர் தொழ
அக்கினோடு எழில் ஆமைபூண் அண்ணலாரறை யணிநல்லூர்
நக்கனார் அவர் சார்வலால் நல்கு சார்விலோம் நாங்களே"

எனவும்,

" வெய்ய நோயிலர் தீதிலர் வெறியராய்ப் பிறர்பின் செலார்
செய்வதே அலங்காரமாம் இவை இவை தேறியின்புறின்
ஐயமேற்றுணும் தொழிலாம் அண்ணலாரறை யணிநல்லூர்ச்
சைவனாரவர் சார்வலால் யாதும் சார்விலோம் நாங்களே"

எனவும் கூறுமாற்றால் இறைவனைத்தவிரத் தமக்கு எவ்வகைப்பற்றுக்கோடும் இல்லையென எண்ணியிருந்தமை புலனாகும். அப்பெருமானே,

" பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன் விண்டதோர்
தேம்பல் இளமதியஞ்சூடிய சென்னியான்
ஆம்பலம் பூம்பொய்கை ஆமாத்தூரம்மான்றன்
சாம்பல கலத்தார் சார்பல்லாற் சார்பிலமே" என அவர்

அடியாரைத் தவிர தமக்குக் களைகணாக உள்ளவர் வேறு ஒருவரும் இலர் என்று கூறியருளுகின்றார். இன்னும் அவர் " ஆண்டவனை வணங்கும் அடியார்களை யன்றி ஏனையோர்கள் எத்துணைச் சிறந்த

வுணர்ச்சி யுடையராயினும் எவ்வளவு தெளிந்த அறிவுடையராயி னும் அவர்களை நாம் ஒரு பொருளாக நினைக்கமாட்டோம்'' என்னும் கருத்தை,

''வையநீர் ஏற்றானும் மலருறையும் நான்முகனும்
ஐயன்மார் இருவருக்கும் அளப்பரிதால் அவன் பெருமை
தையலார் பாட்டோவாச் சாய்க்காட்டெம் பெருமானைத்
தெய்வமாப் பேணாதார் தெளிவுடைமை தேறோமே''

''கள்ளார் செங்கமலத்தான் கடற்கிடந்தான்என இவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி உயர்ந்தாழ்ந்தும் உணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யும் மேதகுவெண்காட்டானென்
றுள்ளாடி உருகாதார் உணர்வுடைமை உணரோமே''

என்னும் திருப்பாட்டுக்களால் தெரித்தருளுகின்றார். இன் னும் அவர் இவ்வுலகத்தின் கண் உயிரோடு இருப்பவர்கள் இறை வனை இடையறாது எண்ணியெண்ணி இன்புறும் அடியார்களே என்றும் ஏனையோர் இருப்பினும் இறந்தவர்களே யாவ ரென்றும்,

''வெண்ணிலாமிகுவிரி சடையரவொடு வெள்ளெருக்கலர் மத்தம்
பண்ணிலாவிய பாடலோ்டாடலர் பயில்வுறு கீழ்வேளூர்ப்
பெண்ணிலாவிய பாகனைப் பெருக்திருக்கோயிலெம் பெருமானை
உண்ணிலாவி நின்றுள்கிய சிந்தையாருல கினிலுள்ளாரே''

என்னும் திருப்பாட்டினால் செப்பியருளுகின்றார். இன்னும் ஆண்டவனது அன்பர்கள்தாம் தலையானவர்கள் என்றும் தக்கவர் கள் என்றும் ஏழுலகத்தையும் ஒருங்கே யாளுதற்கு உரியாரென் றும், அவர் எண்ணியிருந்தமை கீழ்வரும் தேவாரங்களால் விளங் கும் அவை,

''அலையார் புனல்சூடி யாகத்தொருபாக
மலையான் மகளோடும் மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையாலெயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையானார்களே''

''எரித்தமயிர் வாளரக்கன் வெற்பெடுக்கத்த தோளொடுதாள்
நெரித்தருளும் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினன்

உரித்த அரித்தோலுடையான் உறைபிரமபுரம் தன்னைத்
தரித்த மனம் எப்போதும், பெறுவார் தான் தக்காரே"

"கரியானும் நான்முகனும் காணுமைக் கனலுருவாய்
அரியானும் பரமேட்டி அரவஞ்சேர் அகலத்தான்
தெரியாதான் இருந்துறையும் திகழ் பிரமபுரம் சேர
உரியார்தாம் ஏழுலகும் உடனுள உரியாரே" என்பன.

இன்னும் அவர் ஆண்டவன் இருப்பிடத்தைக் கூறுங்கால்,
"கறைபெற்ற மிடற்றண்ணல் கள்ளின் மேயான்
நிறைபெற்ற அடியார்தம் நெஞ்சுளானே" எனக் கூறியருளு கின்றனர். இன்னும் அவர்மக்களை நோக்கி "எம்மீசர், தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள் தூநெறி எளிதாமே" எனவும் அவ்வாண்டவனை வணங்குவார்க்கு யாதொரு இன்னலும் வாரா என்பார் "கோட்டூர் கொழுந்தே யென எழுவாரை என்று மேத்துவார்க் கிடரிலை கேடிலை யேதமந் தடையாவே" எனவும் அவ்வடியார்களை இகழ்தலாகாது என்பார்.

"பெர்டியார் மெய்பூசினும் புறவின் நறவம்
குடியாவூர் திரியினும் கூப்பிடினும்
கடியார் பூம்பொழிற் சோலைக்கள்ளின் மேயான்
அடியார் பண் பிகழ்வார்கள் ஆதர்களே" எனவும் கூறியருளுகின்றூர். இவைபோன்று அவர் தேவாரத்துள் காணப்படுவனபல. இவற்றால் அவர் அடியார்களிடத்து வைத்திருந்த அளவற்ற நன்மதிப்பு வெள்ளிடை விலங்கலெனத் தெள்ளிதின் விளங்குதல் காண்க.

இனி, "பிள்ளையாரால் இந்துணைச் சிறப்பினராகக் கருதப்பட்ட திருநாவுக்கரையர் அவருக்கு மிகுந்த வணக்கஞ் செலுத்துதலும் அப்பிள்ளையார் இவருக்கு அத்துணை செலுத்தாமையும் பெரிய புராணத்துக் காண்கின்றோமே" எனின் கூறுதும் பிள்ளையார் ஆண்டவன் திருவருளைப் பெற்றபின்னர், தம்மை இறைவனது திருக்குமாரராகவே கருதினரேயன்றி, சிவபாத இருதயர் திருமகனுரகக்கருதவில்லை யென்பது பெரியபுராணத்தை ஊன்றிப்படித்தார்க்கு நன்கு புலனுகும். இவ்வுண்மையை, "அலைமலி தண்

புனல் சூழ்ந்தழகார் புகலின் நகர்பேணும்'' **தலைமகனுகி** நின்ற தமிழ் ஞானசம்பந்தன்'' என அவரே கூறுவதனுலும் ஆண்டவனைப் பலவிடங்களில் அப்பர் என்று விளிப்பதனுலும் நன்கு உணரலாகும். அங்ஙனம் அவர் தம்மை நினைந்திருந்ததனுலன்றே நாவுக்கரையரை நோக்கி ''அப்பர் உங்கள் தம்பிரானுரை நீர் பாடீர்'' என்றும் திருநீலகண்டயாழ்ப்பாணரை நோக்கி, ''ஏயுமிசை யாழுங்கள் இறைவர்க்கிங்கியற்றும்'' எனவும் அருளிச் செய்தனர் என்க. என்னை? ஓர் பெருமனையின் கண் உள்ள செல்வப்புதல்வன் ஒருவன் தனது தந்தையாரைத் தன் கீழுள்ள ஏனையோரிடமும் குறிக்குங்கால் ''உங்கள் தலைவர் இவ்வாறு கூறினுர்'' என்று கூறுவானேயன்றி ''என் தந்தையார் இவ்வாறு செப்பினுர்'' எனக்கூறுதல் உலகியல் வழக்கு அன்று ஆதலால் என்க. பிள்ளையாரைச் சிவகுமாரராகவே அவரது தாய்தந்தையர்களும் கருதியதனுற்றுன் அவர்கள் தமது புதல்வனுரை வணங்கிய செய்தி பெரிய புராணத்துப் பலவிடங்களிலும் காணப்படுகின்றது.

''*தாதையரும் அங்குடன் பணிந்து அணைந்திட*'' எனவும்

''*அங்கணைந்தரு மறைக்குலத்தாயர் வந்தடிபணிந்திடத்தாமும்*
*தங்க நீள்பெருந்தோணியிற்றுயர் தாள் மனங்கொளத் தொழுவாராய்*
*தங்குகாதலின் அங்கமர்ந்தருளுநாள்*'' எனவும் வரும் பெரிய புராணத்து அடிகள் இங்கு நோக்கத்தக்கன. தமது தாயார்வந்து தம்மை வணங்க, தாம் தோணியப்பரது இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமயம்மையை வணங்கினுர் எனவும் ஈண்டு பெறப்படுதல் காண்க. எனவே அப்பெருமை யொன்றினுற்றுன் ஆண்டஅரசு அவரது திருவடிக்கீழ் வணங்கினுரேயன்றி மரபின் உயர்வுபற்றி அவ்வாறு வணங்கினுரெனக் கொள்ளும் திரிபுணர்ச்சியை விடக்கடவர். ''ஆயின் பிள்ளையார் ஏன் அங்ஙனம் வணங்கவில்லையெனின் தம்மை நாவுக்கரசர் சிவகுமாரராகவேயெண்ணி வணங்குகின்றமையை அறிந்தவராதலின் தாமும் அவ்வாறு செயின் அவர் மிகவும் துன்புறுவர் என்று நோக்கி என்க.

## 6. இவ்விருவரும் பாடிய தேவாரத் தொகை

திருஞான சம்பந்தர் பாடியருளியது (16000) பதினுறுயிரம் பதிகம் அல்லது பனுவல் என்பது ''நகரங்கெடப்பண்டு

திண்டேர் மிசைநின்றுநான்மறைகள், பகரங்கழலவனைப்பதினாரு யிரம் பதிகம், மகரங்கிளர் கடல் வையந்துகர் கெடவாய்மொழிந்த நிகரங்கிலி கலிக்காழிப் பிரானென்பார் நீணிலத்தே'' எனவும் ''துன்றிய, பன்னு தமிழ் பதினாருயிரம் நற்பனுவல், மன்னுபுவி யவர்க்கு வாய்ப்பவும்'' எனவும் கூறிய நம்பியாண்டார் நம்பிகள் கூறிய திருவாக்கால் உணர்க. இனி, திருநாவுக்கரசர் பாடியது (4900) நாலாயிரத்துத் தொள்ளாயிரம் பனுவல் அல்லது பதிகம் என்பது ''இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல் ஈன்றவன் திரு நாவினுக்கரையன்'' என்னும் ஆளுடைய நம்பிகளின் திருவாக் காலும், ''பதிகமேழ் ஏழுநூறு பகரமா கவியோகி'' என்னும் நம்பியாண்டார் நம்பி திருவாக்காலும் உணர்க. ''திருமுறை கண்ட புராணத்தில் (49000) நாற்பத்தொன் பதினாயிரம் பதிகம் திருநாவுக்கரசர் இயற்றினாரெனக் காண்கின்றோமே எனின், அஃது ஆராய்ச்சிக்குப் பொருந்துவதொன்றன்று என்று விடுக்க. மேலே பனுவல் என்றதும் பதிகம் என்றதும் ஒருபாட்டையே குறிக் கும் என்று கொள்ளுவதேச் சாலச்சிறப்புடையதாகும். அப்பதிகத் தொகைகளுள் அழிந்தனபோக இஞ்ஞான்று எஞ்சியிருப்பன திருஞான சம்பந்தர் திருப்பதிகங்கள் (383) முன்னூற்று எண்பத்து மூன்றும் (இற்றை ஞான்றுகல் வெட்டினின்று எடுக் கப்பட்ட திருவிடைவாய்ப் பதிகம் நீங்கலாக) திருநாவுக்கரசர் திருப்பதிகங்கள் (312) முன்னூற்றுப் பன்னிரண்டுமாகும். ஈண் டுப்பதிகம் என்று குறிப்பது பத்து அல்லது பதினொரு பாக்களின் தொகுதியேயாகும்.

## 7. இவ்விருவரின் வயது

*''அப்பருக்கு எண்பத் தொன்றருள் வாதவூரருக்குச்*
*செப்பிய நாலெட்டினிற் றெய்வீகம்—இப்புவியிற்*
*சுந்தரருக்கு மூவாறுதொன் ஞானசம்பந்தர்க்*
*கந்தம் பதினாறறி''* என்னும் இவ்வெண்பா பிற்காலத்து ஒருவ

ரால் இயற்றப்பட்டதாகும். இவ்வெண்பாவால் அப்பர் எண்பத் தொரு ஆண்டு இந்நில உலகில் வாழ்ந்தனர் என்றும் திருஞான சம்பந்தர் பதினாறு ஆண்டு வாழ்ந்தனர் என்றும் அறியக்கிடக் கின்றது. ஆனால் சுந்தர்மூர்த்திக்கு பதினெட்டு ஆண்டு கூறிய

தில் இருந்து, இவ்வெண்பாவிற் கூறியவைகள் உண்மையாயிருக்குமோ என்னும் ஐயுறவு ஏற்படுதல் அமையும்.

## 8. இவ்விருவரின் சரித்திரப்பகுதி சிலவற்றிற்கு அகச்சான்று இல்லாமை அல்லது கிடையாமைக்குக் காரணம்

சமயக்குரவர்கள் தங்கள் வரலாற்றினுண்மையைப் பிற்காலத்தவர் செவ்வனே தெரிந்து தங்களைப்போற்ற வேண்டும் என்னும் எண்ணத்துடன் அகச்சான்று கூறினாரில்லை. அங்ஙனங் கருதிக்கூறி யிருப்பாராயின் முறைப்பட அஃதிருப்பதுடன் எல்லாவற்றுச்கும் இருக்கும். அவர்கள் அந்நோக்கத்துடன் கூறியிருப்பின் போற்றுதற்கு உரியவருமாகார் என்னை? ஆண்டுத்தற்போதமிருந்திருத்தலினென்க. சிற்சில கூறியிருப்பதும் ஆண்டவன் தம்பொருட்டு எளிவந்து காட்சியளித்துக் காட்டியபேரருளை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் ஆற்றாமல் கூறியதெனவுணர்க. எனவே இஃது இல்லாமைக்குக் காரணமாயிற்று.

இனி இவர்கள்பாடிய பதிகத்தொகை திருமுறைகண்ட புராணத்துட் கூறப்பட்டபடி ஒப்புக்கொள்ளுதல் ஆராய்ச்சியாளர்க்கு இயலாததொன்றாயினும், இது போழ்து வெளிவந்திருப்பதினும் அதிகம் இருந்திருக்க வேண்டுமென்பது ஒருதலை. பல பதிகங்களிற் பாட்டுக் குறைந்தும், அடிமுதலியவை குறைந்துமிருப்பதே இதற்குப் பேதிய சான்றாகும். எனவே, சிலபதிகங்கள் அழிந்திருப்பது உண்மையாதலின் அது கிடையாமைக்குக் காரணமாயிற்று.

## 9. கல்வெட்டுக்கள்

சரித்திரத்திற்கு இன்றியமையாததான கல் வெட்டுக்கள் பல-இவ்விருபெருமக்களையும் பற்றி நமது தமிழ் நாட்டிற் காணப்படுகின்றன. (1) அவ்விருவரின் பெயர்கள். (2) அவர்களின் ஆலயங்களும் அவைகளுக்கு ஏற்பட்டதானங்களும், அவைகளின் காலங்களும். (3) அவர்களின் மடங்கள். (4) அவர்களின் பெயர்களை மக்கள் இட்டுக் கொள்வது. (5) அவர்களின்

பதிகங்களை ஓதுவித்தல். இவை ஒவ்வொன்றிற்கும் கல்வெட்டுக்கள் பல இருப்பினும் சிற்சிலவே ஈண்டு காட்டப்படும்.

### திருஞான சம்பந்தர் கல் வெட்டு

**பெயர் :—** (1) ஆளுடையபிள்ளையார்: தென்னுற்காடு 821 சித்தலிங்கமடம் வியாக்கிரபாதேசுரசுவாமி—சிலாசாசன இலக்கம் 418/09

(2) தஞ்சை—336, 316, 1156—திருவிடைமருதூர், சீர்காழி, சி. இ. 123/96.

திருஞான சம்பந்தர் (1) தென் ஆற்காடு. 61 சிதம்பரம். சி. இ. 269/13

(2) ராமநாதபுரம் 267 திருப்பத்தூர். சி. இ. 129/08 இன்னும் பிள்ளையாரின் பெயர்கள் பலவகையாக வழங்கி வந்தன. என்பதைக்கல் வெட்டுக்களால் அறியலாம்.

### திருநாவுக்கரசர் கல் வெட்டு

திருநாவுடைய பிள்ளையார் :— தஞ்சைஜில்லா, சூலமங்கலம் சி. இ. 294/1911

திருநாவுக்கரசர் :— தஞ்சை, திருவீழிமிழலை சி. இ. 402/08

எம்பெருமக்கள் :– சேலம்—ஆறகலூர்—418/13

(இப்பெயர் தேவார ஆசிரியர் மூவருக்கும் பொதுவாகக் குறிக்கப்பட்டுள்ளது)

திருஞான சம்பந்தரைப்போலவே நாவுக்கரையருக்கும் பல பெயர்கள் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றன. ஆனல் அவர் பிள்ளைத்திருநாமமாகிய மருணீக்கியார் என்பதும் இற்றைஞான்று வழங்கும் அப்பர் என்பதும் காணப்படவில்லை. எனவே இப்பெயரிரண்டும் சோழர்காலத்தில் வழங்கவில்லை எனப்புலப்படுகின்றது

## 2. அவர்கள் ஆலயங்கள் அவற்றிற்கு ஏற்பட்ட தானங்கள், அவைகளின் காலங்கள் :—

***திருஞான சம்பந்தர்*** (1) கி. பி. 1020 இராஜேந்திரசோழன் 7வது ஆண்டு தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலுக்கா, திருவிடைவாயில் ஆலயத்து முன்வாசற் சுவற்றில் விடையபுரம் என்ற விருதராஜ பயங்கரபுரத்து வியாபாரிகள் சொக்கக்கூத்தர்,

நாச்சியார், திருஞானம் பெற்றநம்பி இவர்கள் விக்கிரகங்களை தாபித்துக்கோயில் பொக்கிஷத்திலிருந்து அவைகளுக்குப் பூசை ஏற்படுத்து வதைப்பற்றிக் குறிக்கின்றது. இவ்வாலயத்தில் தான் சம்பந்தருடைய விடைவாயில் பதிகமும் செதுக்கப் பெற்றிருக்கிறது.

(2) கி. பி. 1133 ஆலம் பாக்கம் (திருச்சிஜில்லா) கைலாசநாதர் கோயில் கிழக்குச்சுவர் விக்கிரமசோழதேவன் 15வது ஆண்டு திருபுவன முழுதாளுடையாள் வளநாட்டுப் பொய்கை நாட்டுப்பிரமதேயமான மதுராந்தக சதுர்வேதி மங்களத்து சபையோர் ஆளுடைய பிள்ளையாருக்கு ஒரு நிலம் தானம் செய்தார்கள். அந்ததானம் செய்த காலத்தில் அச்சபையோர் மதுராந்தகதேவர் மண்டபத்தில் சபைகூடி அவ்விதம்தானம் செய்தார்கள், மேற்கூறிய நாட்டின் பெயர் விக்கிரமசோழ தேவனுடைய இரண்டாம் அரசியான தியாகபாதகை என்ற திரிபுவன முழுதாளுடையாள் என்ற அரசியின் பெயரால் இடப்பட்டதென்று தெரிகிறது.

### திருநாவுக்கரசர்

(1) 1158 மார்ச்சு மீ 26தீ புதன்கிழமை இராஜராஜதேவர் II 12வதுஆண்டு தஞ்சைஜில்லா திருவலஞ்சுழி கபர்தீசுவரர் ஆலயம் திருநாவுக்கரசுதேவர், திருவாதவூர் அடிகள் திருகண்ணப்பதேவர் இப்பிரதிமைகளுக்குப் பூதானம் செய்தது. சி. இ. 528/02.

(2) 1178—1216. குலோத்துங்கசோழன்III ஆண்டு அழிந்து போயிற்று. செங்கல்பட்டு திருக்கச்சூர் ஆலயத்து அஞ்சனாக்ஷியம்மன் ஆலயம். திருநாவுக்கரசுதேவர் பிரதிமை தாபிதத்தைக் குறிக்கின்றது. சி. இ. 316/1909.

## 3. நாயன்மார் மடங்கள், அவைகள் ஏற்பட்டகாலம், தானங்கள்

### திருஞானசம்பந்தர்

(1) தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலுக்கா திருவீழிமிழலை வீழிநாதசுவாமி ஆலயத்து மேல்சுவர். இராஜேந்திரசோழதேவன் 23ம் ஆண்டு—1036 கி. பி.

குலோத்துங்க சோழவளநாட்டு திருநாரையூர் நாட்டு இராஜராஜபுரத்தில் திருச்சத்தி முற்றமுடைய நாயனுர், திருக்காம கோட்டமுடைய பெரிய நாச்சியார் சந்நிதிகளுக்கு கிழக்கிலுள்ள திருஞானசம்பந்தர் திருமடத்து திருச்சத்திமுற்றத்து முதலியாரின் சீடரான ஞானசிவம் என்பவர், திருவீழிமிழலை அழகிய சிற்றம்பல முடையார் மடத்தில் ஒரு மடத்திற்குப் பூதானம் செய்தது. இதனுல் திருச்சத்தி முற்றம் என்ற பழைய ஊரில் ஒரு மடம் நமது நாயனுர் பேரில் இருந்தது எனவிளங்கும்
(சி. இ. 392/08)

(2) திருச்சி ஜில்லா, காவிரிக்கு வடபால் திருப்பராய்த்துறை ஆதிமூல நாயனுர் ஆலயத்தில் நித்தியகல்யாணி சந்நிதியில் கீழச்சுவர் இராஜராஜதேவன் 21-ம் ஆண்டு —1167. கி. பி. உத்தமச்சீலி சதுர்வேலி மங்கலத்து, கருமான்கரைஎன்ற பரகேசரி மங்கலத்தில் உள்ள ஒரு நிலத்தைத் திருவானைக்காவில் உள்ள திருஞான சம்பந்தன் திருமடத்தில் உள்ள மாகேசுவர்களுக்கு உணவளிக்கப் பூதானம் செய்தல். இதனுல் திருவானைக்காவில் திருஞான சம்பந்தர் மடம் ஒன்று இருந்தது எனப் பெற்ருேம்.

## திருநாவுக்கரசர்

(1) தென் ஆற்காடு, கூடலூர் தாலுக்கா திரு அதிகை வீரட்டானேசுரர் ஆலயத்து முதல் பிரகாரத்து தென்சுவர் கி. பி. 1114 இராஜகேசரி வர்மன், திரிபுவனச்சக்கிரவர்த்தி, குலோத்துங்கச்சோழன் I–44ம் ஆண்டு வாகீசர் மடத்திற்கு நிலதானம் செய்தது. (தென் ஆற்காடு. (311)

(2) செங்கல்பட்டு ஜில்லா, சைதாப்பேட்டை தாலுக்கா வேளச்சேரி, தண்டீசுரசுவாமி ஆலயத்து கர்ப்பக்கிரகத்தின் வடசுவர் கி. பி. 1203-திரிபுவனச்சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவன் III ஜயங்கொண்ட சோழமண்டலத்து உட்பிரிவான குலோத்துங்கச் சோழவளநாட்டுத் திருவான்மியூரில் திருநாவுக்கரசு மடத்திற்குச் சேதிராயதேவனுல் பூதானம் செய்தது. அவ்விதம்செய்த நிலமானது வேளச்சேரி என்னும் ஜினசிந்தாமணிச் சதுர்வேதி மங்கலம் என்ற ஊரில் இருந்ததாகக் கண்டிருக்கிறது.
(செங்கற்பட்டு 1131)

### திருநாவுக்கரசர்.

1. ***திருநாவுக்கரையன்*** :—சோழன் இராஜகேசரிவர்மன் 15-வது ஆண்டு இவ்வரசன் சிறப்புப் பெயரும் தேதியும் தெரியவில்லை. 12,13-ம் நூற்றுண்டாக இருக்கும். தஞ்சைஜில்லா கும்பகோணம் தாலுக்கா திருமெய்ஞானம் ஞானபரமேசுவரராலயத்து வடசுவர் திருமயானத்துப் பரமேசுவரர் ஆலயத்தில் 12 தீபங்களுக்காக 12 ஈயக்காசுகளை நல்லூர் வியாபாரியான நாராயணன் சோழடிகள் என்ற திருநாவுக்கரையன் தானம் செய்தது. (தஞ்சை 128)

2. ***வாகீசுரதேவர்*** :—13-ம் நூற்றுண்டு இராஜநாராயண சம்புராயன் 8-ம் ஆண்டு. செங்கல்பட்டு ஜில்லா புழல்திருமூலஸ்தான ஈசுவரமுடையார். பெரும்பற்றப்புலியூரில் வசிக்கும் செல்லத்திருவாரூரின் கீழைமட சந்தானத்திற்குச் சேர்ந்த வாகீசுரதேவர்க்குப் புழல் கிராமத்துக் குடிதானம் செய்தது கூறுகிறது.

(செங்கற்பட்டு. சி. இ, 483/1920)

## 4. அவர்கள் பெயர்களை மக்கள் இட்டுக் கொள்வது.

### திருஞானசம்பந்தர்.

1. ***சவனர் ஆளுடையபிள்ளை*** :—கி. பி.1237. இராஜராஜதேவIII 21-ம் ஆண்டு. நெல்லூர் ஜில்லா வெங்கடகிரி தாக்லுகா சாமலபல்லி கிராமம், விஷ்ணுகோயில் சாசனம்.

நாகப்புடோல் என்ற ஸ்ரீஇராஜமல்ல சதுர்வேதிமங்கலத்து யாதவப்பெருமாளுக்கு மூன்று அந்தி விளக்கு வைக்க ஒரு மாடையைசவனர் ஆளுடையபிள்ளை என்பவர் தானம் செய்தது.

(நெல்லூர். 801 / சி. இ.)

2. ***திருஞான சம்பந்த நம்பி*** :—13—4—1253, ஹொய்சலவீரசோமேஸ்வரன், 21-ம் ஆண்டு, திருச்சி ஜில்லா, இரத்னகிரி மலைமீதுள்ள ஹரான சேகரி ஆலயத்து வடசுவர்.

சிவபாதசேகர புரத்து வியாபாரி திருஞானசம்பந்த நம்பி என்பவன் திருக்காமகோட்டம் உடைய பெரிய நாச்சியாருக்கு பூசைக்காக 20,000 காசு தானம் செய்தது. (சி. இ. 176/1914)

## அவர்களின் பதிகங்களை ஓதுவித்தல்.

### திருஞானசம்பந்தர்.

1. கி. பி. 1225 மாறவர்மன் சுந்தரபாண்டியன் I,9 வது ஆண்டு திருநெல்வேலி கல்லிடைக்குறிச்சி நாகேசுவர முடையார் ஆலயம் திருமுறை ஓதுதற்காகத் தானம் செய்தது. (சி. இ. 92/07)

2. 22—7—1243. இராஜாாஜ III–28-ம் ஆண்டு தஞ்சை திருக் காறவாசல் (திருக்காறுயில்) அருமொழிதேவ வளநாட்டுப்புலியூர் நாட்டு மூவூர் கிராமத்தார், திருக்காறுயில் ஆலயத்துத் திருக் கைக் கொட்டியில் திருமுறை படிக்கும் ஓதுவார்களுக்கு உணவு அளிக்கப்பூதானம் செய்தது.

### திருநாவுக்கரசர்.

1. ***திருத்தாண்டகம் ஓதுதல்*** –குறுக்கை வீரட்டானேசுரர் ஆல யத்தில் 1207-ம் ஆண்டுக் கல்வெட்டினுல் திருநாவுக்கரசர் திருக்குகை கட்டுவதற்குத் தானம் செய்ததை முன் குறித்துள் ளோம். அங்கே திருத்தாண்டகம் ஓதும் செய்தியை குறித்திருப் பது ஆராயத்தக்கது. பொதுவாகத் திருப்பதிகங்களை (திருப்ப தியம்) ஓதுவதற்குத் தானம் செய்தவிஷயம் சம்பந்தரைப்பற்றிச் சொன்னதிலிருந்து அறிந்து கொள்ளமுடியும். அத்திருப்பதிகங்க ளில் அப்பருடையதும் உண்டு. ஆனல் அவைகளில் ஒரு பிரிவான திருத்தாண்டகங்களைத் தனியாக ஓதுவிக்க ஏற்பாடு செய்தது கவனிக்கத்தக்கது. அப்பர்சுவாமிகளுக்குத் தாண்டக வேந்து என்றபெயர் உண்டன்றே?

எமது பெருமக்களாகிய இவ்விருவரும் தமது ஒழுக்கத் தாலும் அருட்பாவாலும் நமக்குக்காட்டிய செந்நெறியைக் கடைப் பிடித்து ஒழுகி உய்வோமாக.

நலம்.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 14 | சூலாமணி | சூளாமணி |
| 11 | 21 | எழுத்து | எழுந்து |
| 12 | 23 | அடைத்து | அடைந்து |
| 13 | 16 | இயம்யினர் | இயம்பினர் |
| 20 | 27 | உயிற் | உயிர் |
| 43 | 9 | ஏட்டமை | ஏட்டை |
| 43 | 18 | வெப்பெறும் | வெப்பெனும் |
| 46 | 10 | குலச்சிரையார் | குலச்சிறையார் |
| 48 | 12 | மதுரையையடைத்து | மதுரையை யடைந்து |
| 58 | 1 | வெள்னத்தை | வெள்ளத்தை |
| 59 | 7 | வெங்குறு | வெங்குரு |
| 59 | 16 | கலமாகும் | காலமாகும் |
| 60 | 8 | என் தவம் | என்ன தவம் |
| 60 | 29 | சிவத்துவக்குறியாகி | சிவதத்துவக் குறியாகி |
| 64 | 20 | நம்பிண்டார் | நம்பியாண்டார் |
| 72 | 10 | விடத்தீர்த்தது | விடந்தீர்த்தது |
| 72 | 11 | திருமருக மென்னும் | திருமருகலென்னும் |
| 72 | 27 | யலராக்கிளேயே | யலராக்கினையே |
| 73 | 4 | நஞ்சணித்தவன் | நஞ்சணிந்தவன் |
| 74 | 14 | பிறப்பிலதான் | பிறப்பில்தான் |
| 74 | 16 | இன்னும் | இன்றும் |
| 75 | 11 | செய்யனேப் | செய்யெனேப் |
| 75 | 14 | யருளிஞய் | யருளினல் |
| 75 | 15 | லெப்பந் | வெப்பந் |
| 76 | 8 | வெப்புதோய் | வெப்புநோய் |
| 76 | 12 | பேரற்றிப | போற்றிப் |
| 76 | 15 | தீர்ப்பிணியை | தீப்பிணியை |
| 76 | 24 | அழியாமைக்கு | அழியாமைக்கு |
| 77 | 33 | கொன்றுனேக் | கொன்னுனேக் |
| 80 | 2 | பெண்ஞக்கிய | பெண்ணுக்கிய |
| 80 | 18 | கராங்கணே | காரங்கணே |
| 80 | 18 | தீபநல்லூர்ச் | தீபன் நல்லூர்ச் |
| 80 | 20 | போதுவா | போது வந்தா |
| 80 | 26 | குணதான் | குணதரன் |

# பிழை திருத்தம் தொடர்ச்சி

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 81 | 12 | சிறுத்தொண்டரென்றும் | சிறுத்தொண்டரென்னும் |
| 84 | 17 | புறந்தந்து | புரந்தந்து |
| 84 | 23 | சென்றதபின்ன் | சென்றதன்பின் |
| 87 | 10 | வஞ்சகச் செயால் | வஞ்சகச் செயலால் |
| 88 | 6 | சொல்லில் கொண்டு | சொல்லிக்கொண்டு |
| 88 | 10 | கதரிவிக்கும் | தெரிவிக்கும் |
| 88 | 18 | போதியி | போதிய |
| 90 | 7 | ஆநந்தநீர் | ஆனந்த நீர் |
| 93 | 23 | ஆற்றொனா | ஆற்றொணா |
| 97 | 27 | கோள்வியுற்று | கேள்வியுற்று |
| 103 | 28 | திருவாரூறை | திருவாரூரை |
| 104 | 20 | கொழுந்தருள | கெழுந்தருள |
| 105 | 1 | திருவெம்பர் | திருவம்பர் |
| 105 | 31 | திருக்கோவினுட் | திருக்கோவிலினுட் |
| 110 | 25 | வடகைலாசத்தை | வடகைலாயத்தை |
| 111 | 16 | பூநூலையும் | பூணூலையும் |
| 112 | 27 | ஆநந்த | ஆனந்த |
| 112 | 31 | ஆநந்தக் | ஆனந்தக் |
| 113 | 24 | பூந்துருத்தி | பூந்துருத்திக் |
| 114 | 14 | திருப்பாத்தூரைத் | திருப்புத்தூரைத் |
| 114 | 18 | திப்பூவனம் | திருப்பூவணம் |
| 114 | 18 | இராமேச்சரம் | இராமேச்சுரம் |
| 115 | 8 | ஒழுகின்ற | ஒழுகுகின்ற |
| 118 | 10 | பின்நன்றி | பின்னன்றி |
| 119 | 22 | ராவமுதை | வாரமுதை |
| 123 | 23 | சைவஞானெவும் | சைவஞானெனவும் |
| 137 | 20 | பள்ளையார் | பிள்ளையார் |
| 137 | 24 | குமாராக | குமரராக |
| 141 | 3 | இறைந்தவரை | இறந்தவரை |
| 144 | 2 | பிள்ளையாரகவும் | பிள்ளையாராகவும் |
| 147 | 10 | கிவள்ளானை | வெள்ளானை |
| 150 | 2 | வையந்துகர் கெட | வையந்துயர்கெட |
| 153 | 9 | மங்களத்து | மங்கலத்து |
| 153 | 23 | தாபிதத்தைக் | தாபித்ததைக் |
| 154 | 15 | மசேசுவர்களுக்கு | மசேசுவரர்களுக்கு |

— — — —

உ

# தமிழும் தமிழ்ப் பாடலும்.

## திருஞானசம்பந்தர்

பிறவிஎனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் **தமிழ்**.

புனலி லேடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்த னூர்தலை தத்தெனத் தத்துமே
கனலி லேடிடப் பச்சென் றிருக்குமே
கதவு மாமறைக் காட்டி லடைக்குமே
பனையி லாண்பனை பெண்பனை யாகுமே
பழைய வென்புபொற் பாவைய தாகுமே
சினவ ராவிடந் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் **செந்தமிழ்ப் பாடலே**

## திருநாவுக்கரசர்

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியால்
திணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன கல்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர்பி ரான்தன் **அருந்தமிழே**.

தலைகொ ணஞ்சமு தாக விளையுமே
தழலி னீறு தடாகம தாகுமே
கொலைசெய் யானை குனிந்து பணியுமே
கூர ராவிடந் தீரெனத் தீருமே
கலைகொள் வேதவ னப்பதி தன்னுளே
கதவு மீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் போற்றும் **அருந்தமிழ்ப் பாடலே**.